# எத்தனை அரிய வாய்ப்பு!

சமீபத்தில், ஒரு காலை நேர ரயிலில் கும்பகோணம் சென்று கொண்டிருந்தேன். எதிரே அமர்ந்திருந்தவருக்கு சுமார் 60 வயதிருக்கும். தாம் சிதம்பரத்தைச் சேர்ந்தவர் என்றும் அங்கே அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் பி.எஸ்.ஸி. பட்டம் பெற்றதாகவும் பேச்சு வாக்கில் சொன்னார். நான் பத்திரிகைகளில் எழுதுபவன் என்று தெரிந்து கொண்டதும், பல எழுத்தாளர்களின் பெயரை கொஞ்சம் கொஞ்சமாக நினைவு கூர்ந்து பேசினார். அந்தக் காலத்தில் பத்திரிகைகளை ஆர்வத்துடன் படித்தாராம். ''சார், இப்போ குமுதம் பத்திரிகை பார்ப்பதில்லை. ஆனால் அந்தக் காலத்தில் ரொம்ப சுவாரசியமாகப் படித்திருக்கிறேன். அதில் ரா.கி. ரங்கராஜன் எழுதிய கதைகள், தொடர்கதைகள் அத்தனையையும் ஒன்றுவிடாமல் படித்திருக்கிறேன். ஒரு தட்டுத் தடங்கல் இல்லாமல் சும்மா ஓடும், சார். படிக்க எடுத்தா முடிச்சுட்டுத்தான் கீழே வைக்கணும். அப்படி எழுதிட்டிருந்தார்!'' என்றதும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

ஒரு சாதாரண வாசகர், ரா.கி. ரங்கராஜன் எழுத்தை எப்படி ரசித்துப் படித்திருக்கிறார்! அதை எத்தனை மகிழ்ச்சியுடன் நம்மிடம் தெரிவிக்கிறார்! அவருடைய ரசனை மீது எனக்கு அபார நம்பிக்கை பிறந்தது. 'படகு வீடு' முதலான அவருடைய நாவல்களை அசை போட்டவர், ''அண்ணாதுரை கடைசியாப் படிச்சது ஆங்கில நாவல்தான், சார். 'டாக்டர், எனக்கு ஆபரேஷன் பண்றதா இருந்தா நாளைக்குப் பண்ணுங்க' ன்னு கேட்டுக்கிட்டாராம். 'ஏன்?'னு கேட்டிருக்கார் டாக்டர். 'இன்னிக்கு ராத்திரிக்குள்ள நான் படிச்சிட்டிருக்கிற நாவலை முடிச்சிடுவேன், அதனால்தான்!'னு சொன்னாராம் அண்ணா'' என்றார் ரயில் நண்பர். மேரி கொரலியின் அந்த நாவலை ரா.கி.ரங்கராஜன் மொழிபெயர்த்து, குமுதத்தில் அது தொடராக வெளியாயிற்று. ரா.கி.ரங்கராஜனின் மொழி பெயர்ப்புத் திறன் அப்போது அத்தனை வாசகர்களுக்கும் வியப்பை அளித்தது.

சரளம் என்றால் அப்படி ஒரு சரளம். பெயர்களை மட்டும் மாற்றிவிட்டால் மொழி பெயர்ப்பு என்பது துளியும் தெரியாது. அப்படி ஒரு லாகவம்.

அந்தக் காலத்தில் சஃபயர் தியேட்டரில் எக்ஸார்ஸிஸ்ட் திரைப்படம் பார்த்தவர்கள், குட்டிப்பெண் ரெஜினாவை பிசாசு படுத்தும் பாட்டை பயத்துடன் ரசித்தார்கள். கிறிஸ்ட்டி அவளை வைத்துக் கொண்டு பட்ட அவதியை ஐயோ பாவம் என்று நெகிழ்ந்து போய்ப் பார்த்தார்கள்.

இதோ இருக்கிறது, ரா.கி.ரங்கராஜன் மொழி பெயர்ப்பில் 'எக்ஸார்ஸிஸ்ட்'. நாவலின் அச்சமூட்டும் கதையம்சத்தை ரசிப்பதா, பாத்திரப்படைப்பை ரசிப்பதா இல்லை, ரா.கி.ர.வின் மொழி பெயர்ப்புத் திறனை ரசிப்பதா என்ற குழப்பம் உங்களுக்கு நிச்சயம் உண்டாகும். எதை எழுதினாலும், பெரும்பாலானவர்கள் படித்து ரசிக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் தன் பேனாவைப் பயன்படுத்திய ரா.கி.ரங்கராஜன் என்ற படைப்பாளியை அப்புறம் நீங்கள் மறக்கவே மாட்டீர்கள்!

இன்னொரு விஷயத்தையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும். வங்காள இலக்கியத்தைத் தமிழில் முதன் முதலில் கொண்டுவந்த புத்தக வெளியீட்டாளர் அல்லயன்ஸ் குப்புசாமி அய்யர் அவர்கள்தான் என்று நினைக்கிறேன். அதே போல, காண்டேகரின் மராத்தி இலக்கியப் படைப்புகளையும் வெளிக்கொண்டு வந்த பெருமை அல்லயன்ஸுக்கு உண்டு. ஆனால், ஆங்கில நாவல்களையும் தமிழ் வாசகர்கள் விரும்பி வரவேற்பார்கள் என்ற உண்மையை ஊகித்தறிந்து, சரியான நாவலை, தகுதியான எழுத்தாளரின் மொழியாக்கத்தின் மூலம் அல்லயன்ஸ் ஸ்ரீனிவாசன் வெளியிட முன்வந்திருப்பது வரவேற்க வேண்டிய முயற்சி.

வில்லியம் பீட்டர் ப்ளாட்டி 1971-ல் எழுதி, அவரே 1973-ல் அதைத் திகலூட்டும் திரைப்படமாகத் தயாரித்து வெளியானதுதான் 'எக்ஸார்ஸிஸ்ட்' திரைப்படம். சென்னை சஃபயர் தியேட்டரில் அது வெளியானபோது கண்டு ரசித்தவர்கள் ஏராளம். ஆனால் ரா.கி.ரங்கராஜன் அவர்களின் மொழிபெயர்ப்பு குமுதத்தில் வெளியாகத் தொடங்கியபோது, அதைப்படித்துவிட்டு இரண்டாம் முறையும் அந்தப் படத்தைப் புரிந்துகொண்டு பார்த்த ரசிகர்கள் ஆயிரக் கணக்கானவர்கள் என்பதை இங்கே குறிப்பிட்டாக வேண்டும். ஓர் எழுத்தாளர் எத்தனை தூரம் சாதாரண வாசகரைக்கூட ஈர்க்க முடியும் என்பது ஒருபுறம் இருக்கட்டும். ஒரு திரைப்படம் வெற்றிகரமாக மாதக் கணக்கில் ஓட, ரா.கி. ரங்கராஜன் அவர்களின் மொழி பெயர்ப்புத் திறமை எந்த அளவுக்கு உதவியிருக்கிறது என்றும் நாம் நினைத்துப் பெருமைப் படலாம்.

அல்லயன்ஸ் அதிபர் ஸ்ரீனிவாசனுக்குப் புதுமை எங்கே இருந்தாலும் தேடிப் பிடித்து முதலில் வெளியிட வேண்டும் என்ற ஆர்வம் உண்டு. அது அவர் பாட்டனாரிடமிருந்து தந்தை வழியாக வந்த உத்வேகம் என்று நிச்சயம் சொல்லிவிடலாம். இல்லாவிட்டால் தமிழில் 'எக்ஸார்ஸிஸ்ட்' இன்று உங்கள் கைகளுக்குக் கிடைத்திருக்க முடியுமா? பாராட்டுகள், ஸ்ரீனிவாசன்.

சாருகேசி

# எக்ஸார்ஸிஸ்ட்

ஓசைப்படாமல் நுழைந்தது அந்தப் பயங்கரம்.

பதினொரு வயது ரெஜினாவின் அறையில் சத்தங்கள். என்னவோ மாதிரியான நாற்றம். நகர்த்தி வைக்கப்பட்ட நாற்காலிகள். சில்லென்ற குளிர்ச்சி - இதற்கெல்லாம் சின்னச் சின்னச் சமாதானங்கள் செய்து கொண்டாள் நடிகை கிறிஸ்டி - ரெஜினாவின் அம்மா.

ஆனால் ரெஜினாவிடமே மாறுதல்கள் தோன்றத் தொடங்கின. மெல்ல மெல்ல ஏற்பட்ட மாறுதல்கள் - கிறிஸ்டியே கூட முதலில் அவ்வளவாகக் கவனிக்கவில்லை.

கவனித்ததும் டாக்டர்களிடம் அழைத்துப் போனாள். வைத்தியப் பரிசோதனைகள் நடந்தன.

ஆனால் ரெஜினாவின் நோய்க்குக் காரணம் தெரியவில்லை.

கடுமையாக, பயப்படும்படியாக, நோய் வளர்ந்தது.

முற்றிலும் புதிய ஏதோவொன்று குழந்தையை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது.

கிறிஸ்டி தவித்தாள். திணறினாள்.

டாக்டர்களை விட்டு விட்டு, கராஸ் என்ற ஜெசூயிட் பாதிரியாரின் உதவி கோரி ஓடினாள்.

அவருக்குச் சாத்தானைப் பற்றியும் தெரியும். மனத் தத்துவமும் பயின்றவர்.

அவரால் ஓட்ட முடியுமா - குழந்தை ரெஜினாவைப் பிடித்திருக்கும் பேயை?

---

# முன்னுரை

முதியவரான அந்தப் பாதிரியாரின் கையிலிருந்த சிறிய உருவத்தைப் பார்க்கையில் அராபிய அதிகாரிக்குப் பிடரியில் சிலிர்த்தது. பச்சைக் கல்லில் செய்யப்பட்ட அதை முற்காலத்தில் ஒரு சிறிய துளை போட்டுக் காற்றுக் கறுப்பு அடிக்காதபடி தாயத்துப் போல் அணிந்து வந்திருக்கிறார்கள். புதை பொருள் ஆராய்ச்சியின் போது பாதிரியாருக்கு அது கிடைத்திருந்தது. திரும்பப் பையில் போட்டுக்கொண்டார்.

வட ஈராக்கில் பாதிரியார் மேற் கொண்ட புதைபொருள் ஆராய்ச்சி முற்றுப்பெற்றுவிட்டது. அராபிய அதிகாரியிடம் விடை பெற்றுக் கொண்டு தாயகத்துக்கு - அமெரிக்காவுக்கு - திரும்புமுன் ஆராய்ச்சித் தளத்தைக் கடைசி முறையாகப் பார்த்துவர அவர் புறப்பட்டார்.

நகரத்தின் மண்ணை உதறிவிட்டு, டைக்ரிஸ் நதியைத் தாண்டி, ஊரின் வெளிப்புறத்தில் நடந்தார். புராதன இடி பாடுகளை அடைந்ததும் அவருடைய நடை மெதுவாயிற்று. ஏனெனில் ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும் போதும் அந்த உருவமற்ற அமானுஷ்யமான உணர்வு மேலும் மேலும் பயங்கரமான வடிவமெடுக்கலாயிற்று.

இருதய நோயாளியான அந்தப் பாதிரியார் இடிபாடுகளைத் துருவி நோக்கினார். அஷுர்பானிபால் அரண் மனையினருகே சற்றுத் தயங்கினார். பிறகு கல்லில் செய்த ஒரு சிலையை ஓரக்கண்ணால் கவனித்தார். உட்கார்ந்த தோற்றம். சீரில்லாத இறக்கைகள். கூரிய நகம் கொண்ட கால்கள். குரூரமான சிரிப்பினால் இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்கு இழுத்துக் கொண்டுள்ள வாய்.

பிசாசு - என்ற துர்த் தேவதையின் சிலை.

திடீரென்று அவரிடம் ஒரு தளர்ச்சி ஏற்பட்டது.

அவருக்குத் தெரிந்துவிட்டது. புழுதியை வெறித்து நோக்கினார். நிழல் கள் விரைந்தன. நகரத்தின் வெளிப்புற ஓரங்களில் மந்தை மந்தையாகத் திரிந்து கொண்டிருக்கும் காட்டு நாய்களின் குரைப்பு இலேசாக அவருக்குக் கேட்டது. பூமியின் விளிம்புக்குப் பின்னே சூரியனின் வளையம் விழத் தொடங்கிற்று. நடுக்கும் காற்றொன்று எழும்பி வரவே, அவர் தன் சட்டையின் கைகளைப் பிரித்து விட்டுக் கொண்டு பொத்தான்களை மாட்டிக் கொண்டார்.

ரயிலைப் பிடிப்பதற்காக நகரை நோக்கி அவர் விரைந்தார். ஒரு புராதனமான எதிரியை விரைவில் சந்திக்கப் போகிறோம் என்ற நிச்சயமான எண்ணம் அவருக்கு உதித்தது.

# துவக்கம்

## 1

படீரென்று வெடித்து அடங்கும் சூரியனின் கிரணங்கள் பார்வையில்லாதவனின் கண்களில் மங்கலாய்ப் படிவதுபோல, அந்தப் பயங்கரத்தின் ஆரம்பத்தை அனேகமாய் யாருமே கவனிக்கவில்லை.

அமெரிக்கா. வாஷிங்க்டன் நகரத்தில் ஜார்ஜ்டவுன் பகுதி.

ஏப்ரல் முதல் தேதி. நள்ளிரவு நேரம். அந்த வீடு நிசப்தமாயிருந்தது. நடிகை கிறிஸ்டி படுக்கையில் உட்கார்ந்து கொண்டு, மறுநாளைய படப்பிடிப்புக்கான வசனங்களைப் படித்துக் கொண்டிருந்தாள். அவள் பெண் ரெஜினா தன் அறையில் தூங்கிக் கொண்டிருந்தாள். வீட்டு வேலைக்காரன் கார்லும், வேலைக்காரி வில்லியும் சமையலறையை அடுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். மணி, ஏறத்தாழ 12.25. எதுவோ தட்டப்படுகிற மாதிரி ஓசை அவளுக்குக் கேட்டது. ஸ்கிரிப்டிலிருந்து சற்றே பார்வையை அகற்றி, திகைப்புடன் முகம் சுளித்தாள். விசித்திரமான ஓசைகள்; அமுக்கப்பட்ட மாதிரி; ஆழமாக. இறந்துபோன ஒருவன் அன்னியமான ரகசிய மொழியில் தட்டுகிறாற்போல்.

வேடிக்கைதான்.

ஒரு நிமிடம் அவள் காதுகொடுத்துக் கேட்டாள்; பின்னர் அந்த நினைப்பை விரட்டினாள். ஆனால் தட்டல் ஓசை தொடர்ந்து வரவே அவளால் ஸ்கிரிப்டில் மனத்தை ஈடுபடுத்த முடியவில்லை.

மர்மமாக இருக்கிறதே!

ஹாலுக்குச் செல்லும் வழியில் நின்று சுற்றுமுற்றும் நோக்கினாள். சத்தம் ரெஜினாவின் அறையிலிருந்து வருவதாகத் தோன்றியது.

என்னதான் பண்ணுகிறாள் அவள்?

கதவைத் தள்ளிக்கொண்டு அறையினுள்ளே நுழைந்ததும் ஓசைகள் திடுப்பென்று நின்றுவிட்டன.

ரெஜினா - பதினொரு வயதுப் பெண் - அழகான சிறுமி - தூங்கிக் கொண்டிருந்தாள்.

பெரிய கரடிப் பொம்மையை இறுக அணைத்தபடி தூங்கிக்கொண்டிருந்தாள்.

கிறிஸ்டி மெல்ல மகளின் கட்டிலை அணுகினாள். குனிந்து, கிசுகிசுத்த குரலில் கேட்டாள்: ''ரெஜி, விழித்துக் கொண்டிருக்கிறாயா?''

சீரான மூச்சு, ஆழமாக, கனமாக.

அறையைச் சுற்று முற்றும் நோக்கினாள் கிறிஸ்டி. ஹாலிலிருந்து வந்த மெல்லிய விளக்கொளி, ரெஜினா வரைந்த ஓவியங்கள்மீது சிதறலாகவும் மங்கலாயும் விழுந்தது.

ஓகோ, அம்மாகிட்டே ஏப்ரல் ஃபூல் பண்ணுகிறாயா?

அப்படி இருக்காது என்று அவளுக்குத் தெரியும். ரெஜினாவுக்குக் கூச்சமுள்ள, ஒதுங்கி நிற்கும் சுபாவம். இதுபோலெல்லாம் விளையாடமாட்டாள்.

பின்னே யார் இப்படிக் குறும்புத்தனம் செய்கிறார்கள்? அல்லது ஒருவேளை நாமாகத்தான் கற்பனை செய்து கொண்டோமோ?

சே, சே. நன்றாய்க் காதில் விழுந்ததே?

சட்டென அவள் பார்வை மேலே தாவியது. ஆ! அங்கே மெல்லிய பிறாண்டல் ஓசைகள்.

பரண் அறையில் எலிகள் இருக்கின்றன. நல்ல கூத்து! எலிகள்!

பிறகுதான் அந்தக் குளிரைக் கவனித்தாள். அந்த அறை ஐஸ் கட்டி மாதிரி இருந்தது.

ஜன்னலுக்குப் போனாள். பரிசோதித்தாள். நன்றாகச் சாத்தியிருந்தது. வெப்பம் தரும் ரேடியேட்டரைத் தொட்டுப் பார்த்தாள். வேலை செய்து கொண்டிருந்தது. எங்கிருந்து இந்த சில்லிப்பு?

மகளின் கன்னத்தில் முத்தமிட்டுவிட்டுத் தன் அறைக்குத் திரும்பி வசனப் பிரதியை எடுத்து வைத்துக் கொண்டாள்.



# 2

**தூ**க்கம் கண்ணைச் சுழற்றியது. வசனப் பிரதியை வருடியபடி கண்ணை மூடினாள் கிறிஸ்டி.

போன் மணி அடித்தது. மேக்கப் செய்துகொண்டு ஷூட்டிங்குக்கு ரெடியாகும்படி துணை டைரக்டர் சொன்னார். கிறிஸ்டி காப்பியை உறிஞ்சியபடியே சமையலறையில் உட்கார்ந்து கொண்டாள். அவளுடைய

சாப்பாட்டுத் தட்டினருகே ஒரு சிவப்பு ரோஜா சிரித்தது. ரெஜினா கொண்டு வந்து வைத்த பூ. என் செல்லம். எத்தனையோ காலை வேளைகளில் கிறிஸ்டி பார்த்திருக்கிறாள். அம்மா எழுந்திருப்பதற்கு முன்னே எழுந்து வந்து சமையலறையில் ஒரு பூங்கொத்தை வைத்துவிட்டு, தூக்கக் கலக்கத்துடன் தடுமாறியபடியே படுக்கைக்குத் திரும்பிப் போய் விடுவாள் ரெஜினா.

வேலைக்காரன் கார்ல் வந்தான். ''பரணில் எலி இருக்கிறது. பொறி வாங்கி வா,'' என்றாள்.

''நம் வீட்டிலா? எலியா? கிடையாதே? வேறே ஏதாவது இருக்கும்.''

''எலி என்கிறேன். சொன்னதைச் செய்.''

''சரிம்மா.''

இந்தக் கார்ல் விசுவாசமானவன்தான்; கடினமான உழைப்பாளிதான். ஆனாலும் அவனைக் காணும் போதெல்லாம் என்னமோ போலிருக்கிறது. கொஞ்சம் அகங்காரமாக இருக்கிறானே, அதனாலோ?

ஷூட்டிங் முடிந்து சாயந்தரம் வீடு திரும்பினாள். டைரக்டர் பர்க் தயாரிக்கும் படத்தில் கல்லூரி ஆசிரியை வேடம் கிறிஸ்டிக்கு. கிளர்ச்சி செய்யும் மாணவர்களுக்குப் பரிகிற பாத்திரம்.

''எல்லாம் நன்றாய் நடந்ததா?'' என்று ஷெரான் விசாரித்தாள். அவளுக்கு இருபது இருபத்தைந்து வயதிருக்கும். கிறிஸ்டிக்கு செக்ரட்டரி; ரெஜினாவுக்கு ஆசிரியை, முன்பு தனியே ஓட்டல் அறையில் இருந்து வந்தாள். இப்போது கிறிஸ்டியின் வீட்டிலேயே தனியறையில் இருக்கிறாள்.

''ரெஜினா என்ன செய்கிறாள்?'' என்று கிறிஸ்டி கேட்டாள்.

''அவள் ரூமில் இருக்கிறாள்.''

''என்ன செய்கிறாள்.''

''பறவைப் பொம்மை செய்கிறாள் என்று தோன்றியது. உங்களுக்காகத்தான்.''

''அம்மா!'' கதவை மடேலென்று திறந்து கொண்டு இரு கையையும் நீட்டியபடி ஓடிவந்தாள் ரெஜினா. சிவப்பு போனிடெய்ல். மிருதுவான பளபளப்பான, பருக்கள் நிறைந்த முகம்.

''ஏய் கழுதை!'' மகளை இழுத்து அள்ளி அணைத்துக் கொண்டாள் கிறிஸ்டி. குழந்தையின் கன்னத்தில் பளிச் பளிச்சென்று முத்தங்களைப் பதித்தாள். இதயத்தில் சுரந்து பொங்கும் அன்பை அவளால் அடக்க முடியவில்லை. ''இன்னிக்கு என்ன பண்ணினே? ஏதாவது விசேஷம் உண்டா?''

''ஊம்... சும்மா ஏதோ.'' அம்மாவின் முழங்கால்களைப் பற்றிக் கொண்டு முன்னும் பின்னுமாய் மெதுவாக ஆடினாள் ரெஜினா.

''அம்மா, இன்னிக்கு வெளியிலே ஓட்டலில் போய்ச் சாப்பிடலாம்மா.''

குழந்தையின் கைகளைத் தூக்கிப் பிடித்துக் கொண்டாள் கிறிஸ்டி. ஆசையுடன் புன்னகை செய்தாள். கைகளை முத்தமிட்டாள். ''சரி, போகலாம். உன் ரூமுக்குப் போய் டிரெஸ் பண்ணிக்கொண்டு வா.''

''அம்மான்னா அம்மா!'' வெளியே ஓடினாள் ரெஜினா.

''புது டிரெஸ் வாங்கித் தந்திருக்கேனே, அதைப் போட்டுக்கொள்!'' என்று கிறிஸ்டி குரல் கொடுத்தாள்.

கொஞ்ச நேரம் பொறுத்து மாடியிலிருந்து ரெஜினா கூவினாள்: ''அம்மா, அந்தப் புது டிரெஸ்ஸைக் காணோம்.''

''அலமாரியில் இருக்கிறது. சரியாய்ப் பார்.''

''பார்த்துட்டேன்.''

கிறிஸ்டி எழுந்துகொண்டாள்: ரெஜினாவின் மாடியறைக்குப் போனபோது, அவள் அறை நடுவே நின்று கொண்டு கூரையையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

''என்ன பண்ணிக் கொண்டிருக்கிறே?'' டிரெஸ்ஸைத் தேடிக்கொண்டே கிறிஸ்டி கேட்டாள். வெளிர் நீலக் காட்டன் டிரெஸ். வாங்கி ஒரு வாரம்தான் ஆகிறது. இங்கே அலமாரியில் மாட்டி வைத்தது நன்றாய் நினைவிருக்கிறது.

''என்னவோ வேடிக்கையான சத்தங்கள் வருது,'' என்றாள் ரெஜினா.

அவளுக்கு எலியென்றால் ரொம்பப் பயமென்று கிறிஸ்டிக்குத் தெரியும். ''அது ஒண்ணுமில்லை... அணில்...'' என்றாள்.

டிரெஸ் கிடைக்கவில்லை.

''நான் சொன்னேனேம்மா? இங்கே இல்லை,'' என்றாள் ரெஜினா.

ஓட்டலில் ரெஜினா சாப்பிட்டு முடித்தாள்.

''டின்னர் ரொம்ப ஜோர் அம்மா.''

அவளை நோக்கித் திரும்பினாள் கிறிஸ்டி. பல முறை நேர்ந்திருப்பதுபோல் இப்போதும் அவள் மூச்சுக்காற்று

கிறிஸ்டியின் மீது பட்டது. விவாகரத்து செய்து கொண்டு பிரிந்துவிட்ட கணவன் ஹோவார்டின் சாயலை ரெஜினாவின் முகத்தில் கண்டாள். இதயம் வலித்தது. விளக்கின் வெளிச்சம் இந்தக் கோணத்தில் வருவதால் அப்படித் தோன்றுகிறதோ என்னவோ. பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள்.

ஏழு மணிக்கு முன்பே அவர்கள் வீடு திரும்பி விட்டார்கள். வேலைக்காரர்களும் வந்தாயிற்று. ரெஜினா தன் அறைக்கு ஓடினாள் - அம்மாவுக்காகச் செய்யும் பொம்மையைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்ற ஆர்வத்துடன்.

''வில்லி, போன வாரம் ரெஜினாவுக்காக வாங்கினேனே புது டிரெஸ் - நீல நிறக் காட்டன் டிரெஸ் - அதைப் பார்த்தாயா?'' என்று கிறிஸ்டி வேலைக்காரியைக் கேட்டாள்.

''ரெஜினாவின் அறையில் பார்த்தேனே - இன்று காலை.''

''தவறுதலாய்ச் சலவைக்கு போட்டுவிட்டாயா?''

''அலமாரியிலேயே இருக்கிறது.''

''இல்லை. நான் பார்த்துவிட்டேன்.''

கார்ல் வந்தான்.

''எலிப்பொறி வாங்கி வைத்தாயா?'' என்று கிறிஸ்டி கேட்டாள்.

''எலி எதுவும் கிடையாதம்மா.''

''பொறி வைத்தாயா, இல்லையா?''

''வைத்தேம்மா. ஆனால் பரண் சுத்தமாயிருக்கு.''

கிறிஸ்டி குளிக்கச் சென்றாள். டவல் எடுப்பதற்காகத் தனது அறையிலிருந்த அலமாரியைத் திறந்தபோது, ரெஜினாவின் காணாமற்போன டிரெஸ் இருந்தது. அலமாரியின் கீழ்த்தட்டில் கசக்கி எறியப்பட்டிருந்தது.

எப்படி இங்கே வந்தது?

ரெஜினாவுக்கு டிரெஸ் வாங்கின தினத்தை நினைவு படுத்திப் பார்த்தாள். தனக்கும் ஏதோ இரண்டொரு பொருள்கள் வாங்கிக் கொண்டது ஞாபகம் வந்தது. அவைகளுடன் இதையும் கொண்டுவந்து வைத்துவிட்டோம் போலிருக்கிறது என்று சமாதானம் சொல்லிக் கொண்டாள்.

அதை ரெஜினாவின் அறைக்கு எடுத்துச் சென்று அலமாரியில் மாட்டினாள்.

பிறகு ரெஜினாவின் விளையாட்டு அறையில் எட்டிப் பார்த்தாள். ''ஏய் கழுதை!'' என்ன செய்திட்டிருக்கிறே? பறவைப் பொம்மையா?''

''ஆமாம்மா. உள்ளே வந்து பாரேன். பொம்மை அனேகமாய் முடிஞ்சு போச்சு.''

ரெஜினா செய்திருந்த பறவைப் பொம்மையைப் பார்த்துவிட்டுத் திரும்ப நினைக்கையில் கிறிஸ்டி அந்த வீஜா பலகையைக் கவனித்தாள். ('ஆவி'களுடன் பேசுவதாகச் சொல்பவர்கள் இந்தப் பலகையை உபயோகிப்பது உண்டு.)

இந்தப் பலகையைத் தான் வாங்கி வைத்திருந்ததே கிறிஸ்டிக்கு மறந்து போயிருந்தது. தன் உள் மனத்தைத் தானே அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலுடன் அதை அவள் வாங்கியிருந்தாள். அது சரியாய் வேலை செய்யவில்லை.

''வீஜா போர்டில் நீ விளையாடுகிறாயா?''

''ஆமாம்மா.''

''எப்படி விளையாடுவதென்று உனக்குத் தெரியுமோ?''

''ஓ, தெரியுமே? இதோ நான் உனக்குக் காட்டுகிறேன் பார்.'' ரெஜினா மேஜையடியில் உட்கார்ந்து கொண்டாள்.

# 3

**வீ**ஜா பலகையில் 26 ஆங்கில எழுத்துக்களும், 1 முதல் 9 வரை எண்களும் எழுதப்பட்டிருக்கும். நடுவில் சக்கரம் வைத்த சிறுகட்டை (பிளான் ஷெட்) இருக்கும். எதிரும் புதிருமாக இருவர் உட்கார்ந்துகொண்டு விரல் நுனியால் அதை லேசாகத் தொட்டுக்கொண்டு, ஏதாவது ஒரு கேள்வி கேட்பார்கள். கட்டை நகர்ந்து ஒவ்வோர் எழுத்தாகச் சென்று பதில் கூறும். சிலர் விளையாட்டாகத் தங்கள் இஷ்டப்படி கட்டையை நகர்த்துவது உண்டு. சிலர், தங்களை மீறிய அமானுஷ்ய சக்தி யொன்று கட்டையை நகர்த்திப் பதில் தருகிறது என்று நம்புவதும் உண்டு.

கிறிஸ்டிக்கு அதன் அமானுஷ்ய சக்தியில் நம்பிக்கை கிடையாது.

ரெஜினாவுக்கு எதிரே நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள். ''இரண்டு பேருமாய் விளையாடலாம்.''

ரெஜினாவுக்கு அது பிடிக்கவில்லை என்று தோன்றிற்று. தயங்கினாள். பிறகு, ''ஓகே,'' என்று சம்மதித்து விட்டு, பிளான் ஷெட் மீது கை வைத்தாள். கிறிஸ்டி அதன்மீது கை வைக்கப் போகையில் அது விருட்டென்று நகர்ந்து போய், 'வேண்டாம்' என்று காட்டிற்று. கிறிஸ்டி தனக்குள் சிரித்துக் கொண்டாள். ரெஜினாவே வேண்டுமென்று நகர்த்துவதாக அவள் நினைத்தாள்.

''அம்மா விளையாடுவது உனக்குப் பிடிக்க வில்லையா?'' என்றாள்.

''எனக்குப் பிடிக்கிறதம்மா. காப்டன் ஹோவ்டி சொல்கிறார் நீ வேண்டாம் என்று.''

''ஹோவ்டியா? அது யார்?''

''காப்டன் ஹோவ்டி.''

''யார் அது?''

''நான் கேள்வி கேட்பேன்; அவர்தான் பதில் சொல்வார்.''

''ஓ.''

''நல்லவர்.''

''காப்டன் ஹோவ்டி என்று ஏன் அவரைக் கூப்பிடுகிறாய்?''

''அதானே அவர் பெயர்?''

''யார் சொன்னது?''

''அவரேதான்.''

''ஓகோ. வேறே என்ன சொல்கிறார்?''

''என்னென்னவோ.''

''உதாரணமாய்?''

''காட்டறேன். பார். அவரைச் சில கேள்விகள் கேட்கிறேன் இப்ப.''

''கேள்.''

கிறிஸ்டிக்கு புரிந்தது. ரெஜினாவுக்கு அவள் அப்பாவிடம் மிகுந்த ஈடுபாடு. அவர் பெயர் ஹோவார்ட். அப்பா ஞாபகத்தில், ஹோவ்டி என்று பெயரிட்டிருக்கிறாள்.

ரெஜினாவின் விரல் நுனிகள் பிளான்ஷெட்டைத் தொட்டன. ''காப்டன் ஹோவ்டி, என் அம்மா ரொம்ப அழகாயிருக்கிறாள் இல்லையா?''

ஒரு வினாடி... ஐந்து... பத்து... இருபது... பதிலே வரவில்லை. ரெஜினா மறுபடி கேட்டாள்.

''காப்டன் ஹோவ்டி?''

மேலும் வினாடிகள் நகர்ந்தன. கிறிஸ்டிக்கு ஆச்சரியமாயிருந்தது. 'ஆம்' என்ற பகுதிக்கு பிளான்ஷெட்டை மகள் நகர்த்துவாள் என்று அவள் எதிர்பார்த்திருந்தாள். நகர்த்தவில்லை. கிறிஸ்டிக்குச் சந்தேகம் உதித்தது. ஒரு கால் ரெஜினாவின் உள் மனத்தில் ஒரு பொறாமையுணர்ச்சியும் தாயினிடத்தில் பகைமையும் இருக்குமோ? சே.சே... அப்படி இருக்காது.

காப்டன் ஹோவ்டி கிறிஸ்டியை அழகானவள் என்று ஒப்புக்கொள்ள மறுக்கிற மாதிரி பாவனை செய்துகொண்டு, ''பதிலே பேசாமல் சும்மா இருக்கிறீங்களே? இப்படி நீங்கள் மரியாதை இல்லாமல் நடந்துப்பீங்கன்னு நான் நினைக்கவே யில்லை,'' என்று ரெஜினா கோபித்துக்கொணடாள்.

''உன் காப்டன் தூங்கிக்கிட்டிருக்காரோ என்னவோ,'' என்றாள் கிறிஸ்டி வேடிக்கையாக. ''நீயும் தூங்குகிற நேரம்தான். வா.''

மகளை அவள் அறைக்கு அழைத்துச் சென்று கட்டிலில் படுக்க வைத்தாள்.

ரெஜினா அம்மாவைக் கட்டிக்கொண்டாள். கிறிஸ்டி அவளைத் திருப்பியணைத்துக் கொண்டு ''என் கண்ணு, என் செல்லம்...'' என்று கொஞ்சினாள்.

''அம்மா, வேணுமானால் நீ டைரக்டர் பார்க்கை இங்கேயே அழைச்சிட்டு வந்துவிடு,'' என்றாள் ரெஜினா, திடீரென்று.

திகைப்படைந்த கிறிஸ்டி அவளை விலக்கி நிறுத்தி முகத்தைப் பார்த்தாள். ''ஏன்?''

''ஆமாம்மா. நான் ஒண்ணும் சொல்ல மாட்டேன். ஓகே.''

''அவரை நான் ஏன் அழைச்சிட்டு வரம்ணும்னு சொல்கிறாய்?''

''வந்து... உனக்கு அவரைப் பிடிச்சிருக்கு.''

''எனக்குப் பிடித்திருக்கிறது. உனக்குப் பிடிக்கலையா?''

ரெஜினா பதில் சொல்லவில்லை.

''என்ன யோசனை பண்ணுகிறாய்?'' மகளைத் தூண்டினாள் கிறிஸ்டி.

''நீ அவரைக் கல்யாணம் பண்ணிக்கப் போகிறாய். இல்லையா அம்மா?''

குபீரென்று சிரித்தாள் கிறிஸ்டி. ''அவரை நான் கல்யாணம் பண்ணிக்கப் போகிறேனா! ஏன் அப்படிச் சொல்கிறாய்?''

''அவரை உனக்குப் பிடிச்சிருக்கே?''

''அவர் ஒரு சினேகிதர். பழைய சினேகிதர். அவ்வளவுதான்.''

''அப்பாவைப் பிடிச்சிருந்த மாதிரி இவரைப் பிடிக்கலையா?''

''கண்ணே, உன் அப்பாவை நான் நேசிக்கிறேன். எப்போதும் நேசிப்பேன். டைரக்டர் பார்க் ஒண்டிக்

கட்டையாய் இருப்பதால் இங்கே நிறைய வருகிறார். அவ்வளவுதான்.''

''வந்து... கேள்விப்பட்டேன்...''

''யாரிடமிருந்து?''

ரெஜினாவின் கண்களில் சந்தேகத்தின் சாயல்; தயக்கம், ''யாரும் சொல்லலே... நானாவே நினைச்சேன்.''

''அப்படியெல்லாம் அசட்டுத்தனமாய் நினைக்கக் கூடாது. தூங்கு.''

கிறிஸ்டி திரும்பத் தன் அறைக்குச் சென்றாள். ஸ்கிரிப்டை எடுத்துக் கொண்டாள். படிக்கலானாள். பாதி படித்திருப்பாள். ரெஜினா வருவது தெரிந்தது.

''என்ன ரெஜி, என்ன விஷயம்?''

''என்னவோ மாதிரி விசித்திர சத்தம் அம்மா...''

''உன் அறையிலா?''

''ஆமாம். யாரோ தட்டுகிற மாதிரி. தூங்க முடியவில்லை.''

கிறிஸ்டி யோசித்தாள். எலிப் பொறியெல்லாம் என்ன ஆயிற்று?

''நீ என் அறையில் தூங்கம்மா. நான் போய் என்னவென்று பார்க்கிறேன்.''

மகளைத் தன் படுக்கையறைக்கு அழைத்துச் சென்று, படுக்க வைத்துப் போர்த்து விட்டாள்.

பிறகு விளக்கை அணைத்து விட்டு ஹாலுக்கு வந்தாள். இருண்ட பரணுக்கு போகும் குறுகலான படிகளில் ஏறினாள். கதவைத் திறந்தவள் விளக்கு ஸ்விட்சைத் தடவிக் கண்டு பிடித்தாள். போட்டாள் குனிந்து உள்ளே நுழைந்தாள்.

சுற்றிலும் பார்த்தாள். வழக்கமான அட்டைப் பெட்டிகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஆறு எலிப்பொறிகள் இருந்தன - கொக்கியில் இரையுடன். அறை அப்பழுக்கற்று இருந்தது. காற்று கூடச் சுத்தமாயும் குளிர்ச்சியாயும் வந்தது. கூரையில் ஓர் ஓட்டைகூடக் கிடையாது.

திடீரென்று ஒரு குரல்:

''இங்கே ஒன்றுமில்லை.''

# 4

ஏப்ரல் 11ம் தேதி விடிகாலை கிறிஸ்டி வெளியூர் சென்றிருந்த தன் டாக்டருக்குப் போன் செய்தாள், ரெஜினாவைப் பற்றி.

''ஏன்? என்ன கோளாறு?''

கிறிஸ்டி விளக்கினாள். ரெஜினாவின் பிறந்த நாளைக்கு அடுத்த நாள் - அவள் தந்தையிடமிருந்து அவளுக்கு எந்த வாழ்த்துச் செய்தியும் வராததைத் தொடர்ந்து- மகளின் நடத்தையிலும் தன்மையிலும் திடீர் மாறுதல்கள் ஏற்பட்டிருக்கிறது. தூக்கமின்மை. சண்டை பிடிக்கிற சுபாவம். சாப்பிட மாட்டேனென்று அடம். உடம்பு வலுவோ அசாதாரணமாய் வளர்ந்திருப்பது போல் தோன்றுகிறது. எப்போது பார்த்தாலும் ஓடிக்கொண்டும் குதித்துக் கொண்டும்... படிப்பு ரொம்ப மோசமாகிவிட்டது. பிறர் கவனத்தைக் கவருவதற்காகக் கிறுக்குத்தனமான தந்திரங்கள்...

''உதாரணமாக?'' என்றார் டாக்டர்.

ரெஜினாவின் அறையிலிருந்து ஏதோ தட்டுற மாதிரி ஓசை கேட்டது. இரண்டு முறையும் ஓசை கேட்டபோது

ரெஜினாதான் அந்த அறையில் இருந்தாள். கிறிஸ்டி அந்த அறைக்குள் நுழைந்த நிமிடமே ஓசை நின்று விடுகிறது. அப்புறம், ரெஜினா எதையாவது 'தொலைத்துக்' கொண்டேயிருக்கிறாள். துணி, டூத் பிரஷ், புத்தகங்கள். தன் அறையில் மேஜை நாற்காலியை யாரோ நகர்த்தி வைக்கிறார்கள் என்று போலியாகப் புகார் செய்கிறாள். படுக்கை ஆடுவதாக கதை அசிக்கிறாள்.

''அது ஆடவில்லை என்று உங்களுக்குத் தெரியுமா?'' என்றார் டாக்டர்.

''தெரியாது... நீங்க எப்போ வருகிறீர்கள்?''

''இப்போ நான் வருவதற்கில்லை.''

வாஷிங்டனில் இருந்த வேறொரு இளம் டாக்டரின் பெயரைக் கிறிஸ்டியின் டாக்டர் சிபாரிசு செய்தார். ''அவர் ரெஜினாவைப் பார்க்கட்டும். பிறகு எனக்குப் போன் செய்து சொல்லுங்கள்.''

கிறிஸ்டி, இளம் டாக்டருக்குப் போன் செய்து, அன்று பிற்பகல் வருவதாக ஏற்பாடு செய்துகொண்டாள். ஷூட்டிங் முடிந்துவிட்டதால் இப்போது அவளுக்கு நிறைய அவகாசம் இருந்தது.

ஆர்லிங்ட்டனில் இருந்த அந்த டாக்டர், கன்ஸல்ட்டிங் அறையில் ரெஜினாவைப் பார்த்தபின், ஆபீஸ் அறையில் கிறிஸ்டியுடன் பேசி எல்லா விவரங்களையும் கேட்டு வைத்துக்கொண்டார். ரெஜினாவின் சிறுநீர், ரத்தம் எல்லாவற்றையும் ஸாம்பிள் எடுத்துக்கொண்டார், பரிசோதனைக்காக.

படிப்பில் - முக்கியமாக, கணக்கில் - ரெஜினா திறமை குறைந்திருக்க வேண்டுமே என்றார்.

''இது ஒருவகை நரம்புக் கோளாறு. ஓவர் சுறுசுறுப்பு. இது இந்த இரண்டு கெட்டான் வயசில் ஏற்படும். கணக்கு போன்றவற்றில் புத்தியைக் கூர்மையாகச் செலுத்த முடியாது,'' என்று கூறி மருந்துகள் எழுதித் தந்தார். ''ரெஜினாவுக்கு உற்சாகமூட்ட இந்த மருந்துகள்.''

''உற்சாகமூட்டவா! இப்போது அவளிடம் இருக்கும் உற்சாகமே வீடு தாங்கவில்லை.''

''வெளிப்பார்வைக்குத் தெரிகிற மாதிரி அவள் நிலைமை இல்லை. இது ஒரு வகையான டிப்ரஷன்... அதனால்தான் கெட்ட வார்த்தைகள் உபயோகப் படுத்துகிறாள்...''

''கெட்ட வார்த்தைகளா!'' கிறிஸ்டி அதிர்ச்சியுற்றாள். ''எப்போது சொன்னாள்?''

''நான் அவளைப் பரிசோதனை செய்துகொண் டிருந்தபோது,'' என்றார் டாக்டர். ''பரவாயில்லை. கவலைப்பட வேண்டாம். இரண்டு வாரம் கழித்து என்னை மறுபடி சந்தியுங்கள்.''

டாக்டர் சொல்படி தவறாமல் ரெஜினாவுக்கு மாத்திரைகள் கொடுக்கப்பட்டுவந்தன.

ஒரு புதுப் புகார் சொல்ல ஆரம்பிக்கலானாள் ரெஜினா. அவளுடைய படுக்கையறையில் என்னவோ ஒரு நாற்றம் வருகிறதாம்.

**டி**ன்னர் பார்ட்டியொன்று ஏற்பாடாகியிருந்தது கிறிஸ்டியின் வீட்டில்.

இரவு ஒன்பதே முக்கால் மணிக்குப் பார்ட்டி உல்லாசமாக நடைபெற்றுக்கொண்டிருந்தது. சர்ச்சைச் சேர்ந்த

இரண்டொரு குருமார்களும் கிறிஸ்டியின் இப்போதைய படத்தை டைரக்ட் செய்யும் டைரக்டர் பார்க்கும் விண்வெளிப் பயணம் செல்லவிருக்கும் ஒருவரும் இன்னும் சிலரும் வந்திருந்தார்கள்.

சாப்பாடு ஆனதும் ஆவிகளைப் பற்றியும் சர்ச்சுக்கு எதிராக நடத்தப்படுவதாகச் சொல்லப்படும் சாத்தான் பூஜையைப் பற்றியும் பேச்சு திரும்பியது.

ரெஜினா அவளது அறையில் என்ன செய்கிறாள் என்று பார்க்க நினைத்தாள் கிறிஸ்டி. நாள் பூரா தன் அறையிலேயே அடைந்திருந்தாள் ரெஜினா. கிறிஸ்டி சென்றபோது தன் வீஜா பலகையுடன் விளையாடிக்கொண்டிருந்தாள்.

ரெஜினா இப்போது எரிச்சலாயிருக்கிற மாதிரி தோன்றியது.

விருந்தினர்களிடம் அறிமுகம் செய்துவைத்தால் ஒரு மாறுதலாயிருக்கும் என்று எண்ணி கிறிஸ்டி அவளை அழைத்துப் போனாள்.

ரெஜினா மிக நல்லபடியாகவே எல்லாரிடமும் நடந்துகொண்டது கிறிஸ்டிக்கு ஆச்சரியமாயிருந்தது. ஆனால் திருமதி பெர்ரினிடம் மட்டும் பேசவுமில்லை. கைகுலுக்கவு மில்லை.

திருமதி பெர்ரின் குறி, ஜோசியம் முதலியன பார்க்கிறவள். ''நான் ஒரு மோசடிக்காரி என்று ரெஜினாவுக்குத் தெரிந்திருக்கிறது!'' என்று தமாஷாகச் சொல்லிச் சிரித்தாள். பிறகு ஏதோ ஒருவகை ஆர்வத்துடன் ரெஜினாவின் மணிக்கட்டைப் பற்றினாள் கை ரேகையைப் பார்க்கிறவள் போல. ஆனால் ரெஜினா அவள் கையை உதறிவிட்டு, பகைமையுடன் பார்த்தாள்.

''பாவம், களைப்பாயிருக்கிறாள் போலிருக்கிறது,'' என்றாள் பெர்ரின். ஆனால் ரெஜினாவையே கூர்ந்து நோக்குவதை நிறுத்தவில்லை.

ரெஜினாவைத் திரும்பப் படுக்கையறைக்கு அழைத்துச் சென்றாள் கிறிஸ்டி. படுக்க வைத்துப் போர்வைகளை இழுத்துச் செருகினாள்.

''தூக்கம் வருகிறதா?''

''எனக்குத் தெரியவில்லை,'' என்றாள் ரெஜினா, கனவில் சொல்கிற மாதிரி. ஒருக்களித்துப் படுத்துக்கொண்டு சுவரையே அர்த்தமில்லாமல் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

குனிந்து மகளை முத்தமிட்டாள் கிறிஸ்டி. கதவருகே சென்றவள் விளக்கை அணைத்தாள்.

''குட் நைட், கண்ணே.''

அனேகமாய் வெளியிலேயே போய்விட்டாள். ரெஜினாவின் குரல் மிக மென்மையாகக் கூப்பிட்டது.

''அம்மா, என்னம்மா ஆயிட்டுது எனக்கு?''

அந்தக் குரல்! வேறு ஏதோ ஒன்று ரெஜினாவைப் பிடித்துக்கொண்டிருப்பதைப்போல. எத்தனை விரக்தி அதிலே! அவள் வயதுக்குக் கொஞ்சம்கூடப் பொருத்த மில்லாத குரல். ஒரு நிமிஷம் கிறிஸ்டி நிலைகுலைந்து கலங்கிப் போனாள். குழப்பம் அவளை ஆட்டிப் படைத்தது. மறு நிமிடம் சுதாரித்துக்கொண்டாள்.

''ஒண்ணுமில்லை, கண்ணே. டாக்டர் சொன்ன மாதிரி கொஞ்சம் நரம்புத் தளர்ச்சி. பத்துப் பதினைந்து நாள் மாத்திரை சாப்பிட்டுக்கொண்டு வந்தாயானால் போதும். ஜம்முனு ஆகிவிடுவாய். இப்ப சமர்த்தாய்த் தூங்கு, கண்ணே. என்ன?''

பதில் ஏதும் வரவில்லை. கிறிஸ்டி காத்திருந்தாள்.

''என்ன? சரியா?'' என்றாள் மறுபடி.

''சரி.'' ரெஜினாவிடமிருந்து கிசுகிசுப்பான பதில் வந்தது.

ஏன் இந்த அறை இத்தனை குளிராயிருக்கிறது? எங்கேயிருந்து சில்லென்று காற்று வருகிறது?

கிறிஸ்டி ஜன்னல்களைப் போய்ப் பார்த்தாள். இடுக்கு எதுவுமில்லை. நன்கு சாத்தியிருந்தது. திரும்ப ரெஜினாவிடம் வந்தாள். ''ரெஜி, தூங்கிட்டியாம்மா?''

கண்கள் மூடியிருந்தன. ஆழ்ந்த மூச்சு வந்து கொண்டிருந்தது.

அடிமேலடி வைத்துச் சத்தமில்லாமல் வெளியேறி னாள் கிறிஸ்டி.

பார்ட்டிக்கு வந்திருந்தவர்கள் பாடிக்கொண் டிருந்தார்கள். சிலர் புறப்பட்டுக்கொண்டிருந்தார்கள். பேராசிரியர் கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

விண்வெளிப் பயணியான டயர் கிறிஸ்டியுடன் பேசிக் கொண்டிருந்தவர் சட்டென்று நிறுத்தினார். அவளுக்குப் பின்னால் எதையோ அவர் உற்றுப் பார்ப்பது தெரிந்தது.

கிறிஸ்டி திரும்பி நோக்கினாள். ரெஜினா நைட்கவுனோடு நின்று கொண்டிருந்தாள். வைத்த விழி எடுக்காமல் விண்வெளி வீரரையே பார்த்தவாறு, உயிரற்ற குரலில் சொன்னாள்: ''நீ ராக்கெட்டில் போனதும் செத்துப் போகப் போகிறாய்!''

சொல்லிக்கொண்டே ரெஜினா கடகடவென்று மூத்திரம் பெய்தாள் கம்பளத்தில், நின்ற இடத்திலேயே.

# 5

குழந்தை ரெஜினா கம்பளத்தில் ஒன்றுக்குப் போனதோடு 'நீ வானத்தில் செத்துப் போகப் போகிறாய்' என்று விண்வெளி வீரரைப் பார்த்துச் சொன்னதும்-

கடவுளே, கடவுளே! என்று வேதனையுடன் கூவியபடி மகளை நோக்கி ஓடினாள் கிறிஸ்டி. ''என்னம்மா ரெஜி, வா, வா, என்னோடு வா.''

ரெஜினாவின் கையைப் பிடித்துக்கொணடு விரைவாக அந்த அறையை விட்டு வெளியே அழைத்துச் செல்லுமுன் முகம் பேயறைந்த மாதிரி ஆகிவிட்ட விண்வெளி வீரரை நோக்கித் திரும்பி நடுங்கும் குரலில், மன்னிப்புக் கேட்கும் வகையில் தடுமாறினாள் கிறிஸ்டி. ''ரொம்ப ஸாரி... இவளுக்கு உடம்பு சரியில்லை. தூக்கத்தில் நடந்து வந்து விட்டாள் போலிருக்கு. தான் என்ன பேசுகிறோம் என்பது அவளுக்குத் தெரியவில்லை.''

''சரி, நாம் புறப்பட வேண்டியதுதான்,'' என்று பக்கத்திலிருந்த யாரோ ஒருவரிடம் ஒரு விருந்தாளி சொல்லிக் கொண்டிருப்பது அவளுக்குக் கேட்டது.

கிறிஸ்டி ஒரு நிமிடம் திரும்பி, ''இல்லையில்லை. இருங்கள்,'' என்றாள். ''தயவு பண்ணி இருங்கள். எல்லாம் ஒரே நிமிடத்தில் நான் வந்து விடுகிறேன்.''

சமையலறைக்குப் போகும் வழியில் வேலைக் காரியைக் கூப்பிட்டு, கம்பளத்தைச் சுத்தம் செய்யும்படி சொன்னாள். பிறகு ரெஜினாவை மாடியிலுள்ள குளியலறைக்கு அழைத்துச் சென்று குளிப்பாட்டினாள். அவளுடைய நைட்கவுனை மாற்றினாள். ''ரெஜி கண்ணு, ஏம்மா அப்படிச் சொன்னே அவரிடம்?'' என்று திரும்பத்

திரும்பக் கேட்டாள். ஆனால் ரெஜினாவுக்கு அது புரிந்ததாய்த் தோன்றவில்லை. ஏதோ முனகினாள். அவள் கண்கள் சூனியமாயும் திரைபோட்ட மாதிரியும் இருந்தன.

அவளைப் படுக்கையில் கிடத்திப் போர்வையை இழுத்துப் போர்த்தினாள் கிறிஸ்டி.

அவள் திரும்பி முன்னறைக்கு வந்து, ரெஜினாவின் நோயைப் பற்றி விருந்தாளிகளிடம் சுருக்கமாய்ச் சொன்னபோது அவர்கள் அனுதாபம் தெரிவித்தார்கள். தட்டுகிற மாதிரியான ஓசைகளைப் பற்றியும் கவனத்தை இழுக்கக்கூடிய மற்ற நடவடிக்கைகளைப் பற்றியும் அவள் சொன்னபோது பெர்ரின் அம்மாள் அவளையே வெறித்து நோக்கியவாறு கேட்டுக்கொண்டிருந்தாள்.

''தூக்கத்தில் அவள் நடக்கிறாளா?'' என்று ஒருவர் விசாரித்தார்.

''இல்லை. இன்று ராத்திரிதான் முதல் தடவையாக அப்படி நேர்ந்திருக்கிறது. அல்லது எனக்குத் தெரிந்து இது முதல் தடவை. ஏதோ நரம்புத் தளர்ச்சி என்று நினைக்கிறேன். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

''உண்மையில் எனக்குத் தெரியவில்லை,'' என்றார் பாதிரியார்களில் ஒருவர். ''பெண்கள் பருவம் அடைகிற வயசில் தூக்கத்தில் நடக்கும் நோய் ஏற்படுவது சகஜம் என்று நான் கேள்விப்பட்டு இருக்கிறேன். ஆனால்-'' அவர் தோளைக் குலுக்கிக் கொண்டு பேச்சை நிறுத்தினார். ''எனக்குத் தெரியவில்லை. உங்கள் டாக்டரைக் கேட்பது நல்லதென்று நினைக்கிறேன்.''

இந்த விவாதங்களின் போதெல்லாம் பெர்ரின் அமைதியாக உட்கார்ந்து, கணப்பில் நெருப்பின் நாக்குகள் கூத்தாடுவதைக் கண்ட வண்ணம் இருந்தாள். விண்வெளி

வீரரும் ஏறத்தாழ அதே போல் அடங்கிப் போனவராக இருப்பதைக் கிறிஸ்டி கவனித்தாள். அந்த வருஷத்துக்குள் அவர் சந்திரனுக்குப் பிரயாணம் செய்ய ஏற்பாடாகியிருந்தது. அருந்திக்கொண்டிருந்த பானத்தை வெறித்து நோக்கியபடி, தனக்கும் பேச்சில் அக்கறை இருப்பதுபோல் காட்ட நடுநடுவில் ஏதாவது முனகிக் கொண்டிருந்தார். ரெஜினா அவரிடம் சொன்னதைப்பற்றி யாருமே பேச்செடுக்கவில்லை- ஏதோ தங்களுக்குள் ஒப்பந்தம் செய்துகொண்ட மாதிரி.

எல்லாரும் புறப்பட்டான பிறகு, பெர்ரினை மட்டும் கிறிஸ்டி கொஞ்சம் பேச்சுக் கொடுத்து நிற்க வைத்துக் கொண்டாள். ரெஜினாவின் வீஜா பலகையைப் பற்றியும் காப்டன் ஹோவ்டி என்ற கற்பனைப் பாத்திரத்தைப் பற்றியும் அவளிடம் சொல்லி, ''இதில் ஏதாவது தீங்கு உண்டு என்று நினைக்கிறீர்களா?'' எனக் கேட்டாள்.

சே, சே அதிலே என்ன இருக்கிறது என்று அவள் தள்ளி விடுவாள் எனக் கிறிஸ்டி எதிர்பார்த்தாள். மாறாகப் பெர்ரினுக்கு முகம் கறுப்பதையும் தரையை நோக்கிக் குனிந்துகொண்டு நிற்பதையும் காண அவளுக்கு ஆச்சரியமாயிருந்தது.

புறப்படுகையில் பெர்ரின் சொன்னாள்: ''இதெல்லாம் தற்செயலான சமாசாரமாக இருக்கக்கூடும். அல்லது பில்லி சூனியம்...'' அவள் சற்றுத் தயங்கி வார்த்தைகளை அளந்து சொன்னாள்: ''பில்லி சூனியம் விவகாரத்தில் நான் விலகியே இருப்பது வழக்கம். அதிலே போய் விளையாடுவது ரொம்ப அபாயமாகி விடும். வீஜா பலகையை வைத்துக்கொணடு குறும்பு செய்வதும் தப்பு.''

''விளையாடாதீங்க, பெர்ரின்!'' கிறிஸ்டி புன்னகை செய்தாள். ''இந்த வீஜா பலகை எப்படி வேலை செய்கிறது

என்று! உங்களுக்குத் தெரியாதோ? அதில் அமானுஷ்ய சக்தி எதுவும் இல்லை. விளையாடுகிற நபரின் உள்மனம் பிரதிபலிக்கிறது. அவ்வளவு தான்.''

''இருக்கலாம்.'' என்றாள் அவள் அமைதியாக. ''ஆனால், வீஜா பலகை, ஆவியுலகத்துடன் பேசும் கூட்டங்கள் - இப்படிப் பலவற்றைப் பற்றி நான் கேள்விப் பட்டிருக்கிறேன். ஒவ்வொன்றிலும் ஒருவகையான கதவு திறந்து கொள்கிற மாதிரி இருக்கிறது. அது ஒருவேளை ஆவியுலகக் கதவாக இல்லாதிருக்கலாம். அதில் உனக்கு நம்பிக்கை கிடையாது. நீ உள்மனம் - மறைமனம் என்று சொல்கிறாயே, அந்தக் கதவாக இருக்கலாம். எனக்குத் தெரியாது. ஆனால் சில விஷயங்கள் நடக்கின்றன. அத்தோடு கிறிஸ்டி, பில்லி சூனியத்தோடு விளையாடிய பலபேர் உலகத்தில் பல பைத்தியக்கார ஆஸ்பத்திரிகளில் நிறைந்திருக்கிறார்கள்.''

''தமாஷ் பண்ணுகிறீர்களா?''

ஒரு நிமிடம் நிசப்தம் நிலவியது. பிறகு மீண்டும் பெர்ரினின் மென்மையான குரல் இருட்டின் நடுவேயிருந்து ரீங்கரித்தது. ''பவேரியாவில் ஒரு குடும்பம் இருந்தது, கிறிஸ்டி. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தொன்றாம் வருடம். அவர்கள் பெயர் எனக்கு நினைவில்லை. அந்தக் குடும்பத்தில் பதினொரு பேர் இருந்தார்கள். பத்திரிகைகளைப் பார்த்து உண்மையா இல்லையா என்று நீயே தெரிந்து கொள்ளலாம். ஆவியுலகத்தோடு பேச ஆரம்பித்த கொஞ்ச நாளைக்கெல்லாம் அவர்களுக்கு மூளை கலங்கிவிட்டது. அத்தனை பேருக்கும்-பதினொரு பேருக்கும்! தங்கள் வீட்டைக் கொளுத்த ஆரம்பித்தார்கள். மேஜை நாற்காலி களைக் கொளுத்தி முடித்ததும், இளைய பெண்களில்

ஒருத்தியின் மூன்று மாதக் குழந்தையைக் கொளுத்த ஆரம்பித்தார்கள். அப்போதுதான் அக்கம் பக்கத்தார் உள்ளே புகுந்து அவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். குடும்பம் மொத்தத்தையும் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் அடைக்க வேண்டியதாயிற்று.''

''ஐயோ!'' என்று கிறிஸ்டிக்குப் பெருமூச்சு வெளிப் பட்டது. ''ரெஜினாவை ஒரு மனத் தத்துவ டாக்டரிடம் அழைத்துப் போகத்தான் நானும் நினைத்திருக்கிறேன்...'' என்றாள்.

''ஆமாம். செய்,'' என்றாள் பெர்ரின். ''நான் சொன்னதைப்பற்றி அலட்டிக் கொள்ளாதே. டாக்டரைக் கேள். குட்பை.''

கிறிஸ்டி வீட்டுக்குள் திரும்பினாள். ரெஜினா சிறுநீர் கழித்த இடத்தை வேலைக்காரி சுத்தம் செய்து கொண்டிருந்தாள்.

''கறை போச்சா இல்லையா?''

''போயிடும்னு நினைக்கிறேன்.''

ரெஜினாவின் அறைக்குப் போய்ப் பார்த்தாள் கிறிஸ்டி. அவள் ஆழ்ந்து தூங்குவது தெரிந்தது. வீஜா பலகையின் ஞாபகம் வந்தது. அதை ஒளித்து வைத்துவிடலாமா? அல்லது வெளியே எறிந்து விடுவோமா?

பொறுத்துப் பார்க்கலாமென முடிவு செய்தவளாகத் தனது அறைக்குத் திரும்பினாள் கிறிஸ்டி. உடனே நித்திரையில் ஆழ்ந்துவிட்டாள்.

திடீரென்று எங்கோ யாரோ வெறி பிடித்தாற்போல் பயங்கரமாய்க் கூச்சலிடுகிறமாதிரி இருந்தது.

"அம்மா! இங்கே வாயேன்! இங்கே வாயேன்! எனக்குப் பயமாயிருக்கு!"

"இதோ வருகிறேன் ரெஜி! இதோ!"

ரெஜினாவின் படுக்கையறைக்குப் புயல் போல் தாவினாள். கடமுடா சத்தம். அழுகை. கட்டிலின் ஸ்பிரிங்குகள் கிறீச்சிடுகிற ஓசை...

"என்னம்மா? என்னடி கண்ணே?" கிறிஸ்டி அறைக்குள் பாய்ந்து விளக்கு ஸ்விட்சைத் தட்டி விட்டாள்.

ரெஜினா விறைத்துப் போய் மல்லாந்து படுத்துக் கிடந்தாள். பொங்கி வந்த கண்ணீரின் கறை முகத்தில் படிந்திருந்தது. தனது சின்னக் கட்டிலின் ஓரத்தை இறுக்கிப் பிடித்துக் கொண்டிருந்தாள். பயங்கரமான அச்சத்தில் அவள் உடம்பு முறுக்கிக் கொண்டிருந்தது.

"அம்மா! ஏம்மா இது ஆடுது?" என்று அவள் அழுதாள். "நிறுத்தம்மா! எனக்குப் பயமாயிருக்கும்மா! நிறுத்து! ஆடாமல் நிறுத்து! ப்ளீஸ்!"

கட்டிலிலிருந்த மெத்தை முன்னும் பின்னுமாகப் பயங்கரமாய்க் குதித்துக்கொண்டிருந்தது.

## 6

**டா**க்டர் கிளைனின் கன்சல்ட்டிங் அறை மேஜைமீது மல்லாந்து படுத் திருந்தாள் ரெஜினா. டாக்டர் பரிசோதித்துக் கொண்டிருந்தார்.

ரெஜினா திடீரென்று மேஜையில் எழுந்து உட்கார்ந் தாள். அவர் முகத்தில் துப்பினாள். அவர் அமைதியாக

முகத்தைத் துடைத்துக்கொண்டு, அவளைப் பார்த்துக் கொள்ளும்படி ஒரு நர்ஸிடம் சொல்லிவிட்டு வெளியே காத்திருக்கும் கிறிஸ்டியிடம் வந்தார். ரெஜினாவைப் பற்றி மறுபடி விவரமாக விசாரித்தார்.

பார்ட்டியில் எல்லாருக்கும் முன்னே ரெஜினா சிறுநீர் கழித்ததையும் படுக்கை ஆடியதையும் பற்றி முந்தின தடவை வந்தபோது கிறிஸ்டி அவரிடம் சொல்லியிருந்தாள்.

''நிஜமாகவே படுக்கை ஆடியதா?'' என்று கேட்டார் டாக்டர்.

''என் கண்ணாலே பார்த்தேன்.''

''எவ்வளவு நேரம்?''

''பத்துத் பதினைந்து ஸெகண்ட் இருக்கும். அதாவது நான் பார்த்தது அவ்வளவு நேரம்தான். பிறகு ரெஜினாவின் உடம்பு விறைத்துப் போயிற்று. படுக்கையை நனைத்து விட்டாள். அல்லது முதலிலேயே ஒன்றுக்குப் போய் விட்டிருந்தாளோ என்னமோ? பிறகு நன்றாகத் தூங்க ஆரம்பித்துவிட்டாள். மறுநாள் சாயந்தரம் வரை எழுந்திருக்கவில்லை.''

'கிளானிக் கன்ட்ராக்ஷ'னாக இருக்கும் என்று டாக்டர் முதலில் நினைத்திருந்தார். தசை நார்கள் விறைப்பதும் தளர்வதுமாக இருக்கும். படுக்கை ஆடுவது அதன் விளைவாக இருக்கக் கூடுமென்று அவர் அபிப்பிராயமா யிருந்தது. மூளையில் ஒரு விரிசல் காரணமாக அப்படி நேரலாம் என்று சொல்லியிருந்தார்.

''பரிசோதனையில் அப்படித் தோன்றவில்லை,'' என்று சொல்லிவிட்டார் இன்று. ''சின்ன வயதில் ரெஜினா கீழே விழுந்து தலையில் ஏதாவது காயப்பட்டது உண்டா?''

''எனக்குத் தெரிந்து இல்லை. ஆனால் சில விஷயங்கள் அவளுக்கு மறந்துவிடுகிறது என்று தோன்றுகிறது.''

''என்ன விஷயம்?''

ஒரு நாள், வெளி நாட்டிலிருந்து கிறிஸ்டியின் முன்னாள் கணவர் - ரெஜினாவின் அப்பா - கிறிஸ்டிக்கு போன் செய்தார். ரெஜினாவின் பிறந்த நாள் வாழ்த்துச் செய்தி அனுப்பாதிருந்துவிட்டது பற்றி கிறிஸ்டி அவரைக் கோபித்துக் கொண்டாள். அவர், ''நான் வெளியே போயிருந் தேன். ஓட்டலுக்குத் திரும்பியவுடன் ரெஜினாவுக்கு போன் செய்தேனே? உன்னிடம் சொல்லவில்லையா?'' என்றார்.

''இல்லையே?''

''அதனால் தான் உன்னை இப்போ கூப்பிட்டேன். அவளுக்கு என்ன உடம்புக்கு?''

''என்ன சொல்கிறீர்கள்?''

''நான் கூப்பிட்டதும் ஒரு கெட்ட வார்த்தை சொல்லித் திட்டிவிட்டுப் போனை வைத்துவிட்டாள்,'' என்றார் ஹோவார்டு.

ரெஜினா விழித்துக்கொண்ட போது இதைப்பற்றிக் கிறிஸ்டி கேட்டாள். டெலிபோன் பேச்சைப்பற்றியோ டின்னர் பார்ட்டியில் தான் நடந்து கொண்ட விதமோ எதுவும் அவளுக்கு நினைவில்லை.

இந்த விவரங்களைக் கிறிஸ்டி டாக்டரிடம் சொன்னாள்.

டாக்டர், ''மேஜை நாற்காலிகளை அவளேதான் நகர்த்தியிருக்கிறாள் - ஆடோமாடிஸம் என்று ஒரு நிலையில். அந்த நிலையில் இருக்கும்போது தான் என்ன செய்கிறோம் என்பது நோயாளிக்குத் தெரியாது,'' என்றார்.

கிறிஸ்டி திகைத்தாள்.

''தேக்கு மரத்தில் செய்த கனமான பெரிய பீரோ அவள் அறையில் இருப்பது, அரை டன் இருக்கும். அதை எப்படி அவளால் நகர்த்த முடியும், டாக்டர்?''

''அந்த மாதிரி சமயத்தில் அசாதாரணமன பலம் வருவதுண்டு. அதொன்றும் அதிசயமில்லை.''

''இன்னொன்று, வீஜா பலகை இல்லாமலே காப்டன் ஹோவ்டியுடன் அவள் பேசுகிறாள்.''

அவள் சொல்வதை உற்றுக் கேட்டார் டாக்டர். கிறிஸ்டி தொடர்ந்தாள்:

''நேற்றுக் காலை அவள் அறையில் ஹோவ்டியுடன் பேசிக்கொண்டிருப்பது கேட்டது. கொஞ்சம் பேசுவதும், கொஞ்சம் நிறுத்துவதுமாக இருந்தாள். உள்ளே எட்டிப் பார்த்தேன். வீஜா பலகை இல்லை. ரெஜினா மட்டும்தான் இருந்தாள். யாரோ பேசுவதைச் சரி சரியென்று கேட்டுக் கொண்டிருக்கிற மாதிரி தலையைச் சாய்த்து ஆட்டிக் கொண்டிருந்தாள்.''

''கண்ணுக்கு ஏதாவது தெரிகிறது என்றாளா? ஏதாவது நாற்றம்...?''

''ஆமாம்... அறையில் நாற்றம் வருகிறது என்று' அடிக்கடி சொல்கிறாள்.''

''பொசுங்குகிற நாற்றம்?''

''அட! ஆமாம்!...'' கிறிஸ்டி ஆச்சரியப்பட்டாள். ''எப்படித் தெரியும் உங்களுக்கு?''

''மூளையில் கெமிகோ எலக்ட்ரிகல் இயக்கம் ஏற்படும்போது அது ஒரு அறிகுறி. ரெஜினாவின் கேஸில்

இங்கே நெற்றிப் பொறியை அடுத்துள்ள எலும்பில் ஏற்பட்டிருக்கிறது.'' முன் மண்டையைத் தட்டிக் காட்டினார். ''ஈ.ஈ.ஜி டெஸ்ட் எடுத்துப் பார்த்து விடலாம்.''

''அப்படியென்றால்?''

''எலக்ட்ரோ என்ஸஃபலோகிராப். அவளுடைய மூளை அலைகளின் தன்மை அதில் தெரியும்.''

''இப்பவே செய்கிறீர்களா?'' கிறிஸ்டிக்குக் கவலையும் அழுகையும் வெடித்துக்கொண்டு வந்தன.

''ஆமாம். தூக்க மருந்து தர வேண்டும். வாருங்கள்,'' என்று கிறிஸ்டியை உள்ளே அழைத்துச் சென்றார் டாக்டர் க்ளைன்.

ஊசியை அவர் கையிலெடுப்பதைக் கண்டவுடனே ரெஜினா வீரிட்டுக் கூச்சல் போடத் தொடங்கிவிட்டாள். காட்டாறு போல ஆபாச வார்த்தைகள் அவளிடமிருந்து பீரிட்டடித்தன. கிறிஸ்டிக்கே காது கூசிற்று.

''ரெஜினா கண்ணே, உன் நல்லதுக்குத்தாம்மா செய்கிறார் டாக்டர்,'' என்று அவளை அசையாமல் பிடித்துக் கொண்டாள் கிறிஸ்டி. டாக்டர் ஊசி போட்டார். ஈ.ஈ.ஜி கருவிகளைத் தயார் செய்யும்படி நர்ஸிடம் சொல்லிவிட்டு இன்னொரு நோயாளியைக் கவனிக்கச் சென்றார். திரும்பி வந்து பார்த்தபோது ஊசி மருந்து ரெஜினாவிடம் பலிக்கவில்லை என்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தார். ''அது நல்ல ஹெவி டோஸாச்சே!'' என்று கிறிஸ்டியிடம் கூறிவிட்டு இன்னொரு 25 மில்லி கிராம் போட்டார். இப்போது ரெஜினா கட்டுக்கடங்கியிருந்தாள்.

ஈ.ஈ.ஜி சோதனைகள் நடந்தன. ஆனால் டாக்டருக்குச் சரியாக பிடிபடவில்லை. ''இது ஒரு வகையான எபிலெப்ஸி -

காக்கை வலிப்பு. நெற்றி பொட்டு எலும்பில் ஏற்படுகிறது இந்தக் கோளாறு. இருநூறு முன்னூறு வருடங்களுக்கு முன்பெல்லாம் இந்த கோளாறைப் பற்றிப் 'பேய் பிடித்திருக்கிறது' என்று சொல்வார்கள்.

''பேயா!'' கிறிஸ்டிக்கு திகில் ஏற்பட்டது.

''பயப்படாதீர்கள், அதெல்லாம் மூட நம்பிக்கைகள். மண்டையோட்டில் சில எக்ஸ்ரே எடுத்து பார்க்கலாம். இந்தக் கட்டிடத்திலேயே ஒரு எக்ஸ்ரேக்காரர் இருக்கிறாராம், போய்ப் பாருங்கள்,'' என்று அவருக்குச் சீட்டு எழுதிக் கொடுத்தார் க்ளைன். ''வீட்டில் ரெஜினாவின் படுக்கையறை எங்கே இருக்கிறது?''

''மாடியில்.''

''ஜன்னல்கள் உண்டா? பெரிய ஜன்னல்கள்?''

''ஆமாம், ஏன்?''

''அவைகளைச் சாத்தி வைத்திருங்கள். முடியுமானால் பூட்டி விடுங்கள். இந்த நோய் உள்ளவர்கள் தங்களைத் தாங்களே காயப்படுத்திக்கொள்வது உண்டு.''

கிறிஸ்டிக்கு ரத்தமெல்லாம் வற்றிவிட்ட மாதிரி இருந்தது. ரெஜினாவை எக்ஸ்ரே எடுத்தானதும் அவளை அழைத்துக்கொண்டு திரும்பினாள்.

ரெஜினா எதுவுமே பேசாமல் ஊமை மாதிரி இருந்தாள். அவளிடம் பேச்சுக் கொடுக்க வேண்டி, ''மொனாபலி விளையாடறியா ரெஜி?'' என்று கேட்டாள் கிறிஸ்டி.

ரெஜினா வேண்டாமென்று தலையை அசைத்தாள். எண்ணத் தொலையாத எட்டத்தில் ஆழ்ந்துவிட்ட மாதிரி அவள் கண்கள் மந்தமாகத் தாயை வெறித்து நோக்கின.

''தூக்கம் வருது,'' என்று கூறிவிட்டு மாடியிலுள்ள தன் அறைக்குச் சென்றுவிட்டாள்.

கிறிஸ்டி சமையலறைக்குச் சென்றாள். ஒரு பெருமூச்சுடன் தனக்குக் காப்பி போட்டுக்கொண்டாள். அருந்தப் போன சமயம் திடீரென்று ஞாபகம் வந்தது. எழுந்து ரெஜினாவின் படுக்கையறைக்குச் சென்றாள். போர்வையைப் போர்த்திக் தூங்கிக் கொண்டிருந்தாள் ரெஜினா.

ஜன்னலுக்குச் சென்று கதவுகளைச் சாத்தினாள் கிறிஸ்டி. கீழே வெகு பாதாளத்தில் தெரு தெரிந்தது. இறுக்கித் தாளிட்டாள். நாளைக்கே ஒரு தச்சனை அழைத்து வந்து ஜன்னலுக்குப் பூட்டுப் போட வேண்டும்.

கீழே இறங்கி வந்தபோது ஸ்டுடியோவிலிருந்து போன் வந்தது. அடுத்த இரண்டு மூன்று மாதங்களுக்கு அவள் என்னென்ன தயார் செய்து கொள்ள வேண்டும் என்று பட்டியல் ஒப்பித்தார் உதவி டைரக்டர்.

''கொஞ்ச நாள் என்னை விட்டு விடுங்கள். என் பெண்ணுக்கு உடம்பு சரியில்லை. நான் அவள் பக்கத்திலேயே இருக்க வேண்டும். வீட்டை விட்டு வர முடியாது,'' என்றாள் கிறிஸ்டி.

''பைத்தியம் போல் பேசாதீர்கள்,'' என்று அவர் எச்சரித்தார். ''சிபாரிசின் பேரில்தான் உங்களுக்கு இந்தச் சான்ஸைக் கொடுத்திருக்கிறார்கள். உங்களால் படப் பிடிப்புத் தாமதமானால் உங்களை நீக்கிவிட்டு வேறு ஆள் போட்டுவிடுவார்கள். யோசனை செய்யுங்கள்.''

''யோசனைக்கு ஒன்றுமில்லை. தீர்மானமான விஷயம், என்னால் வரமுடியாது,'' என்ற சொல்லிவிட்டாள் கிறிஸ்டி உறுதியாக.

# 7

இரண்டு நாள் கழித்து -

டாக்டர் கிளைனின் கன்ஸல்ட்டிங் அறை. ரெஜினாவின் எக்ஸ்ரே படங்கள் வந்திருந்தன. ஒரு நியூராலஜிஸ்ட்டிடம் கிளைன் அவற்றைக் காட்டி ஆலோசனை கேட்டார்.

நரம்பு நிபுணர், மூக்குக் கண்ணாடியைக் கழற்றிச் சட்டைப் பையில் வைத்துக்கொணடு உதட்டைப் பிதுக்கினார். ''ஊகூம். ஒரு கோளாறும் தெரியவில்லையே, கிளைன்.''

''இன்னொரு ஸீரிஸ் எடுத்துப் பார்க்கலாமா?''

''பார்க்கலாம். அதற்கு முன் குழந்தையை நான் பார்க்க விரும்புகிறேன்.''

''ஏன், இன்றைக்கேகூட'' டாக்டர் கிளைன் பேசி முடிக்குமுன் டெலிபோன் அடித்தது.

கிறிஸ்டி.

எத்தனை வேதனை அவள் குரலில்! ஹிஸ்டீரியா நோயாளி மாதிரி அவள் வீரிட்டாள். ''டாக்டர்! உடனே இங்கே வாருங்கள்! ரெஜினாவை வந்து பாருங்கள்! இப்பவே வாருங்கள் டாக்டர்!''

''ஏன்... என்ன... என்ன ஆச்சு?''

''தெரியலை டாக்டர். என்னால் அதை விவரிக்க முடியாது! புண்ணியமாகப் போகட்டும் உங்களுக்கு, உடனே வாருங்கள் டாக்டர்!'' என்று கிறிஸ்டி அலறினாள்.

சில நிமிடங்களில் அவர்கள் கிறிஸ்டியின் வீட்டை அடைந்து விட்டார்கள். வீட்டுக்குள் நுழைகையிலேயே, பீதி தோய்ந்த கூச்சல்களும் முனகல்களும் கேட்டன - ரெஜினாவின் படுக்கையறையிலிருந்து.

காரியதரிசி ஷெரானின் முகத்தில் கலவரம் படிந்திருந்தது. ரெஜினாவின் அறைக்கு அவர்களை அழைத்துச் சென்று, கதவைத் திறந்து விட்டாள்.

கிறிஸ்டி கதவருகே ஓடி வந்தாள். அச்சத்தின் காரணமாக அவள் முகம் கோணலாக முறுக்கிக் கொண்டிருந்தது. ''ஐயோ, உள்ளே வாருங்களேன்! அவள் என்ன செய்து கொண்டிருக்கிறாள் பாருங்களேன்!'' என்று குரல் நடுங்கக் கூவினாள்.

''இவர்தான் டாக்டர் - '' டாக்டர் கிளைன் தன் தோழரை அறிமுகம் செய்யத் தொடங்கியவர், உள்ளே பார்த்தவுடன் அப்படியே வாக்கியத்தை நிறுத்திக் கொண்டார்.

ரெஜினாவின் உடல் அப்படியே கட்டிலுக்கு மேலாக அந்தரத்தில் எழும்பியது. பிறகு தொப்பென்று திரும்ப விழுந்தது. திரும்பத் திரும்ப இதுபோல வேகமாக எழும்புவதும் விழுவதுமாக இருந்தது. ''அம்மா! அம்மா! இந்த ஆளைத் தடுத்து நிறுத்தேன்!'' கீச்சிட்டாள். ''நிறுத்தேன் இவரை! என்னைக் கொல்லப் பார்க்கிறார்! தடுக்கமாட்டாயா? நிறுத்த்த்த்த்த்து அம்ம்ம்ம்மம்மா!''

கிறிஸ்டி விம்மினாள். ''ரெஜீ! ரெஜிக்கண்ணு!'' விரல்களைப் பந்தாக்கித் தன் வாயில் அடைத்துக் கொண்டு மன்றாடும் பார்வையுடன் டாக்டர் கிளைனை நோக்கினாள். ''டாக்டர், என்ன இது? என்ன அர்த்தம் இதற்கு?''

டாக்டர் கிளைனின் பார்வை ரெஜினாவின்மீதே பதிந்திருந்தது. அந்த அதிசயம் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டேயிருந்தது. ஒவ்வொரு முறையும் ரெஜினா ஓரடி உயரத்துக்கு அந்தரத்தில் எழும்பி, ஒரு பெருமூச்சு பீரிடத் திரும்ப விழுந்தாள். கண்ணுக்குத் தெரியாத ஏதோவொரு கை

அவளைத் தூக்குவதும் போடுவதுமாக இருப்பதுபோல் இருந்தது.

கிறிஸ்டியின் கைகள் நடுங்கின. கண்ணைப் பொத்திக்கொண்டாள். ''டாக்டர்! என்ன செய்யலாம்?''

ரெஜினா எழும்பிக் கீழே விழுவது திடுப்பென்று நின்றது. ஆனால் ஜன்னி பிடித்த மாதிரி படுக்கையில் இப்படியும் அப்படியுமாக முறுக்கிக்கொண்டு புரண்டாள். கண்கள் மேலே செருகிக் கொண்டன. வெறும் வெள்ளை விழி மட்டுமே தெரிந்தது.

''ஐயோ! அவர் என்னை எரிக்கிறாரே! என்னை எரிக்கிறாரே!'' ரெஜினா முனகலானாள். ''என் உடம்பு எரிகிறதே! எரிகிறதே!''

அவள் கால்கள் வேகமாகப் பின்னிக் கொள்வதும் பிரிந்துகொள்வதுமாக இருந்தது.

இரண்டு டாக்டர்களும் அவளை நெருங்கினார்கள். ரெஜினா அப்போதும் முறுக்குவதும் துள்ளுவதுமாக இருந்தாள். உடம்பைப் பின்புறமாக வளைத்துக் கொண்டாள். தொண்டை புடைத்து வீங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது. விசித்திரமான ஒரு கட்டைத் தொண்டையில், இன்னதென்று புரிந்துகொள்ள முடியாத எதையோ சொல்லத் தொடங்கினாள்.

கிளைன் குனிந்தார். அவள் நாடித் துடிப்பைப் பரிசோதிப்பதற்காக. ''சமர்த்துப் பாப்பா இல்லே. என்னவென்று பார்க்கிறேன். இரு,'' என்றார் மென்மையாக. சொல்லி முடிக்கு முன்னே-

பளாரென்று ரெஜினாவின் புறங்கையால் ஓர் அறை! அந்த அடியின் வேகமும் கொடூரமும் தாங்க முடியாமல்

அறையின் மறுகோடியில் போய்ச் சுருண்டு விழுந்து அதிர்ச்சியுடன் தடுமாறினார் டாக்டர் கிளைன். ரெஜினா படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். நச்சுத்தனமான சீற்றம் அவள் முகத்தைக் கோரப்படுத்தியது.

''இவள் எனக்குச் சொந்தம்!'' வலுமிக்க, கரடுமுரடான குரலில் அவள் சீறினாள். ''இவள் என்னுடையவள்! இவகிட்டே வராதே. எட்டிப் போ! இவள் என்னுடையவள்!''

குரைக்கிற மாதிரியான சிரிப்பு அவள் கண்டத்திலிருந்து வெளிப்பட்டது. உடனே யாரோ தள்ளிவிட்ட மாதிரி மல்லாந்து விழுந்தாள். நைட்கவுனை இடுப்புக்கு மேலே வழித்து விட்டுக்கொண்டு, ''ஊம்! வா! வா!'' என்று கெட்ட வார்த்தைகள் சொன்னாள். அசிங்கமெல்லாம் செய்தாள்.

கிறிஸ்டியால் அதைத் தாள முடியவில்லை. வெடித்துவரும் விம்மலை அடக்கிக்கொண்டு அறைக்கு வெளியே ஓடினாள்.

கிளைன் மறுபடி கட்டிலை நெருங்கியபோது ரெஜினா தன்னைத் தானே அணைத்துக்கொள்கிற மாதிரி, தன் கைகளைத் தானே வருடிவிட்டுக் கொண்டிருந்தாள்.

''என் கண்ணம்மா... என் முத்து!'' அதே விசித்திரமான கட்டைக் குரலில் அவள் கொஞ்சினாள். பரவசத்தில் ஆழ்ந்த மாதிரி அவள் கண்கள் மூடிக் கொண்டன. ''என் குழந்தை... என் முத்து... என் புஷ்பம்...''

உடனே இந்தப்புறமும் அந்தப்புறமுமாக உடம்பை முறுக்கிக்கொள்ளத் தொடங்கினாள். அர்த்தமில்லாத சொற்கள் திரும்பத் திரும்ப வெளிப்பட்டன. திடுப்பென்று நிமிர்ந்து உட்கார்ந்தாள். அனாதைபோன்ற அச்சத்துடன் கண்கள் வெறித்து நோக்கின.

பூனையைப் போலக் கத்தினாள்.

குரைத்தாள்.

கனைத்தாள்.

பின்னர் இடுப்புக்குக் கீழே அவள் உடம்பு படு வேகமாகச் சுழலத் தொடங்கியது. உயிரைப் பிழிய வைக்கும் சுழற்சி. மூச்சுத் திணறியது. ''ஐயோ, இவரை நிறுத்துங்கள்! வலிக்கிறதே! நிறுத்துங்களேன்! நிறுத்துங்களேன்! என்னால் மூச்சுவிட முடியவில்லையே!''

பார்த்தது போதும் என்றாகி விட்டது டாக்டர் கிளைனுக்கு. மருந்துப் பையைத் திறந்து, ஊசி போட ஆயத்தம் செய்யலானார்.

நியூராலஜிஸ்ட், ரெஜினாவின் பக்கம் குனிந்து அவள் கடகடவென்று கட்டைக் குரலில் சொல்வது என்னவென்று கூர்ந்து கவனித்தார்.

''என்ன சொல்கிறாள்?'' என்று கேட்டார் கிளைன்.

''வெறும் உளறல். அர்த்தம் இல்லாத சொற்கள். ஆனால் அர்த்தம் இருக்கிற மாதிரி உச்சரிக்கிறாள்.''

இரண்டு டாக்டர்களும் நெருங்கியவுடன், வில்லாக மல்லாந்து வளைந்தாள் ரெஜினா. வலி தாங்க முடியாமல் கூச்சலிட்டாள்.

ஊசி போடுவதற்கு ஒருவர் அவளைப் பிடிக்குமுன் அவள் சுருண்டு மடங்கி விழுந்தாள். படுக்கையை நனைத்தாள்.

ஊசி போட்டு அவளைத் தூங்கச் செய்துவிட்டுக் கீழே வந்தார்கள் இருவரும். மாடிப் படியின் கைப்பிடியில் தலையைப் புதைத்துக்கொண்டு கிறிஸ்டி அழுது கொண்டிருந்தாள். நனைந்து பந்தாகிப்போன கைக் குட்டியால் மூக்கைத் துடைத்துக் கொண்டு டாக்டர்களை நோக்கினாள்.

''தூங்குகிறாள்,'' என்று கிளைன் தெரிவித்தார்.

# 8

கிறிஸ்டி கைக்குட்டையினால் கண்ணைத் துடைத்துக் கொண்டு இரண்டு டாக்டர்களையும் பார்த்தாள்.

டாக்டர் டேவிட், ''எக்ஸ்ரேயிலும் ஈஈஜியிலும் தெரியாதது முதுகுத் தண்டில் நீர் எடுத்துப் பரிசோதித்தால் தெரியக்கூடும்,'' என்றார்.

''செய்யுங்கள், அவள் குணமானால் சரி,'' என்றாள் கிறிஸ்டி.

டாக்டர் க்ளைன் போன் செய்து முதுகுத் தண்டு பரிசோதனைக்கான கருவிகளைக் கொண்டு வரச் செய்தார்.

அன்று காலை நேர்ந்ததை விவரித்தாள் கிறிஸ்டி.

அவள் சமையலறையிலிருந்த போது மாடியிலிருந்து அலறிப் புடைத்துக்கொண்டு ஓடி வந்தாள் ரெஜினா. அம்மாவின் நாற்காலிக்குப் பின்னே பதுங்கிக்கொண்டு அவள் கைகளைப் பிடித்துக்கொண்டாள். பயந்து நடுங்கிய குரலில் தன்னை ஹோவ்டி துரத்துவதாகப் புலம்பினாள். அவளை அவர் கிள்ளுகிறாரர்ம். குத்துகிறாராம். பிடித்துத் தள்ளுகிறாராம். ஆபாச வார்த்தைகள் சொல்லுகிறாராம். அவளைக் கொன்றுவிடுவேன் என்று பயமுறுத்துகிறாராம்.

''அதோ! அதோ அவர் வந்துவிட்டார் அம்மா!'' என்று சமையலறைக் கதவைக் காட்டிக் கூச்சலிட்டாள். தடாலென்று கீழே விழுந்தாள். அவள் உடம்பு விலுக்விலுக்கென்று உதைத்துக் கொண்டது. காப்டன் ஹோவ்டி தன்னை உதைக்கிறாரென்று சொல்லி விம்மி அழுதாள்.

பிறகு திடீரென்று எழுந்து நின்றாள். கைகளிரண்டையும் அகல விரித்து நீட்டிக் கொண்டு கிறுகிறுவென்று பம்பரம்

மாதிரி சுழல ஆரம்பித்தாள். பல நிமிட நேரம் அப்படித் தட்டாமாலை சுற்றிய பிறகு சோர்ந்து தரையில் விழுந்தாள்.

வேதனையுடன் கூறினாள் கிறிஸ்டி. ''பிறகு திடீரென்று அவள் கண்களில்... கண்களில் வெறுப்பைக் கண்டேன்... குரோதம்... அவள்... அவள்...'' கிறிஸ்டிக்குத் தொண்டை அடைத்துக் கொண்டது. ''என்னை... என்னை ஒரு ஆபாச வார்த்தை சொல்லி...'' அவள் பேச்சு விம்மல்களாக வெடித்தது. முகத்தைக் கையால் பொத்திக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதாள். டாக்டர் க்ளைன் ஒரு டம்ளரில் தண்ணீர் எடுத்து வந்த அவளைக் குடிக்கச் சொன்னார்.

டாக்டர் டேவிட் விடை பெற்றுச் சென்றார். முதுகுத் தண்டு நீரைப் பரிசோதிப்பதற்கான கருவிகள் வந்தன. ரெஜினாவின் முதுகுப் பகுதியை ஊசி போட்டு மரக்கச் செய்த பின் டாக்டர் க்ளைன் நீர் எடுத்தார். ட்யூப்களைப் பத்திரமாக மருந்துப் பெட்டியில் வைத்துக் கொண்டார். ''நடு ராத்திரியில் ரெஜினா எழுந்து கொண்டு அமளி செய்தால் ஊசி போட வேண்டியிருக்கும். ஒரு நர்ஸ் வைத்துக் கொள்ளுங்கள்,'' என்றார்.

தனக்கு ஊசி போடத் தெரியும் என்றும் தானே பார்த்துக் கொள்வதாயும் காரியதரிசி ஷெரான் சொன்னாள்.

கிறிஸ்டி டாக்டருடன் புறப்பட்டாள் அவருடைய கிளினிக்குக்கு. விரிவாகச் சோதனைகள் செய்தார் டாக்டர். ஒரு கோளாறும் தெரியவில்லை. ''இனி மனத் தத்துவ டாக்டரிடம்தான் ஆலோசனை பெற வேண்டும்,'' என்றார்.

இரவு ஏழரை மணி சுமாருக்குக் கிறிஸ்டி வீடு திரும்பியபோது ஷெரான் இருக்கவில்லை.

மாடியிலிருந்த ரெஜினாவின் படுக்கையறைக்குப் போய்ப் பார்த்தாள். ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தாள் ரெஜினா. போர்வையில் சிறு சலசலப்புக்கூட இல்லை.

ஜன்னல் கதவு ஹோவென்று திறந்து கிடந்தது. எங்கிருந்தோ மூத்திர நாற்றம் வந்தது. காற்றோட்டம் இருக்கட்டும் என்று ஷெரான் கதவுகளைத் திறந்து வைத்திருக்க வேண்டுமெனக் கிறிஸ்டி எண்ணினாள். கதவுகளை மூடினாள். எங்கே போனாள் ஷெரான்?

கீழே திரும்பியபோது வேலைக்காரி வெளியே போய்விட்டுத் திரும்பியிருந்தாள்.

''எங்கே போயிருந்தாய்?'' என்று கேட்டாள் கிறிஸ்டி.

''அவர் சொல்லவில்லை?''

''எவர்?''

''டைரக்டர் பர்க். இங்கே இருந்தாரே? எங்கே அவர்?''

''பர்க் வந்திருந்தாரா என்ன!''

''டாக்டர் எழுதித் தந்த மருந்துகளை வாங்கக் கடைக்குப் போக வேண்டியிருந்தது. பர்க் வந்தார். அவரை ரெஜினாவைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டுக் கடைக்குப் போனேன். மனுஷன் இப்படியா சொல்லாமல் கொள்ளாமல் போவார்?''

**சா**ப்பாட்டுக்குப் பிறகு எல்லாரும் டெலிவிஷன் பார்த்துக்கொண்டிருந்தார்கள். மணி பதினொன்றேமுக்கால். டெலிபோன் மணி அடித்தது. கிறிஸ்டி எடுத்துப் பேசினாள். உதவி டைரக்டரொருவர் பேசினார். அவர் குரல் கனமாக இருந்தது.

''கிறிஸ்டி, உங்களுக்குச் செய்தி தெரியுமில்லையா?''

''என்ன செய்தி?''

''டைரக்டர் பர்க் இறந்து விட்டார்.''

குடித்திருந்தாராம். நடக்க முடியாமல் தடுமாறினாராம். வீட்டின் பின்புறமிருந்த செங்குத்தான படிகளில் கால் இடறிக் கீழே விழுந்தாராம். கழுத்து முறிந்து இறந்துவிட்டாராம்.

கிறிஸ்டியின் கையிலிருந்து டெலிபோன் நழுவி விழுந்தது. அவள் நிற்க முடியாமல் தள்ளாடினாள். உள்ளுக்குள் அழுகை குமுறிக்கொண்டு வந்தது.

இரவு பூரா நண்பரின் சாவைப் பற்றிய சொப்பனங்களே திரும்பத் திரும்ப வந்து கொண்டிருந்தன.

விடிகாலை ஐந்து மணிக்குச் சமையலறைக்குச் சென்றாள் ஏதாவது பானம் அருந்த வேண்டுமென்று. ஷெரான் ஐஸ் எடுத்து வருவதற்காகச் சென்றிருந்தாள்.

அவள் வரும் சத்தம் கேட்டது.

கிறிஸ்டி நிமிரிந்து பார்த்தாள். உறைந்து போனாள்.

ஷெரானின் பின்னே எட்டுக்கால் பூச்சி போல் மிக வேகமாக ஊர்ந்து வந்து கொண்டிருந்தாள் ரெஜினா. அவள் உடம்பு வில்லாக வளைந்திருந்தது. அவள் தலை பாதத்தைத் தொட்டுக் கொண்டிருந்தது. நாக்கு மீக நீளமாக வெளியே நீட்டிக்கொள்வதும் வாய்க்குள்ளே போவதுமாகத் துடித்துக் கொண்டிருந்தது - பாம்பு போலப் புஸ் புஸ்ஸென்ற சீறலுடன்!

ரெஜினாவையே வெறித்துப் பார்த்தபடி ''ஷெரான்!'' என்றாள் கிறிஸ்டி. குரல் அடைத்துக் கொண்டது.

ஷெரான் பின்புறம் திரும்பிப் பார்த்தாள். எதுவும் தெரியவில்லை. மறுகணம் ரெஜினாவின் நாக்கு பாம்பாக நீண்டு அவள் முழங்காலை நக்கியதும் வீரிட்டாள்.

கிறிஸ்டி பயத்தினால் வெளுத்துப் போனாள். ''டாக்டரைக் கூப்பிடு! உடனே கூப்பிடு! தூங்கிக் கொண்டிருந்தாலும் சரி, எழுப்பு!''

அடுத்த நாள்.

ரெஜினாவின் படுக்கையறைக்கு வெளியே கிறிஸ்டி காத்துக்கொண்டு நின்றாள். உள்ளே டாக்டர் கிளைனும் ஒரு நியூரோ ஸைக்கியாட்ரிஸ்டும் ரெஜினாவைப் பரிசோதனை செய்து கொண்டிருந்தார்கள்.

ரெஜினா துள்ளிக் கொண்டிருந்தாள். திமிறிக் கொண்டிருந்தாள். தலைமயிரைப் பிய்த்துக் கொண் டிருந்தாள். முகத்தை எட்டுக் கோணலாக்கிக் கொண்டாள். திடீரெனக் காதைச் செவிடாக்கும் சத்தத்தைக் கேட்ட மாதிரி செவிகளைப் பொத்திக் கொண்டாள்.

மனோ வைத்தியர் அவளைப் பிடித்ததும் வெறி பிடித்த மாதிரி கூச்சலிட்டாள். அவரைக் கடித்தாள். அடித்துக் குத்திச் சண்டை போட்டாள். அந்தண்டை தள்ளினாள். வேலைக் காரன் உதவியுடன் ஊசி போட்ட பிறகே சிறிது சாந்த மடைந்தாள். ''அம்மா எங்கே? என் அம்மா வேணும்,'' என்று விம்மினாள்.

டாக்டர் கிளைன் வெளியே சென்றார் கிறிஸ்டியை அழைத்து வர.

''சமர்த்துப் பாப்பால்ல?... இதோ அம்மா வருவாள்,'' என்றார் சைக்கியாட்ரிஸ்ட், படுக்கையில் அமர்ந்து அவள் தலையைக் கோதிவிட்டபடி.

''எனக்கு அம்மா வேணும்,'' என்று ரெஜினா விசித்தாள்.

''இதோ வருவாள். உனக்கு வலிக்கிறதா?''

அவள் தலையை அசைத்தாள். கண்ணீர் உருண்டு வழிந்தது கன்னங்களில்.

''எங்கே வலிக்கிறது?''

''எல்லா இடத்திலும். உடம்பு பூரா.'' ரெஜினா அழுதாள்.

''ரெஜினா! என் கண்ணே!'' - உள்ளே ஓடி வந்து மகளைக் கட்டிக்கொண்டாள் கிறிஸ்டி.

''அம்மா! அவர் என்னை அடிக்கிறார் அம்மா. அந்த ஆளை எப்படியாவது நிறுத்தும்மா.''

சைக்கியாட்ரிஸ்ட் ''யாரைச் சொல்றேம்மா?'' என்றார்.

''காப்டன் ஹோவ்டி... முன்னெல்லாம் நாங்க சிநேகிதமா இருந்தோம். இப்ப யாரோ எனக்குள்ளே புகுந்துட்ட மாதிரி இருக்கு...''

''ரெஜினா, நாம் இப்ப ஒரு விளையாட்டு விளையாட லாம்'' என்றார் சைக்கியாட்ரிஸ்ட். பைக்குள்ளிருந்து ஒரு செயினை வெளியே எடுத்தார் அவர். அதில் ஒரு பதக்கம் கோத்திருந்தது. ''ரெஜினா, ஹிப்னடைஸ் செய்வதை நீ சினிமாவில் பார்த்திருக்கிறாய் இல்லையா?''

பார்த்திருக்கிறேன் என்று தலையாட்டினாள் அவள்.

''என்னைப் பார். நான் ஒரு ஹிப்னாடிஸ்ட். எல்லாரையும் நான் மனோவசியம் பண்ணுவேன் - அதாவது அவர்கள் அதற்குச் சம்மதித்து இடம் கொடுத்தால். உன்னை ஹிப்னடைஸ் பண்ணினால் உன் உடம்பு குணமாகி விடும். உனக்குள் இருக்கிற அந்த ஆள் வெளியே வந்து விடுவான். என்ன, உன்னை ஹிப்னடைஸ் பண்ணட்டுமா? இதோ உன் அம்மா கூட இங்கே பக்கத்திலேயே இருப்பார்கள். என்ன சொல்றே?''

# 9

ஹிப்னடைஸ் பண்ணிக் கொள்ளச் சம்மதமா என்று மனோவைத்திய டாக்டர் கேட்டதும் ரெஜினா தாயின் முகத்தைப் பார்த்தாள்.

''சரின்னு சொல்லும்மா,'' என்றாள் கிறிஸ்டி.

ரெஜினா மனோ வைத்தியரைப் பார்த்துத் தலையசைத்தாள். ''ஆனால்... கொஞ்சம்தான் பண்ணணும்.''

மனோ வைத்தியர் புன்னகை செய்த அதே சமயம் திடீரென்று எதுவோ கீழே விழுந்து உடைகிற சத்தம் கேட்டது. வேலைப்பாடுள்ள ஒரு ஜாடி, டாக்டர் க்ளைன் கையை ஊன்றினாற்போல் நின்றிருந்த பீரோவிலிருந்து கீழே விழுந்திருந்தது. அவர் தன் கைகளையும் கீழே நொறுங்கிக் கிடக்கும் ஜாடியையும் மாறி மாறிப் பார்த்துத் திகைத்தார். பின்னர் பொறுக்குவதற்குக் குனிந்தார்.

''பரவாயில்லை டாக்டர். வேலைக்காரன் பார்த்துக் கொள்வான்,'' என்றாள் கிறிஸ்டி.

''அந்த ஜன்னல்களைச் சாத்தித் தாழ்ப்பாள் போடுகிறீர்களா க்ளைன்?'' என்றார் மனோவைத்தியர். ''திரைச் சீலைகளையும் இழுத்து விடுங்கள்.''

அறை இருட்டாயிற்று. சங்கிலியைத் தன் விரல் நுனியில் பிடித்துக் கொண்டார் மனோவைத்தியர். ரெஜினாவின் முகத்துக்கு முன்னால் பிடித்துப் பதக்கத்தை முன்னும் பின்னுமாகச் சரளமாய் ஆட்டலானார். அதன்மீது சிறிய 'பென்' டார்ச் ஒளியை வீசினார். அது பளபளத்தது. மனோவசியம் செய்வதற்கான வழக்கமான வாக்கியங்களைச் சொல்ல ஆரம்பித்தார்.

''இதோ, இதைப் பார் ரெஜினா. இதையே பார்த்துக்கொண்டிரு. கொஞ்சம் கொஞ்சமாய் உன் கண் இமைகள் கனக்க ஆரம்பிக்கும்...''

மிகச் சொற்ப நேரத்துக்குள்ளேயே ரெஜினா மனோவசியத்துக்கு மயங்கி விட்ட மாதிரி ஆனாள்.

''ரொம்பப் பலவீனமான மனம்,'' என்று மனோவைத்தியர் முணுமுணுத்தார். பிறகு ரெஜினாவிடம் பேச ஆரம்பித்தார். ''உன் வயசு என்ன, ரெஜினா?''

''பன்னிரண்டு.''

''உனக்குள்ளே யாராவது இருக்கிறார்களா?''

''சில சமயம்.''

''எப்போது?''

''விட்டு விட்டு... பல சமயங்களில்.''

''அது ஒரு ஆளா?''

''ஆமாம்.''

''யார்?''

''எனக்குத் தெரியலே.''

''காப்டன் ஹோவ்டியா?''

''தெரியல்லே.''

''ஆள்தானே?''

''தெரியல்லே.''

''ஆனால் அந்த ஆள் உள்ளே இருக்கிறான்?''

''ஆமாம், சில சமயம்.''

''இப்ப?''

''தெரியல்லே.''

''நான் அவனையே கேட்கிறேன். அவனைப் பேச விடுகிறாயா?''

''ஊகூம், வேண்டாம்.''

''ஏன்?''

''எனக்குப் பயமாயிருக்கு.''

''எதைப்பற்றி?''

''தெரியல்லே.''

''இதோ பாரம்மா ரெஜினா. அந்த ஆள என்னோடு பேசினால் உன்னை விட்டுப் போய் விடுவான் என்று நினைக்கிறேன். அவன் உன்னை விட்டுப் போகணும் என்று நீ விரும்புகிறாயா?''

''ஆமாம்.''

''அப்படியானால் அவன் என்னோடு பேசட்டும் பேச விடுகிறாயா?''

சிறிது தயக்கம் பிறகு

மனோ வைத்தியர் உறுதியான குரலில் சொல்லத் தொடங்கினார். ''ரெஜினாவுக்குள்ளே இருக்கும் ஆளுடன் நான் இப்போது பேசுகிறேன். நீ உள்ளே இருப்பது உண்மையானால் உன்னையும் இப்போது ஹிப்னடைஸ் பண்ணியிருக்கிறேன். நான் இப்போது கேட்கிற கேள்விகளுக்கு நீ பதில் சொல்லியாக வேண்டும். வெளியே வந்து பதில் சொல்லு, என்ன, நீ அங்கேதான் இருக்கிறாயா?''

நிசப்தம்.

பின்னர் ஒரு விந்தை நிகழ்ந்தது. திடீரென்று ரெஜினாவின் சுவாசம் நாற்றமாய் நாறிற்று. கெட்டியாய்

அலைபோல அந்த நாற்றம் வெளிப்பட்டது. இரண்டு அடி தள்ளி இருந்த மனோ வைத்தியருக்கு நாற்றம் அடித்தது. பென்லைட்டை ரெஜினாவின் முகத்தில் ஒளி பாய்ச்சினார்.

கிறிஸ்டிக்கு மூச்சடைத்தது. ரெஜினாவின் முகம் ஒரு கோரமான முகமூடியைப் போலத் திருகிக்கொண்டது. உதடுகள் இரண்டு கோடிக்கும் விறைப்பாக இழுத்திக் கொண்டன. ஓநாயின் நாக்கைப் போல அவள் நாக்கு வீங்கிப் புடைத்துக் கொண்டு ஆடியது.

''ஐயோ!'' என்று கிறிஸ்டி விம்மினாள்.

''ரெஜினாவுக்குள் இருக்கும் ஆள் நீதானா?'' என்றார் மனோவைத்தியர்.

ரெஜினா தலையாட்டினாள்.

''நீ யார்?''

கட்டைக் குரலில் பதில் வந்தது. ''ளொளளொளா.''

''அதுதான் உன் பெயரா?''

அவள் தலையாட்டினாள்.

''நீ ஆணா?''

''வைச்சுக்கோ.''

''கேட்டதற்குப் பதில் சொல்லு.''

''வைச்சுக்கோ.''

''என் கேள்விக்கு 'ஆமாம்' என்று பதிலானால் தலையை ஆட்டு.''

அவள் தலையாட்டினாள்.

''நீ அயல்நாட்டு மொழியில் பேசுகிறவனா?''

''இருக்கலாம்.''

''நீ எங்கேயிருந்து வருகிறாய்?''

''நாயிடமிருந்து.''

''நாயிடமிருந்து வருகிறதாகவா சொல்லுகிறாய்?''

''ளொளளொளா,'' என்று ரெஜினாவிடமிருந்து பதில் வந்தது.

மனோ வைத்தியர் ஒரு நிமிடம் யோசனையில் ஆழ்ந்தார். பிறகு வேறொரு முறையைக் கையாளத் தீர்மானித்தார். ''இதோ பார், நான் உன்னைக் கேள்வி கேட்கிறபோது உன் பதிலைத் தலையை ஆட்டித் தெரியப்படுத்து. ஆமாம் என்றால் மேலும் கீழுமாய் ஆட்டு. இல்லை என்றால் பக்கவாட்டாய் ஆட்டு. புரிகிறதா?''

புரிகிறது என்று ரெஜினா தலையாட்டினாள்.

''உன் பதில்களுக்கு ஏதாவது அர்த்தம் உண்டா?'' ஆமாம்.

''ரெஜினாவுக்குத் தெரிந்த ஆளா நீ?'' இல்லை.

''அவளுக்குத் தெரிந்தவர்களுக்குத் தெரிந்தவனா?'' இல்லை.

''அவளாகவே கற்பனை பண்ணி வைத்திருக்கிற ஆளா?'' இல்லை.

''நீ உண்மையான ஆளா?'' ஆமாம்.

''ரெஜினாவில் ஒரு பகுதியா?'' இல்லை.

''என்றைக்காவது ரெஜினாவின் ஒரு பகுதியாக இருந்ததுண்டா?'' இல்லை.

''அவளை உனக்குப் பிடித்திருக்கிறதா?'' இல்லை.

''வெறுக்கிறாயா?'' ஆமாம்.

''வெறுக்கும்படி அவள் ஏதாவது பண்ணினாளா?'' ஆமாம்.

''அவளுடைய அப்பாவும் அம்மாவும் விவாகரத்து செய்து கொண்டதற்காக ரெஜினாவை வெறுக்கிறாயா?'' இல்லை.

''அவள் அப்பா அம்மாவுக்கு இதிலே ஏதாவது சம்பந்தம் உண்டா?'' இல்லை.

''அவள் சினேகிதிகளுக்கு?'' இல்லை.

''ரெஜினாவுக்குத் தண்டனை கொடுத்துக் கொண்டிருக்கிறாயா?'' ஆமாம்.

''அவளுக்குத் தீமை செய்ய விரும்புகிறாயா?'' ஆமாம்.

''அவளைக் கொலை செய்ய விரும்புகிறாயா?'' ஆமாம்.

''அவள் செத்துப் போனால் நீயும் தானே செத்துப் போவாய்?'' இல்லை.

இந்தப் பதில் மனோவைத்தியரைக் கலக்கப்படுத்திய மாதிரி இருந்தது. யோசனையுடன் கண்களைத் தாழ்த்திக் கொண்டார். அவர் அசைந்த போது கட்டிலின் ஸ்பிரிங்குகள் கிறீச்சிட்டன. அந்த நிசப்தம் மூச்சுத் திணற வைப்பதாக இருந்தது.

''நீ அவளைவிட்டு வெளியேறும்படி ரெஜினா ஏதாவது செய்ய முடியுமா?'' ஆமாம்.

''என்ன செய்யலாமென்று சொல்லுவாயா?'' இல்லை.

''வந்து -''

திடுப்பென்று மனோவைத்தியர் தாள முடியாத வலியுடன் வீரிட்டுக் கூவினார். அவருடைய தொடை

இடுக்கை இரும்புக் கிடுக்கியால் அழுத்திய மாதிரி ரெஜினா தன் கையால் நசுக்கிக் கொண்டிருந்ததே காரணம். விடுவித்துக் கொள்ளத் திமிறினார். முடியவில்லை. அவர் விழிகள் தெறித்து விழுந்தன. ''கிளைன்! கிளைன்! என்னைக் காப்பாற்று!'' என்று தொண்டை அடைக்கக் கூவினார்.

# 10

பெருங்கூச்சல். தாள முடியாத வேதனையில் மனோவைத்திய டாக்டரின் அலறல்.

கிறிஸ்டி திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்து ஸ்விட்சை நோக்கித் தாவினாள். டாக்டர் கிளைன் ஓடிவந்தார் உதவிக்கு.

ரெஜினாவின் தலை பின்னுக்குச் சாய்ந்திருக்க, பேய் மாதிரி கெக்கெக்கே என்று கூவினாள். பின்னர் ஓனாய் போல உறுமினாள்.

கிறிஸ்டி ஸ்விட்சைத் தட்டி விட்டாள். திரும்பினாள். ஒரு பயங்கரப் படத்தை ஸ்லோமோஷனில் காணுகிற மாதிரி இருந்தது, ரெஜினாவும் டாக்டர்களும் படுக்கையில் துள்ளிப்புரண்டு கொண்டிருக்கிறார்கள். யாருடைய கைகள் யாருடைய கால்கள் என்று புரியாத வண்ணம் பின்னல்கள், மூச்சுத் திணறல்கள், திட்டுகள் - தொடர்ந்து ஊளை, குரைப்பு, நச்சுத்தனமான சிரிப்பு, ரெஜினாவின் கெக்கலி, ரெஜினாவின் கனைப்பு - இப்போது ஸ்லோ மோஷன் படம் வேகமாக ஓடத் தொடங்குகிறது. கட்டில் குலுங்குகிறது. இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாகக் கடுமையாய் நடுங்குகிறது. செய்வகை அறியாமல் கிறிஸ்டி பார்த்துக் கொண்டிருக்கையில் ரெஜினாவின் கண்கள் மேலே செருகிக் கொள்கின்றன. அவள்

அடிவயிற்றிலிருந்து ஒரு பீதிக் கூச்சல் புறப்பட்டு ரணமாகப் பீரிடுகிறது.

ரெஜினா சுருண்டு கசங்கி நினைவு இழந்து விழுந்தாள்.

இன்னதென்று சொல்லத் தகாத ஏதோவொன்று அந்த அறையை விட்டு வெளியே சென்றது.

ஒரு நிமிடம் யாரும் அசையவில்லை. மூச்சு விடுவதுகூட நின்றது. பிறகு மனோவைத்திய டாக்டரும் கிளைனும் மெல்ல, கவனமாகத் தங்களை விடுவித்துக் கொண்டனர். எழுந்து நின்றார்கள். ரெஜினாவை வெறித்துப் பார்த்தார்கள். சிறிது நேரத்துக்கு டாக்டர் கிளைனின் முகம் எவ்வித உணர்ச்சியும் காட்டவில்லை. ரெஜினாவின் நாடியைப் பிடித்துப் பார்த்தார். திருப்தியடைந்தவராக அவள்மீது போர்வையைப் போர்த்தினார். மற்றவர்களைப் பார்த்துத் தலையசைத்தார். எல்லோரும் அறையை விட்டு வெளியேறிக் கீழே வந்தார்கள்.

கொஞ்ச நேரத்துக்கு யாரும் எதுவும் பேசவில்லை. கிறிஸ்டி சோபாவில் உட்கார்ந்து கொண்டாள். இரண்டு டாக்டர்களும் அவளைப் பார்த்தாற் போல் உட்கார்ந்தார்கள். மனோவைத்தியர் தன் உதட்டைக் கிள்ளி விட்டுக் கொண்டபடி யோசனையில் ஆழ்ந்தவராக, காப்பி வைக்கும் சிறிய மேஜையை வெறித்து நோக்கிக் கொண்டிருந்தார். பிறகு ஒரு பெருமூச்சு விட்டவராகக் கிறிஸ்டியை நிமிர்ந்து நோக்கினார்.

''என்ன நோய் அவளுக்கு?'' என்று கிறிஸ்டி கேட்டாள். பந்தாகச் சுருண்டிருந்த கைக்குட்டையைப் பிரிப்பதும் சுருட்டுவதுமாக அவள் விரல் முட்டிகள் வெளுத்துப் போயின. ''ரெஜினாவுக்கு என்ன வியாதி பிடித்திருக்கிறது?''

''எனக்குக் கொஞ்சம் குழப்பமாயிருக்கிறது,'' என்றார் மனோவைத்தியர்.

''இருந்தாலும் ஏதாவதொரு ஐடியா உங்களுக்கு ஏற்பட்டிருக்க வேண்டுமே?'' கிறிஸ்டி அவரைத் துளைத்தெடுத்தாள்.

மனோவைத்தியர் ஒரு பெருமூச்சுடன் தன் புருவங்களைத் தடவிவிட்டுக் கொண்டார். ''வந்து... உங்கள் கவலை எனக்குப் புரிகிறது... ஆகவே எனக்குத் தோன்றிய இரண்டொரு தற்காலிகமான எண்ணங்களைச் சொல்கிறேன்.''

மனோதத்துவ டாக்டர் சொல்லிக் கொண்டே போனார் ''சில எண்ணங்களும் உணர்ச்சிகளும் விழிப்போடு இருக்கும் அறிவால் அடக்கி ஒடுக்கப்படுகிறபோது அவை ஒரேயடியாக அழிந்து போய் விடுகிறதில்லை. உள்மனத்துக்குள் பதுங்கிக் கொண்டு பலவகையான மனோவியாதிகள் மூலமாக வெளிப்படுவதற்கு முயற்சி செய்து கொண்டேயிருக்கின்றன. நோயாளியினுடைய மனம் மிகவும் பலவீனமாக இருந்தால் பைத்தியத்தில் போய் முடியலாம். சில பேர் விஷயத்தில் அந்த உணர்ச்சிகளும் எண்ணங்களும் ஒன்று சேர்ந்து தனியொரு ஆளாக உருவாகி நோயாளிக்குள் இருந்தபடி இயங்கிக் கொண்டிருக்கும். ரெஜினாவை பொறுத்தவரையில் ஃப்ராயிட் குறிப்பிட்ட ஹிஸ்டீரியாவின் உரு மாற்றம் இது என்று நினைக்கிறேன். குற்றம் செய்து விட்டோம் என்று அடிமனத்தில் குறுகுறுப்பு ஏற்பட்டுத் தன்னைத் தானே தண்டித்துக் கொள்ள இப்படி ஒரு வழியை ஏற்படுத்திக் கொள்வதுண்டு.''

அவர் சொன்னதைக் கிறிஸ்டி ஏற்றுக் கொள்ளத் தயாராய் இல்லை. ''ரெஜினா என்ன குற்றம் செய்தாள்? அப்படி ஒரு குறுகுறுப்பு ஏற்படக் காரணமே இல்லையே.''

டாக்டர் சொன்னார்: ''உங்கள் கணவருடன் விவாகரத்து ஏற்பட்டது அவள் மனத்தை வெகுவாக பாதித்திருக்கக்கூடும்.

ஏதோ ஒரு வகையில் அதற்குத் தானே காரணம் என்று தவறாக நினைத்துக் கொண்டு இப்படித் தன்னுள் வேற்று ஆள் உருவாகித் தன்னைத் தண்டிப்பதற்கு இடம் கொடுத்திருக்கக் கூடும்.''

ஒரு நர்ஸிங் ஹோமில் இரண்டு அல்லது மூன்று வாரம் ரெஜினாவை இருக்கச் செய்து மேலும் பல பரிசோதனைகள் நடத்துவது என்று தீர்மானம் ஆயிற்று.

டாக்டர்கள் புறப்பட்டுப் போனார்கள். தன் வேதனையை விழுங்கிக் கொண்டாள் கிறிஸ்டி.

மண்ணுக்குள் புதைக்கப்பட்டுள்ள டைரக்டர் பார்க்கின் ஞாபகம்... சாவு, புழு, சூனியம், சொல்ல முடியாத தனிமை, அசைவின்மை, இருள், எதுவுமே நகராமல், அசையாமல்... சிறிது நேரம் அவள் அழுதாள். பிறகு தன்னைத் தானே தேற்றிக் கொண்டாள்.

வேலைக்காரன் கார்ல் வந்தான். அவளைப் பார்க்க யாரோ வந்திருப்பதாக சொன்னான்.

''யாராம்?''

''டிடெக்டிவாம். ரகசியப் போலீஸ் ஆசாமி.''

''என்னையா பார்க்கணும் என்கிறார்?''

கார்ல் தலையை ஆட்டி ஒரு விசிட்டிங் கார்டை நீட்டினான். 'கிண்டர்மேன், லெப்டினன்ட், போலீஸ் கொலைப் பிரிவு' என்றிருந்தது. அவளுக்கு ஒரு சந்தேகம் உதித்தது. ''கையில் கதை கிதை மாதிரி ஏதாவது வைத்திருக் கிறாரா? பெரிய மணிலாக் காகித உறை இருக்கிறதா?'' என்று கேட்டாள். சினிமாவுக்கு ஏற்ற ஒரு நாவல் இருக்கிறது அல்லது நாவலுக்கான ஐடியா இருக்கிறது என்று சொல்லாத நபர் கிடையாது என்பது கிறிஸ்டியின் அனுபவம்.

இல்லையென்று தலையசைத்தான் கார்ல்.

கிறிஸ்டிக்குக் குறுகுறுப்பு ஏற்பட்டது. படியிறங்கிக் கீழே சென்றாள்.

டைரக்டர் பர்க்கின் மரணத்தைப் பற்றி விசாரிப்பதற்கு வந்திருப்பார்களோ?

ஹால் வாசலில் நின்றிருந்தார் அந்த டிடெக்டிவ். கொழுமொழுவென்று இருந்தார். ஐம்பது வயது இருக்கலாம். பாண்ட்டும் ட்வீட் கோட்டும் தொள தொளவென்றிருந்தன.

''வாடிக்கையான விசாரணை தான்... நீங்கள் பிஸியாயிருக்கிறீர்களோ? அப்படியானால் நான் நாளை வருகிறேன்,'' என்றார்.

புறப்பட்டுப் போகிறவர் மாதிரி அவர் திரும்பினார். ஆனால் கிறிஸ்டி கவலையுடன், ''பர்க்கைப்பற்றிய விஷயமா?'' என்றாள். டிடெக்டிவின் அலட்சியமான சாவதானம் அவளை இன்னும் பதைக்க வைத்தது.

''த்சு, த்சு, ரொம்பப் பரிதாபம்!'' என்று அவர் பெருமூச்சு விட்டபடி கண்களைத் தாழ்த்திக்கொண்டு தலையசைத்தார்.

''பர்க் கொலை செய்யப்பட்டாரா என்ன?''

''இல்லை இல்லை இல்லை. சும்மா வாடிக்கையான விசாரணைக்குத்தான் வந்தேன்,'' என்றார் அவர் மறுபடியும். ''அவர் ஒரு பெரிய புள்ளியாச்சே? தெருவில் இறந்து போனதை நாங்கள் சும்மா விட்டு விட முடியுமா? முடியவில்லை.'' தான் ஏதும் செய்ய முடியாத நிலையிலிருப்பதை அவர் பார்வை வெளிப்படுத்தியது. ''இரண்டொரு கேள்விகளாவது கிளம்பும். அவராகவே

விழுந்தாரா? யாராவது அவரைப் பிடித்துத் தள்ளினார்களா? இதெல்லாம் தெரிய வில்லையே?''

''அவரிடமிருந்து ஏதாவது கொள்ளையடிப் பதற்காக...''

''இல்லை, திருட்டு எதுவுமே நடக்கவில்லை. ஆனால் இந்த நாளில் கொலைக்குக் காரணம் வேண்டுமா என்ன? எல்எஸ்டி அது இது என்று பலவிதமான போதை மருந்துகள்...'' அவர் குரலில் வருத்தம் தோய்ந்திருந்தது. ''நான் ஒரு தகப்பன். குழந்தைகள் நடந்து கொள்கிற விதத்தைப் பார்த்தால் என் மனசு உடைந்து விடுகிறது. உங்களுக்குக் குழந்தைகள் இருக்கிறதா?''

''ஆமாம், ஒன்று.''

''பிள்ளையா?''

''பெண்...'' கிறிஸ்டி பொறுமை இழக்கலானாள். ''உள்ளே வாருங்கள். உட்கார்ந்து பேசலாம்,'' என்றாள்.

அவளுக்குப் புதிய பயம் ஒன்று பிடித்துக்கொண்டது.

# 11

டிடெக்டிவ் அதிகாரி கிண்டர்மான், கிறிஸ்டியின் வீட்டிலுள்ள ஒவ்வொருவரையும் சந்தேகத்துடன் பார்ப்பது கிறிஸ்டிக்குத் தெரிந்தது.

''வயிறு கொஞ்சம் சரியாயில்லை... சோடா இருக்குமா உங்களிடம்? இல்லாவிட்டால் பரவாயில்லை. நான் தொந்தரவு செய்வதாக எண்ணாதீர்கள்?''

''தொந்தரவு எதுவுமில்லை. உட்கார்ந்திருங்கள்.'' கிறிஸ்டி சமையலறையை நோக்கி நடந்தாள். ''ஃப்ரிஜ்ஜிலிருந்து எடுத்து வருகிறேன்.''

''நானே சமையலறைக்கு வருகிறேன். உங்களுக்கு ஏன் சிரமம்?''

''சிரமம் எதுவுமில்லை.''

''இல்லையில்லை. நீங்கள் பிஸியாயிருக்கிறீர்கள். நான் வருகிறேன். குழந்தைகள் இருக்கிறதில்லையா உங்களுக்கு?'' என்றபடி பின்னால் வந்தார் டிடெக்டிவ். ''அட, அதுதான் நீங்கள் அப்பவே சொன்னீர்களே பெண் இருப்பதாக? ஒரு குழந்தைதானா?''

''ஒன்றுதான்.''

''என்ன வயசு?''

''பன்னிரண்டு.''

கிறிஸ்டி ஃப்ரிஜ்ஜைத் திறந்து அவருக்கான பானத்தை எடுத்துத் தந்தாள். கிண்டர்மான் அவளுடைய திரைப் படங்களைப்பற்றிச் சுற்றி வளைத்து ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார். கிறிஸ்டி நீட்டிய கிளாஸை ஒரே மடக்கில் காலி செய்தார். ''அருமை, அருமை,'' என்று திருப்தியுடன் பாராட்டிய வண்ணம் கிளாஸை ஓரமாக வைத்தார். ரெஜினா செய்து வைத்திருந்த பறவைப் பொம்மையின் மீது அவர் பார்வை சென்றது. ''வேடிக்கையான பொம்மை.'' அவர் புன்னகை செய்தார். ''நன்றாயிருக்கிறது.'' அவளை நிமிர்ந்து நோக்கினார். ''சிற்பி யார்?''

''என் பெண்,'' என்றாள் கிறிஸ்டி.

''ரொம்ப நன்றாயிருக்கிறது.''

''வந்து... நீங்கள் வந்த வேலை...''

கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டார். ''மிஸ்டர் பர்க்கின் படப்பிடிப்பு வேலைகள் இந்த வட்டாரத்தில்தான் இருந்தது. ஆகையால், விபத்து நடந்த இரவு இந்தப் பக்கம் யாரையாவது பார்க்க வந்திருக்கலாமோ என்று எங்களுக்கு ஓர் எண்ணம். உங்களைத் தவிர இந்த வட்டாரத்தில் அவருக்குச் சிநேகிதர்கள் யாராவது உண்டா?''

''அன்று இரவு அவர் இங்கேதான் வந்திருந்தார்,'' என்று கிறிஸ்டி தெரிவித்தாள்.

''அப்படியா?'' அவர் புருவங்கள் மேல்நோக்கி வளைந்தன. ''விபத்து நேரிட்ட டயத்திலா?''

''எத்தனை மணிக்கு விபத்து நேர்ந்தது?''

''ஏழு மணி சுமாருக்கு.''

''ஆமாம், அந்த நேரத்தில் தான்.''

நாற்காலியிலிருந்து எழுந்து கொள்கிற மாதிரி பாவனை செய்தார் அவர். ''குடி போதையில் இருந்திருக்கிறார். இங்கிருந்து புறப்பட்டவர், மாடியில், வீட்டுக்கு வெளிப் புறமாய் ஜன்னலருகே இருக்கும் செங்குத்தான மாடிப்படியில் உருண்டு விழுந்து இறந்திருக்கிறார். அப்படித்தானே? ரைட்.''

தன் வீட்டின் பின்னாடியே பர்க்கின் மரணம் நேர்ந்திருக்கிறது என்பது கிறிஸ்டிக்கு அதிர்ச்சியாயிருந்தது.

''எத்தனை மணிக்கு அவர் இங்கேயிருந்து புறப்பட்டார் என்று சொல்ல முடியுமா?'' என்றார் டிடெக்டிவ்.

''என் பெண்ணுக்கு உடம்பு சுகமில்லை. அவளுக்கு மருந்து வாங்குவதற்காக பர்க்கை இங்கே விட்டு விட்டு என் காரியதரிசி ஷெரான் போயிருக்கிறாள். நான் வீடு திரும்பிய போது பர்க் போய்விட்டிருந்தார்.''

''அவளைத் தனியாய் விட்டு விட்டா அவர் போய்விட்டார்?''

''ஆமாம்.''

''வேலைக்காரர்கள்?''

''இல்லை. வில்லியும் கார்லும் வெளியே போயிருந்தார்கள். கார்ல் அதோ இருக்கிறான். வில்லி அவன் மனைவி,'' என்றாள் கிறிஸ்டி.

''வந்து... உங்கள் பெண்ணுக்குத் தெரிந்திருக்கும் இல்லையா, பர்க் எப்போது இங்கிருந்து புறப்பட்டார் என்று?''

''தெரிந்திருக்காது. அவளுக்கு பலமான தூக்க மருந்து கொடுத்திருந்தது.''

''அடடே! அடடே!'' அவர் கண்களில் கவலை எழுந்தது. ''உடம்பு ஸீரியஸா?''

''ஆமாம். கொஞ்சம் அப்படித்தான்.''

''என்ன உடம்பு...'' அவர் துளைத்தார்.

''இன்னும் தெரியவில்லை.''

''குளிர் காற்று உள்ளே வராதபடி பார்த்துக் கொள்ளுங்கள்,'' என்று எச்சரித்தார் அவர்.

கிறிஸ்டி வெறுமையாக அவரைப் பார்த்தாள்.

''அதோ அங்கே இருப்பது தானே அவள் படுக்கை யறை?'' சுட்டிக் காட்டினார் அவர். ''படிக்கட்டுக்குப் பக்கமாய் பெரிய ஜன்னல் கூட இருக்கிறதே...''

கிறிஸ்டி தலையை ஆட்டினாள்.

''அந்த ஜன்னலை மூடியே வையுங்கள். உடம்பு சரியாகும்.''

''அது எப்பவுமே மூடி, எப்பவுமே தாழ்ப்பாள் போட்டுத் தான் இருக்கிறது,'' என்றாள் கிறிஸ்டி.

காகிதத்தைப் பையில் திணித்துக் கொண்டபடி எழுந்தார். ''சரி, அப்புறம் பார்க்கிறேன்.''

கிறிஸ்டியும் எழுந்து கொண்டாள். ''நான் இரண்டு மூன்று வாரம் ஊரிலே இருக்க மாட்டேன்.''

''அவரும் ஒன்றுமில்லை, அவசரம் ஒன்றுமில்லை,'' என்றார் அவர். அந்தப் பறவைப் பொம்மையைப் பிரியத்துடன் பார்த்துப் புன்னகை செய்தார். ''கெட்டிக்காரப் பெண், ரொம்பக் கெட்டிக்காரப் பெண்.'' குனிந்து அதை எடுத்து, கட்டை விரலால் பொம்மையின் மூக்கைத் தடவினார்.

கிறிஸ்டி அவரை வழியனுப்பி வைத்தாள்.

வீட்டுக்கு எதிரே சிறிது தள்ளி நின்றிருந்த போலீஸ் வண்டியை நோக்கிக் கிண்டர்மான் சென்றார். உள்ளே ஏறுமுன் வீட்டை ஒரு முறை திரும்பிப் பார்த்தார். ரெஜினாவின் படுக்கையறை ஜன்னலருகே விருட்டென்று ஓர் உருவம் தோன்றி மறைகிற மாதிரி இருந்தது. நிச்சயமாய்த் தெரியவில்லை. மசமசவென்று இருந்தது. வேடிக்கைதான். ஜன்னலின் கதவுகள் திறந்திருந்தன. அவர் முகம் கறுத்தது. காரில் ஏறியமர்ந்தவர் ஸ்டியரிங்குக்குப் பக்கத்து அறையைத் திறந்தார். ஒரு பழுப்புக் காகித உறையையும் ஒரு பேனாக் கத்தியையும் எடுத்தார். கத்தியைப் பிரித்தார். தன் பெருவிரலைக் காகித உறைக்குள் வைத்துக்கொண்டு நகத்தை மெல்ல மெல்லச் சுரண்டினார். நகத்தில் ஒட்டியிருந்த ரெஜினாவின் பொம்மையின் பெயிண்ட் பொடிகள் விழுந்தன. நன்கு சுரண்டிய பிறகு தலையசைத்து, கார் போகலாமென்று உத்தரவு கொடுத்தார். காகித உறையைப் பத்திரமாக மடித்து வைத்துக் கொண்டார்.

அன்று சாயந்தரம், டிடெக்டிவ் கிண்டர்மான் தனது அலுவலகத்தில் தான் சேகரித்த விவரங்களை ஒன்று கூட்டி ஆராய்ந்து கொண்டிருந்தார்.

பர்க்கின் மரணம் பற்றிய வைத்திய பரிசோதனை ரிப்போர்ட் அவர் முன்னிருந்தது.

'முதுகெலும்பு கிழிந்திருக்கிறது. கழுத்தும் மண்டையோடும் உடைந்திருக்கிறது. பல இடங்களில் வெட்டுக் காயம்...'

வைத்தியப் பரிசோதனை செய்தவரிடம் தான் பேசியது அவருக்கு நினைவு வந்தது. ''கீழே விழும்போது இந்தக் காயங்கள் ஏற்பட்டிருக்க முடியுமா?''

''ஊகூம்...''

''வேறே யாரோ ஒருத்தர் இப்படிக் காயங்கள் ஏற்படுத்தியிருப்பாரா?''

''இருக்கலாம். ஆனால் அபார வலுவுள்ள ஆளாக இருந்திருக்க வேண்டும்,'' என்று கூறியிருந்தார் அவர்.

அடுத்து, போலீஸ் சைகாலஜிஸ்டின் ரிப்போர்ட் ஒன்று டிடெக்டிவின் கண் முன் பட்டது. ஹோலி ட்ரினிடி சர்ச்சில் அண்மையில் கண்டெடுக்கப்பட்ட ஆபாச அசிங்கங்களைப் பற்றிய விவரம் அது.

கிண்டர்மான் புரட்டிக் கொண்டே வந்தார். கடைசியில் ஒரு பாரா அடிக்கோடிட்டுத் தரப்பட்டிருந்தது: உயிர்ப் பலி கொடுப்பதைப் பற்றிய தகவல் அது. அதை மெதுவாகப் படித்தார். படித்து முடித்த போது அவர் முகம் கறுத்தது. தலையை அசைத்துக்கொண்டார். பிறகு சவக்கிடங்குக்குப் புறப்பட்டார்.

இளம் காவல்காரனொருவன் கிண்டர்மான் வந்ததும் எழுந்துகொண்டான்.

''பர்க்கின் உடலைப் பார்க்கணும்.''

பனிப் பெட்டிக்குள் வரிசை வரிசையாக உறங்கும் உடல்களிடம் அழைத்துச் சென்றான் அவன். 32 ம் எண்ணுள்ள பெட்டியருகே அவர்கள் நின்றார்கள். முகத்தில் எவ்வித உணர்ச்சியும் அற்றவனாகப் பெட்டியை வெளியே இழுத்தான்.

ஒரு நிமிடம் கிண்டர்மான் வெறித்து நோக்கியவாறு இருந்தார். பிறகு மெதுவாக, மிருதுவாக சவத்தைப் போர்த்தியிருந்த துணியை உருவினார். பார்த்தார். முன்னேயே ஒருமுறை பார்த்ததுதான். இருந்தாலும் தான் பார்ப்பதை அவரால் நம்ப முடியவில்லை.

சவத்தின் தலை முழுக்கத் திரும்பியிருந்தது - முதுகை முகம் பார்க்கிற மாதிரி.

# 12

**கா**க்கி அரை நிஜாரும் ஷர்ட்டும் அணிந்தவராகக் கராஸ் பாதிரியார் அந்த நீளவட்டமான மைதானத்தில் சுற்றிச் சுற்றி ஓடி வந்துகொண்டிருந்தார், தேகப் பயிற்சிக்காக. இதயத்தைக் கவ்வியிருந்த துயர உணர்வுகள் மெல்ல விலகிக் கொண்டிருந்தன. இருபது சுற்றாயிற்று... இன்றும் இரண்டு...

ஒரு வளைவில் திரும்பும்போது கராஸ் கவனித்தார்: தமது பாண்ட்டையும் ஸ்வெட்டரையும் துவாலையையும் கழற்றி வைத்திருந்த இடத்தில் ஒரு நடுத்தர வயது மனிதர் உட்கார்ந்திருந்தார். அவர் தம்மையே கவனித்துக் கொண்டிருக்கிறாரென்று கராஸுக்குத் தோன்றியது.

*அவர் எழுந்து வந்தார். ''தாங்கள் தானே கராஸ் பாதிரியார்?''*

*''ஆமாம். நீங்கள்?''*

*''கிண்டர்மான்.'' தமது போலீஸ் அடையாளக் கார்டைக் காட்டினார் அவர். ''நீங்கள் குத்துச் சண்டைக்காரர் மாதிரி இருப்பீர்கள் என்று சொன்னார்கள். அப்படித்தான் இருக்கிறீர்கள். குத்துச் சண்டை போடுவதுண்டா, ஃபாதர்?'' இருவரும் நடந்தபடி பேசினார்கள்.*

*''சர்ச்சில் ஆபாசங்கள் நடைபெற்றிருக்கிறதே, அதைப் பற்றி விசாரிக்க வந்தீர்களா?'' என்றார் கராஸ்.*

*''ஆமாம் ஃபாதர்,'' என்றார் டிடெக்டிவ் ஆச்சரியத்துடன். ''அத்துடன் இல்லை. இன்னொரு ஸீரியஸான விஷயம்...''*

*''கொலை?''*

*''ஆமாம். ஃபாதர்... இது நமக்குள் அந்தரங்கமான விஷயம். இங்கே படம் எடுத்துக் கொண்டிருந்தாரே டைரக்டர் பர்க். அவரைத் தெரியுமா?''*

*''பார்த்திருக்கிறேன்.''*

*''அவர் எப்படி இறந்து போனார் என்று தெரிந்திருக்குமே?''*

*''பேப்பரில் பார்த்தேன்.''*

*''அது ஓரளவுதான் உண்மை... வந்து... உங்களுக்குப் பில்லி சூனியத்தில்... பழக்கம் உண்டா ஃபாதர்?''*

*''அதைப்பற்றி நான் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதியிருக்கிறேன் - மனத்தத்துவக் கோணத்தில்...''*

''கொஞ்சம் பெஞ்ச்சில் உட்காரலாமா?''

கராஸ் பாதிரியார் உட்கார்ந்து, துவாலையால் தன் முகத்து வியர்வையைத் துடைத்துக் கொண்டார்.

டிடெக்டிவ் சற்று நேரம் மௌனமாயிருந்த பின் பாதிரியாரின் முகத்தை நேராக நிமிர்ந்து பார்த்துச் சொன்னார்: ''டைரக்டர் பர்க் சரியாய் ஏழடித்து ஐந்து நிமிடமாகியிருந்த போது அந்த உயரமான மாடிப்படியின் அடியில் விழுந்து கிடந்தார். அவர் தலை அடியோடு முதுகுப் புறமாகத் திரும்பியிருந்தது.''

கராஸ் பாதிரியார் தன் முகத்தைத் துடைத்துக் கொள்வதை நிறுத்திக் கொண்டார். ''கீழே விழுந்ததால் அப்படி நேர்ந்திருக்காதா?''

''நேர்ந்திருக்கலாம்... ஆனால் ரொம்ப அரிது... பில்லி சூனியம் சம்பந்தப்பட்டிருக்குமோ என்று...''

பாதிரியார் சொன்னார்: ''பில்லி சூனியக்காரர்களின் கழுத்தைத் துர்த்தேவதைகள் அந்த மாதிரி திருகிக் கொல்லுவதுண்டு என்று ஒரு கட்டுக்கதை சொல்வார்கள்...''

''அது கட்டுக்கதைதானா ஃபாதர்?'' என்றார் டிடெக்டிவ். ''சர்ச்சில் நடைபெறும் ஆபாசங்களுக்கும் இந்தக் கொலைக்கும் சம்பந்தம் இருக்கலாமோ என்று நினைத்தேன்... யாராவது புத்திசாலித்தனமில்லாத பாதிரியார் இதைச் செய்திருக்கக் கூடுமோ?... நீங்கள் இங்கே இருப்பதால் உங்களுக்குத் தெரிந்திருக்குமே என்று பார்த்தேன்...''

''தெரியாது. அத்துடன், எனக்கு வேலை மாற்றல் வந்திருக்கிறது. விரைவில் நான் வேறிடத்துக்குப் போகிறேன்,'' என்ற பாதிரியார் தமது உடைகளை மாட்டிக் கொண்டார்.

''அவ்வளவுதான் சொல்ல முடியுமா?'' டிடெக்டிவுக்குப் புறப்படவே மனம் வரவில்லை.

''நான் எதையும் உங்களிடமிருந்து மறைக்கவில்லை. நீங்கள் நினைப்பது போன்ற மனக் கோளாறுள்ள பாதிரியார் யாராவது இந்த வட்டாரத்தில் இருந்தால் நிச்சயமாக உங்களுக்குச் சொல்லியிருப்பேன். அவர் பெயரைச் சொல்லா விட்டாலும் அப்படி ஓர் ஆள் இருக்கிறது என்றாவது சொல்லியிருப்பேன்.''

இருவரும் காரை நோக்கி நடந்தார்கள்.

''ஃபாதர், ஒரு கேள்வி: பில்லி சூனியக்காரர்கள் தங்கள் சடங்குகளுக்காக உயிர்ப் பலி கொடுக்கிறார்களாமே, அதெல்லாம் உண்மையா? சிசுக்கள் பிறக்கிற சமயத்தில் அதனிடமிருந்து ரத்தம் எடுத்து உபயோகிக்கிறார்களாமே?'' தான் படித்த விஷயங்களைச் சொன்னார் டிடெக்டிவ்.

''பலியைப் பற்றி எனக்குத் தெரியாது,'' என்றார் கராஸ் பாதிரியார். ''ஆனால் ஸ்விட்சர்லாந்தில் ஒரு மருத்துவச்சி, சாத்தான் வழிபாட்டுக்காக முப்பது நாற்பது சிசுக்களைக் கொலை செய்ததாக ஒப்புக்கொண்டதுண்டு. மெல்லிய, நீளமான ஊசியைக் கைக்குள் மறைத்து வைத்திருப்பாளாம். குழந்தை பிரசவமாகும் சமயம் அதன் தலையில் ரகசியமாய்க் குத்திவிட்டு ஊசியைப் பழையபடி மறைத்துக் கொண்டு விடுவாளாம். ஓர் அடையாளமும் தெரியாதாம். குழந்தை இறந்தே பிறந்த மாதிரி இருக்குமாம். ஜெர்மனியில் ஓர் ஆள் இருபது முப்பது குழந்தைகளைக் கொலை செய்ததுண்டு. தன் மருமகள்கள் இரண்டு பேரின் மூளைகளைத் தின்று கொண்டிருந்தபோது அவனைப் பிடித்துவிட்டார்கள்.''

இருவரும் கார் நிறுத்தப்பட்டிருந்த இடத்தை அடைந்தார்கள். கராஸ் பாதிரியைத் தன் போலீஸ் காரில்

ஏற்றிக் கொண்டு அவருடைய இருப்பிடத்தில் கொண்டு போய் விட்டார் டிடெக்டிவ். ''ஃபாதர், ஒரு கோரிக்கை. ஆபாசமான வாசகங்கள் எழுதிய கார்டு ஒன்று சர்ச்சில் கண்டெடுத்தார்களாமே. அது எனக்கு வேண்டும்.''

பாதிரியார் அதை எடுத்து வந்து தந்தார்.

அன்று மாலை டிடெக்டிவுக்கு ரசாயனப் பரிசோதனை ரிப்போர்ட்கள் வந்தன. ரெஜினாவின் பொம்மையிலிருந்து சுரண்டியெடுத்த பெயிண்ட்டும், சர்ச்சில் ஆபாசப்படுத்தப் பட்ட கன்னி மேரியின் சிலையிலிருந்து எடுத்த பெயிண்ட்டும் ஒன்றேபோல் இருக்கின்றன என்றது அந்த ரிப்போர்ட்.

**மே** மாதம் பதினொன்றாம் தேதி வைத்திய விடுதி யிலிருந்து ரெஜினாவுடன் வீடு திரும்பிவிட்டாள் கிறிஸ்டி.

ரெஜினாவைப் படுக்கையில் கிடத்தினார்கள். ஜன்னல் கதவுகளுக்குப் பூட்டுப் போட்டார்கள். அவளுடைய படுக்கையறையிலும் பாத்ரூமிலும் இருந்த முகம் பார்க்கும் கண்ணாடிகள் அனைத்தையும் அகற்றினார்கள்.

ரெஜினாவுக்கு மயக்க நிலை ஏற்படும்போது எப்படி சுவாசக் குழாய்களையும் உணவுக் குழாய்களையும் பொருத்த வேண்டும் என்பதை டாக்டர் கிளைன் விளக்கிக் கொண்டிருந்தார். ஆனால் கிறிஸ்டியின் நினைவெல்லாம் ஆஸ்பத்திரியில் டாக்டர்கள் சொன்னதைப் பற்றியே சுழன்று கொண்டிருந்தது.

'... நோயாளியின் மனத்துக்குள்ளே ஒரு போராட்டம், குற்ற உணர்வு, முதலில் ஏற்படுகிறது. அதன் விளைவாகத் தன் உடம்புக்குள்ளே யாரோ அன்னிய நபர் புகுந்துவிட்டதாகக் கற்பனை செய்துகொள்ளத் தொடங்குகிறார்கள்... இதைத்தான் 'பேய் பிடித்திருக்கிறது' என்று முன் காலத்தில்

சொன்னார்கள். இந்தக் காலத்தில், இறந்தபோன ஒருவர் - நோயாளிக்குத் தெரிந்தவர் அல்லது நோயாளியைப் பார்த்திருப்பவர் - அவருடைய ஆவி புகுந்திருக்கிறது என்று சொல்கிறோம். நோயாளி, அந்தப் புது நபரின் குரல், நடையுடை பாவனைகளை இமிடேட் செய்வார். சில சமயம் அந்த நபரின் முகத் தோற்றம் கூட நோயாளியின் முகத்தில் தெரியத் தொடங்கும்...'

ஏற்பாடுகளைச் செய்து கொடுத்துவிட்டு டாக்டர் கிளைன் புறப்பட்டுச் சென்றார். கிறிஸ்டி, திரைப்பட ஏஜெண்ட்டுக்குப் போன் செய்து புதுப் படத்தில் பங்கு கொள்ள இயலாது என்பதைத் தெரிவித்திருந்தாள். குறி பார்க்கும் திருமதி பெர்ரினுக்குப் போன் பண்ணினாள். அந்த அம்மாள் வெளியே போயிருந்தாள். கிறிஸ்டிக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. யாரிடமாவது ஆலோசனை கேட்டு உதவி பெற வேண்டும் என்று அவள் மனம் பதைத்தது. ஆஸ்பத்திரியில் டாக்டர்கள் சொன்ன தகவல் மீண்டும் அவள் நினைவுக்கு வந்தது.

'இறந்து போனவரின் ஆவி புகுந்திருப்பதாக உள்ள கேஸ்களை கையாளுவது சுலபம். அது அவ்வளவு கொடூரமாகவோ பயங்கரமாகவோ இருக்காது. ஆனால் இந்த மாதிரி பேய் பிடித்ததாக நம்பப்படும் கேஸ்களில் உடலுக்குச் சொந்தக்காரரைச் சேதப்படுத்துவதில், சித்திரவதை செய் வதில், ஏன் கொலைக் கூடச் செய்வதில், அது முனைப்பாக இருக்கும்.'

# 13

ரெஜினாவின் கைகால்களைக் கட்டுவதற்கு நாடாக்கள் வந்து சேர்ந்தன. கிறிஸ்டி நடைப் பிணமாய்ப் பார்த்துக்கொண்டு நிற்க, வேலைக்காரன் கார்ல் அந்த நாடாக்களைக் கொண்டு ரெஜினாவின் மணிக்கட்டையும் கட்டிலின் முனைகளையும் சேர்த்துக் கட்டினான். ரெஜினாவின் தலையணையைச் சரியாக வைத்தாள் கிறிஸ்டி. குழந்தையின் முகத்தைப் பார்க்கக் கார்லுக்குப் பரிதாபமாயிருந்தது. ''குணமாகி விடுவாளா அம்மா?'' என்றான் கிறிஸ்டியிடம்.

ஆனால் அவளால் பதில் கூற முடியவில்லை. அவன் பேசிக் கொண்டிருக்கையில் ரெஜினாவின் தலையணையின் கீழே வைக்கப்பட்டிருந்த ஒரு பொருள் அவள் கைக்குத் தட்டுப்பட்டது. வெளியே எடுத்தாள்.

''யார் இந்தச் சிலுவையை இங்கே வைத்தது?'' என்று அதட்டினாள்.

கார்ல் தான் இல்லையென்று தலையசைக்கவே, சமையற் கட்டுக்குச் சென்றாள். ஷெரான் தன் டைப்ரைட்டரை அங்கே மேஜை மீது எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள். வேலைக்காரி வில்லி கேரட் நறுக்கிக் கொண்டிருந்தாள்.

''ஷெரான், யார் இந்தச் சிலுவையை ரெஜினாவின் தலையணைக்குக் கீழே வைத்தது?'' கிறிஸ்டி கோபத்துடன் கேட்டாள்.

''என்னது? சிலுவையா? நானில்லை,'' என்றாள் ஷெரான்.

''பின்னே...''

''நானும் வைக்கவில்லை,'' என்றாள் வேலைக்காரி.

''டாமிட்!'' என்று கிறிஸ்டி வெடித்தாள். ''யாரோ இதை வைத்திருக்கிறார்கள். யார்?''

ரிஃப்ரிஜிரேட்டரிலிருந்து ஐஸ் எடுப்பதற்காக உள்ளே வந்தான் கார்ல். ''மறுபடியும் கேட்கிறேன். நீ வைத்தாயா?'' கிறிஸ்டியின் குரல் கோபத்தில் கிரீச்சிட்டது.

''இல்லை அம்மா,'' அவன் அமைதியாகப் பதிலளித்தான்.

''அதென்ன, இறக்கை முளைத்தா அங்கே பறந்து வந்தது? உங்களில் யாரோ ஒருவர் பொய் சொல்கிறீர்கள்!'' அவள் குரலில் கொந்தளித்த கோபம் அந்த அறையையே உலுக்கியெடுத்தது. ''யார் வைத்தது? இப்ப சொல்லப் போகிறீர்களா இல்லையா?'' பொத்தென்று நாற்காலியில் விழுந்தாள் அவள். நடுங்கும் கைகளில் முகத்தைப் பொத்திக் கொண்டு விம்மி விம்மி அழலானாள். ''ஸாரி! ஸாரி! என்ன பேசுகிறோமென்று எனக்குத் தெரிய மாட்டேனென்கிறது! கடவுளே! கடவுளே!''

வில்லியும் கார்லும் மௌனமாக அவளைப் பார்த்துக் கொண்டு நிற்க, ஷெரான் மெல்ல வந்து அவள் முதுகை ஆறுதலாகத் தடவிக் கொடுத்தாள். ''ஒன்றுமில்லை... ஒன்றுமில்லை. அமைதியாயிருங்கள்...''

ஜாக்கெட் நுனியினால் முகத்தைத் துடைத்துக் கொண்டாள் கிறிஸ்டி. ''ஆமாம்... யார் வைத்திருந்தால் என்ன... எனக்கு உதவி செய்யவேண்டுமென்ற நல்ல எண்ணத்தோடுதானே செய்திருக்கிறார்கள்...''

டாக்டர் கிளைனின் யோசனையின்படி பெரிய ஆஸ்பத்திரியில் ரெஜினாவைக் கொண்டு போய்க் காட்டியதும், அவர்கள் ரெஜினாவை மனநோய் ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டும் என்று சொன்னதும் அவளுக்கு ஞாபகம் வந்தது. ''முடியாது! முடியவே முடியாது! அவளை என் பார்வையிலிருந்து போகும்படி விடவே மாட்டேன்!'' என்று உறுதியாகச் சொல்லிவிட்டாள். ''இந்தப் பெரிய ஆஸ்பத்திரியில் எண்பத்தெட்டு டாக்டர்கள் இருக்கிறீர்கள்! என் குழந்தைக்கு இன்ன நோய் என்று சொல்லத் தெரியாமல் என்னென்னவோ கட்டுக் கதைகள் அளக்கிறீர்கள்! சே!'' என்று சீறியது இப்போது ஞாபகம் வந்தது.

இருப்புக் கொள்ளாதவளாக ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டாள் கிறிஸ்டி. பிறகு அதை எறிந்துவிட்டு மாடிக்குச் சென்றாள், ரெஜினா எப்படி இருக்கிறாள் என்று பார்க்க. அறைக்குள் போதுமான வெளிச்சம் இல்லை. கட்டிலில் அவள் பக்கத்தில் யாரோ உட்கார்ந்திருப்பதுபோல் தோன்றியது. உற்றுப் பார்த்தாள். கார்ல்தான். ரெப்ரிஜிரேட்டரிலிருந்து எடுத்து வந்திருந்த ஐஸை ஒரு பையில் போட்டு ரெஜினாவின் நெற்றியில் ஒத்தடம் கொடுத்துக் கொண்டிருந்தான். கிறிஸ்டி வந்ததை அவன் கவனித்ததாகத் தெரியவில்லை. அசையவுமில்லை. கிறிஸ்டி ஓசைப்படாமல் திரும்பினாள். புத்தகங்களை வைத்திருக்கும் அறையை அடைந்தாள். ஒருவேளை... ரெஜினாவின் கோளாறைப் பற்றி எந்தப் புத்தகத்திலாவது ஏதாவது இருக்குமா?

பெரிய ஆஸ்பத்திரி டாக்டர்க்ள் சொன்னது அவளுக்கு மேலும் ஞாபகம் வந்தது.

''...பேய் பிடிப்பது பற்றி உங்கள் பெண்ணுக்குத் தெரிந்திருக்கவேண்டும். அதில் அவளுக்கு நம்பிக்கை

இருந்திருக்கும். பேய் பிடித்தால் ஏற்படக் கூடிய அறிகுறிகள் என்னவென்று அவள் அறிந்திருப்பாள். அதனால் அவளையும் அறியாமல் அவள் உள்மனம் அந்த அறிகுறிகளை வெளிப்படுத்துகிறது. அப்படி இருக்கும் பட்சத்தில், அதற்கு ஒரு அதிர்ச்சி வைத்தியம் கொடுக்கலாம்... பெரும்பாலான டாக்டர்கள் இதை ஒப்புக் கொள்ள மாட்டார்கள். இருந்தாலும்... குழந்தையை மனநோய் ஆஸ்பத்திரியில் சேர்ப்பது உங்களுக்கு இஷ்டமில்லையாகையால், இந்தச் சிகிச்சையைக் கையாண்டு பார்க்கலாம்...''

''என்ன சிகிச்சை? சொல்லுங்கள்! புண்ணியமாகப் போகட்டும், சொல்லுங்கள்!'' என்று கிறிஸ்டி பதறினாள்.

''பேயோட்டுவது என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா கிறிஸ்டி? எக்ஸார்ஸிஸம்?'' என்றார் டாக்டர்.

கிறிஸ்டி திகைத்தபோது டாக்டர் தொடர்ந்தார்.

''குருமார்களும் பூசாரிகளும் பேயை ஓட்டுவதற்காகச் சில சடங்குகள் செய்வார்கள். இப்போது அது பழக்கத்தி லில்லை. கத்தோலிக்கர்கள் மட்டும் அதில் நம்பிக்கை வைத் திருக்கிறார்கள். அந்தச் சடங்குக்குப் பலன் ஏற்படுவதுண்டு..ஓர் எண்ணத்தைத் தீவிரமாகப் பதிய வைப்பதனால் அந்தப் பலன் ஏற்படுகிறது. பேய் பிடித்தவன், தன்னைப் பேய் பிடித்திருப்ப தாகத் தீவிரமாக நம்புவதால், அதன் விளைவாகப் பேய் பிடித்திருப்பதற்கான அறிகுறிகள் அவனிடம் ஏற்படுகின்றன. அதே போல் பேய் ஓட்டப்பட்டு விட்டதென்று ஒரு தீவிரமான எண்ணத்தை அவன் மனதில் பதிய வைத்தால், பேய் விலகிவிடுகிறது. அவ்வளவுதான்.''

''அதாவது பில்லி சூனியக்காரனிடம் ரெஜினாவை அழைத்துப் போகும்படி சொல்கிறீர்களா?''

''ஆமாம். அல்லது யாராவது ஒரு பாதிரியாரிடம் காட்டுங்கள்... ஆனால் பேய் பிடித்திருப்பதைப் பற்றியோ பேய் ஓட்டப்படுவதைப் பற்றியோ ரெஜினாவுக்குத் தெரியுமா என்று தெரியவில்லை. மதப் புத்தகங்கள் ஏதாவது அவள் படிக்கிறதுண்டா?''

''எதற்குக் கேட்கிறீர்கள்?''

''பைபிள் புதிய ஏற்பாட்டைப் படித்திருப்பாளானால்... பேய் பிடிப்பதைப் பற்றிச் சில தகவல்கள் அதில் இருக்கிறது. ஏசு கிறிஸ்து பேய்களை ஓட்டியதைப்பற்றி...''

டாக்டருடன் பேசியதைப் பற்றி நினைவு படுத்தியவாறே முன்னறையில் அலமாரியில் இருந்த புத்தகங்களைப் புரட்டிப் கொண்டிருந்தாள் கிறிஸ்டி.

என்ன அது?

கீழ்த் தட்டில் இருந்த ஒரு புத்தகத்தின் தலைப்பில் அவள் பார்வை குத்திட்டு நின்றது. முன்னொரு நாள் திருமதி பெர்ரின் அவளுக்குக் கொடுத்த புத்தகம். பில்லி சூனியம் பற்றியது. அன்று படிக்க வேண்டுமென்று தேடிய போது காணவில்லை.

பொருளடக்கத்தில் இருந்த தலைப்புக்களில் பெருவிரலை ஓட்டினாள்.

அதோ!

ஒரு அத்தியாயத்தின் தலைப்பு: 'பேய் பிடித்தவர்களின் மன நிலைகள்'

கிறிஸ்டி அந்தப் புத்தகத்தையே வெறித்து நோக்கிய படி உட்கார்ந்திருந்தாள். ஆஸ்பத்திரியில் டாக்டர்கள் சொன்னது சரிதானோ? இந்தப் புத்தகத்தைப் படித்துத்தான் ரெஜினா

தனக்குத் தானே மனக்கோளாறைக் கற்பனை செய்து கொண்டாளோ?... அப்படியானால் ரெஜினாவிடம் காணப்படும் நோய்க் குறிகளைப் பற்றி இந்தப் புத்தகத்தில் போட்டிருப்பார்களோ?

# 14

பாலத்தின் நடைபாதையில், கைப்பிடிச் சுவரில் கைகளை ஊன்றிக்கொணடு கிறிஸ்டி நின்றிருந்தாள். அவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. சாரிசாரியான கார்கள் ஒன்றையொன்று இடித்தபடி வீடு நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தன. ஹாரன்கள் ஊளையிட்டன.

மனத்தத்துவம் பயின்றவரான கராஸ் பாதிரியாருக்குப் போன் செய்து அவரைச் சந்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருந்தாள் அவள்.

பாலத்தின் கீழே கலகல வென்று சிரிப்புச் சத்தம் கேட்டது. ஜீன்ஸ் அணிந்த ஓர் இளம் ஜோடி வாடகைப் படகில் போய்க் கொண்டிருந்தது. காக்கி பாண்ட்டும் நீல ஸ்வெட்டரும் அணிந்த ஒருவர் அவளை நோக்கி விரைந்து வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

''மிஸ் கிறிஸ்டிதானே நீங்கள்? நான் கராஸ் பாதிரியார்.''

அவள் திடுக்கிட்டாள். முகம் சிவந்தவளாகத் திரும்பி அவரை ஏறிட்டு நோக்கினாள். ''ஓ... நீங்கள்... நான்...''

''நான் பாதிரியாரின் உடையில் இருக்க மாட்டேன் என்று உங்களுக்குச் சொல்லியிருந்திருக்க வேண்டும். ஸாரி,'' என்றார் அவர். ''மற்றவர்கள் கவனிக்க வேண்டாமென்று தான் சாதாரண உடையில் வந்தேன்,'' என்றார் அவர்.

டெலிபோனில் அவள் சொல்லியிருந்த அந்த அவசரமான பிரசினை என்ன என்பதை அறிந்து கொள்ள அவருக்கு ஆவலாயிருந்தது. அதை எப்படிச் சொல்வது என்று அவள் தனக்குள் சிந்தனை செய்து கொண்டிருக்கிறாள். வலியப் போய்க் கிளறக் கூடாது... தானாகவே வெளிவரும், தானாகவே வெளிவரும்...

''ஃபாதர் டயர்ஸுக்கு நீங்கள் சினேகிதர் இல்லை?''

''ஆமாம்.''

''ரொம்ப நெருங்கிய சினேதர்?''

''ஆமாம், நெருங்கிய சினேகிதர்.''

''என் வீட்டில் ஒரு பார்ட்டிக்கு அவர் வந்திருந்தபோது உங்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். என் பெண்ணைப் பற்றி உங்களிடம் சொன்னாரா?''

''இல்லையே? உங்களுக்கு ஒரு பெண் இருப்பதே எனக்குத் தெரியாது.''

''பன்னிரண்டு வயதாகிறது. அவளைப் பற்றி எதுவுமே சொன்னது கிடையாதா உங்களிடம்?''

''இல்லையே?''

''பார்ட்டியின் போது அவள் என்ன செய்தாளென்று சொன்னதில்லை?''

''ஊகூம்.''

அவள் சிறிது நேரம் மௌனமாயிருந்தாள். ''ஃபாதர், பேயோட்ட வேண்டுமென்று உங்களிடம் ஒருவர் வந்தால் என்ன பண்ணுவீர்கள்!''

''மன்னிக்கணும்... புரியவில்லை...''

''ஒருத்தரைப் பேய் பிடித்திருக்கிறது. அதை ஓட்டியாக வேண்டும் என்றால்...''

''அதெல்லாம் பதினாறாம் நூற்றாண்டுக் கதை.''

''என்ன சொல்கிறீர்கள் நீங்கள்?''

''பேய் பிடிக்கிறது என்பதெல்லாம் போய் ரொம்பக் காலமாகிறது, மிஸ் கிறிஸ்டி.''

''ரொம்பக் காலமாகிறது என்றால்?''

''மன நோய், இரட்டைப் பர்ஸனாலிடி - இதெல்லாம் நமக்குத் தெரிய ஆரம்பித்த காலத்தோடு பேய் சமாசாரம் போய்விட்டது. ஹார்வார்டு பல்கலைக் கழகத்தில் நானும் அந்தப் பாடங்களைப் படித்திருக்கிறேன்.''

''விளையாடுகிறீர்களா?'' அவள் குரல் குழப்ப மடைந்ததாக, பரிதாபமாக, நடுங்கியது.

மிருதுவாக அவர் சொன்னார். ''படித்த கத்தோலிக்கர்கள் பலபேர் இப்போதெல்லாம் பேய் பிசாசுகளை நம்புவது கிடையாது, மிஸ் கிறிஸ்டி. ஜெசூயிட் சங்கத்தில் நான் சேர்ந்த காலத்திலிருந்து இது நாள் வரை, பேயோட்டிய எந்தப் பாதிரியாரையும் நான் பார்த்ததில்லை. ஊகூம், ஒருத்தரைக்கூடப் பார்த்தது கிடையாது.''

''பேய் பிசாசுகளை ஏசு கிறிஸ்து விரட்டினார் என்று பைபிளில் இருக்கிற கதைகளுக்கெல்லாம் என்ன அர்த்தம்?''

மீண்டும் அவர் யோசியாமலே நறுக்கென்று பதிலளித்தார். ''அந்த நாளில் பேய் பிடித்திருந்ததாகச் சொல்லப்பட்டதும் மன நோய்கள்தான். ஆனால் ஏசு கிறிஸ்து அந்த உண்மையைச் சொல்லியிருந்தால் இன்னும் மூன்று வருஷம் முன்னதாகவே அவரைச் சிலுவையில் அறைந் திருப்பார்கள்.''

அவள் நடுங்கும் கைகளால் தன் கறுப்புக் கண்ணாடியைச் சரிசெய்து கொண்டாள். குரலை நிதானப் படுத்திக் கொள்ள முயன்றதால் ஆழமாக ஒலித்தது. ''நல்லது ஃபாதர்... எனக்கு ரொம்ப வேண்டிய ஒருத்தருக்குப் பேய் பிடித்திருக்கிற மாதிரி இருக்கிறது... பேய் ஓட்ட வேண்டும்... நீங்கள் செய்வீர்களா?...''

கராஸ் பாதிரியார் என்ன பதில் சொல்வதென்று தடுமாறியவராக அவளை வெறித்துப் பார்த்தார்.

''ஃபாதர், அவள் என் மகள்!'' அவள் கரகரத்த குரலில் சொன்னாள். ''என் மகள் ஃபாதர், என் மகள்!''

அவர் மெல்லச் சொன்னார்: ''அப்படியானால் இந்தப் பேய் பிசாசு சமாசாரத்தை நீங்கள் மறக்க வேண்டியது இன்னும் முக்கியம்...''

''ஏன்? எதற்காக? கடவுளே! எனக்குப் புரிய வில்லையே!'' வேதனை தாளமாட்டாமல் அவள் குரல் வெடித்தது.

''ஏனென்றால், உங்கள் மகள் முன்னைக் காட்டிலும் மோசமாகிவிடக் கூடும்,'' என்றார்.

''எப்படி?''

''பேயோட்டும் சடங்கு அபாயகரமானது. காரணம், உண்மையில் பேய் பிடிக்கவில்லை என்று வைத்துக் கொள்ளுங்கள். இது, தனக்குப் பேய் பிடித்திருக்கிறது என்று அவளை எண்ண வைக்கும். ஏற்கெனவே பிடித்திருந்தது என்றால் அதைப் பலப்படுத்தி விடும். இன்னொன்று, மிஸ் கிறிஸ்டி. பேயோட்டும் சடங்குக்குச் சர்ச்சிடம் அனுமதி பெற வேண்டும். அந்தச் சடங்கு தேவைதானா என்று விசாரணைகள் செய்தபின்தான் சர்ச் அனுமதி தரும். அதற்கு நாளாகும். அதற்குள் உங்கள்...''

''ஏன் ஃபாதர், பேயோட்டுவதை நீங்கள் செய்யக் கூடாதா?'' என்று கெஞ்சினாள் அவள். அவளுடைய கீழ் உதடு நடுங்கத் தொடங்கியிருந்தது. கண்களில் கண்ணீர் நிரம்பி நின்றது.

அவர் சொன்னார்: ''இதோ பாருங்கள், பேயோட்டும் அதிகாரம் எல்லாப் பாதிரிகளுக்கும் உண்டு. ஆனால் சர்ச் அனுமதி கொடுக்க வேண்டும். அது கொடுப்பது அரிது, ஆகவே...''

''அவளை ஒரு முறை நீங்கள் வந்து பார்க்கக் கூடாதா?''

''மனநோய் டாக்டர் என்கிற முறையில் வந்து பார்க்கிறேன்...''

திடீரென்று உரக்கக் கூவினாள் அவள். ''என் மகளுக்குத் தேவை ஒரு பாதிரியார்!'' கோபத்தாலும் அச்சத்தாலும் அவள் முகம் கோணலாயிற்று. ''உலகத்திலே இருக்கிற டாக்டர்களிடமெல்லாம், மனநோய் நிபுணர்களிடமெல்லாம் அவளை அழைத்துப் போய்க் காட்டியாகிவிட்டது. பாதிரியாரிடம் காட்டுங்கள் என்கிறார்கள் அவர்கள். அவர்களிடம் போங்கள் என்கிறீர்கள் நீங்கள்!''

''மிஸ் கிறிஸ்டி...''

''தெய்வமே! எனக்கு யாராவது உதவி செய்ய மாட்டார்களா!'' இருதயத்தைக் குலைய வைக்கும் கூச்சல் அவளிடமிருந்து கிளம்பி, ஆற்றைக் கிழித்தது. அதைக் கேட்டு ஆற்றங்கரையில் உட்கார்ந்திருந்த பறவைகள் கீச்சிட்டுக் கொண்டு பறந்தோடின. ''தெய்வமே! எனக்கு யாராவது உதவி செய்யுங்களேன்!'' விம்மல்கள் வெடித்தன அவளிடமிருந்து. ''எனக்கு உதவி செய்யுங்கள்! என் குழந்தையைக் காப்பாற்றுங்கள்! என் குழந்தையை...''

கராஸ் பாதிரியார் அவளைக் குனிந்து நோக்கினார். ''சரி, சரி...'' என்று அவள் தோள்களைத் தட்டினார். ''சரியம்மா, நான் வருகிறேன். வந்து பார்க்கிறேன்.''

# 15

கராஸ் பாதிரியார் கிறிஸ்டியுடன் அவள் வீட்டுக்கு மௌனமாக நடந்தார். எல்லாம் ஏதோ கனவு போலிருந்தது அவருக்கு. மறுநாள் ஜார்ஜ் டவுன் மெடிகல் ஸ்கூலில் அவர் உரை நிகழ்த்த வேண்டும். அதற்காகக் குறிப்பு எதுவும் இன்னும் அவர் எடுத்துக் கொள்ளவில்லை. அது பற்றிய சிந்தனைகளுடன் நடந்தார்.

கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழையுமுன் கிறிஸ்டி சற்றுத் தயங்கினாள். ''ஃபாதர், நீங்கள் பாதிரியார் உடையை அணிந்து கொள்வது நல்லதில்லையா?'' என்றாள்.

அந்தக் குரல்! எத்தனை குழந்தைத்தனமாயும், அப்பாவித்தனமாயும் இருக்கிறது என்று அவர் நினைத்துக் கொண்டார். ''வேண்டாம், அது ரொம்ப அபாயம்,'' என்றார்.

அவள் தலையை அசைத்து விட்டுக் கதவைத் திறந்தாள். அப்போதுதான் கராஸ் பாதிரியாருக்கு உறைத்தது: அந்தச் சில்லிப்பு. யாரோ தன்னைப் பின்னுக்கிழுப்பது போல ஓர் எச்சரிக்கை. ரத்த நாளங்களில் பனித்தூள்கள் ஓடுகிற மாதிரி இருந்தது அவருக்கு.

''ஃபாதர்?''

நிமிர்ந்து பார்த்தார். கிறிஸ்டிதான் முன்னே சென்று அவரை உள்ளே அழைத்தாள், கதவைத் திறந்து பிடித்தபடி.

ஒரு நிமிடம் அசையாமல் நின்ற வண்ணம் அவர் தயங்கினார். பிறகு விருட்டென்று உள்ளே நுழைந்தார். தன் தயக்கம் ஒரு முடிவுக்கு வந்து விட்டதுபோன்ற வினோதமான உணர்வு அவருக்கு ஏற்பட்டது.

பலவகையான சந்தடிக் கூச்சல்கள் அவருக்குக் கேட்டன மாடியிலிருந்து. ஆழமான, கர்ஜனையான ஒரு குரல் ஆபாசமாக முழங்கிக் கொண்டிருந்தது. கோபத்துடன், வெறுப்புடன், ஆங்காரத்துடன் பயமுறுத்திக் கொண்டிருந்தது.

கிறிஸ்டியை ஓரக் கண்ணால் பார்த்தார் கராஸ் பாதிரியார். ஊமைபோல அவள் அவரை வெறித்து நோக்கினாள். பின்னர் முன்னே சென்றாள் மாடியை நோக்கி. அவர் அவளைப் பின் தொடர்ந்தார். ஹால் வழியாக ரெஜினாவின் படுக்கையறைக்குச் சென்றார்கள். அறைக் கதவுக்கு எதிரிலிருந்த சுவரில் சாய்ந்தபடி வேலைக்காரன் கார்ல் நின்றிருந்தான். கைகளைக் கட்டிக் கொண்டு, தலையைக் குனிந்தவாறு இருந்தவன், மெல்ல கிறிஸ்டியை நிமிர்ந்து பார்த்தான். அவன் கண்களில் குழப்பமும் அச்சமும் நிறைந்திருப்பதைக் கராஸ் பாதிரியார் கண்டார். படுக்கையறைக்குள்ளிருந்து வந்த குரல் இப்போது மின்சார ஒலிபெருக்கி வைத்த மாதிரி வெகு உரக்கக் கேட்டது.

பயம் நிறைந்த கரகரத்த குரலில் கார்ல், ''கையைக் காலெல்லாம் நாடா போட்டுக் கட்டியிருக்கிறோமில்லையா? அதை அவிழ்த்து விடு என்கிறாள்,'' என்றான்.

''இதோ ஒரு நொடியில் வருகிறேன் ஃபாதர்,'' என்றாள் கிறிஸ்டி பெருமூச்சுடன்.

அவள் கீழே இறங்கித் தனது படுக்கை அறைக்குள் போவதைக் கவனித்தார் கராஸ் பாதிரியார். வேலைக்காரன்

கார்ல் அவரை வைத்த கண் வாங்காமல் பார்த்தான். ''நீங்கள் பாதிரியாரா?'' என்றான்.

அவர் தலையசைத்தார்.

யாரோ அவர் கையை மெல்லத் தொட்டார்கள். திரும்பினார். கிறிஸ்டிதான். ஒரு போட்டோவை அவரிடம் கொடுத்து, ''இவள்தான் - என் பெண் ரெஜினா,'' என்று சொன்னாள். வாங்கிப் பார்த்தார். ரொம்ப இளம் வயது. ரொம்ப அழகு. இனிமையான புன்னகை.

''இந்தப் படம் நாலு மாதத்துக்கு முன்பு எடுத்தது,'' என்றாள் அவள் உணர்ச்சியற்றவளாக. போட்டோவைத் திரும்ப வாங்கிக் கொண்டவள் ரெஜினாவின் அறையை நோக்கித் தலையசைத்துக் காட்டினாள். ''இப்போது உள்ளே போய் அவள் எப்படி இருக்கிறாள் என்று பாருங்கள்,'' என்றாள். கார்லுக்குப் பக்கத்திலேயே அவளும் சுவர் ஓரமாக நின்று கொண்டாள். ''நான் இங்கேயே இருக்கிறேன்.''

''உள்ளே அவளுடன் யார் இருக்கிறார்கள்?'' என்று அவர் கேட்டார்.

''யாருமில்லை.''

அவளுடைய அசையாத பார்வையை ஒரு வினாடி கவனித்துவிட்டு, முகத்தைச் சுளித்தவண்ணம் அவர் படுக்கையறைக் கதவினருகே சென்றார். கதவுப் பிடியை அவர் பற்றியவுடனே உள்ளேயிருந்து வந்த சப்தங்கள் திடுதிப்பென்று நின்றன. டிக்டிக்கென்ற நிசப்தத்தின் நடுவே அவர் தயங்கினார். பின்னர் மெதுவாக உள்ளே நுழைந்தார்.

திடீரென அவர் பின்னுக்குச் சாய்ந்தார்.

ஒரு பெரிய உருண்டை நரகல் அவர் முகத்தின்மீது வந்து விழுந்ததே காரணம். அதன் நாற்றம் அவரால் தாள முடியவில்லை.

சட்டெனத் தன் அருவருப்பை அடக்கிக் கொண்டார். கதவைச் சாத்திக் கொண்டார். பார்த்தார். அவர் கண்கள் பின்னிக்கொண்டு குத்திட்டு நின்றன.

படுக்கையில் இருந்த ரெஜினா என்ற ஒன்று - மல்லாந்து படுத்திருக்கும் அந்த ஐந்து - தலையணையில் தாங்கலாக உள்ள அதன் தலை - பொந்து போன்ற குழியில் அகன்று பிதுங்கிக் கொண்டிருக்கும் அந்த விழிகளில் குள்ளநரித்தனம் வெறிபிடித்து அலைகிறது -

கராஸ் பாதிரியார் தன் பார்வையை நகர்த்தினார். அவள் கூந்தல் சடைபிடித்து, சிடுக்கும் அடைசலுமாயிருந்தது. கைகளும் கால்களும் தொய்ந்து கிடந்தன; ஊதியிருந்த வயிறு விகாரமாகத் துருத்திக் கொண்டிருந்தது. மீண்டும் கண்களைப் பார்த்தார். அவை அவரையே கவனித்துக் கொண்டிருந்தன... ஜன்னலுக்கு அருகே இருந்த மேஜையையும் நாற்காலியையும் நோக்கி அவர் சென்றபோது அந்தக் கண்களும் நகர்ந்தன.

''ஹலோ ரெஜினா!'' கதகதப்பான, நட்புணர்வான தொனியில் கராஸ் பாதிரியர்ர் அவளைக் கூப்பிட்டார். நாற்காலியைத் தூக்கி வந்து படுக்கையின் அருகில் போட்டார். ''நான் உன் அம்மாவின் சினேகிதன். உனக்கு உடம்பு கொஞ்சம் சரியில்லை என்று உன் அம்மா சொல்கிறாள்,'' நாற்காலியில் உட்கார்ந்துகொண்டார். ''என்ன உனக்குத் தொந்தரவு என்று என்னிடம் சொல்கிறாயா? உனக்கு உதவி செய்யலாமென்று பார்க்கிறேன்.''

அந்தக் கண்கள் கொடுமையாக மின்னின. மஞ்சள் நிறமான எச்சில் அவள் வாயின் ஓரத்திலிருந்து ஒழுகி மோவாயில் வழிந்தது.

''சபாஷ்! சபாஷ்!'' என்று சிரித்தாள் ரெஜினா வெறுப்பும் பரிகாசமுமாக. அந்தக் குரலைக் கேட்டதுமே கராஸ் பாதிரியாரின் பிடரியில் மயிர்க்கால்கள் சிலிர்த்தன.

''அப்படியானால் என் கைகால் கட்டுகளையெல்லாம் தளர்த்திவிடு,'' என்று ரெஜினாவின் குரல் கொரகொரத்தது.

''கட்டை அவிழ்த்தால் உன்னை நீயே காயப்படுத்திக் கொள்வாய் என்று பயமாயிருக்கிறது ரெஜினா,'' என்றார்.

''நான் ரெஜினா இல்லை!'' என்று கத்தினாள் அவள்.

''ஓகோ, அப்படியா? சரி: அப்படியானால் நாம் ஒருவரையொருவர் அறிமுகம் செய்து கொள்வோம். நான் டேமியன் கராஸ்,'' என்றார் பாதிரியார். ''நீ யார்?''

''நான் சாத்தான்,'' என்றாள் அவள்.

# 16

''நான் சாத்தான்,'' என்று ரெஜினாவிடமிருந்து பதில் வந்ததும் -

''நல்லது, நல்லது!'' என்று அதை ஏற்றுக் கொள்கிற மாதிரி கராஸ் பாதிரியார் தலையாட்டினார். ''இப்ப நாம் பேசலாம்.''

''ஒரு குட்டி உரையாடல்?''

''அப்படித்தான் வைத்துக் கொள்ளேன்.''

''ஆன்மாவுக்கு ரொம்ப நல்லது. இருந்தாலும், இப்படிக் கட்டிப்போட்டிருக்கிற நிலையில் என்னால் தாராளமாய்ப் பேச முடியாது. எனக்குக் கையை ஆட்டி ஆட்டிப் பேசித்தான் பழக்கம்,'' என்று இழுத்து இழுத்துப் பேசினாள் ரெஜினா. ''உங்களுக்குத் தெரிந்திருக்குமே பாதிரியாரே! நான் என் வாழ்நாளில் பெரும் பகுதியை ரோமாபுரியில்தான் கழித்தேன். இப்போது தயவு பண்ணிக் கட்டை அவிழ்த்து விடுகிறீர்களா?''

பேச்சிலும் எண்ணத்திலும் வயதுக்கு மிஞ்சிய எத்தனை தீட்சண்ணியம் என்று எண்ணிக் கொண்டார் அவர். தனது தொழிலுக்கு உண்டான ஆர்வத்துடன் நாற்காலியில் அவளுக் கருகே குனிந்தார். ''நீ சாத்தான் என்றா சொல்கிறாய்?''

''நிச்சயமாய்ச் சொல்கிறேன்...''

''அப்படியானால் இந்த கட்டுகள் மறைந்து போகும்படி நீயே ஏன் செய்யக்கூடாது?''

''அது என் சக்தியை ரொம்பப் பச்சையாய் வெளிப்படுத்திக் கொள்வதாக இருக்குமே, கராஸ்? அது ரொம்பக் கேவலம். ஏனென்றால் நான் ஒரு இளவரசன் பாருங்கள்!'' ஒரு சூள் கொட்டிக் கொண்டாள். ''பேச்சினால் என் பக்கம் திருப்புவதுதான் எனக்கு பிடிக்கும். அதில் ஒரு அன்னியோன்னியம் - நேய பாவம் - ஏற்படுகிறது. அத்தோடு நண்பரே, நானே என் கட்டுகளை அவிழ்த்துக் கொண்டே னென்று வைத்துக் கொள்ளுங்கள், நீங்கள் ஒரு நல்ல காரியம் செய்யும் வாய்ப்பை நான் பறித்துவிட்டதாக ஆகுமே!''

''நல்ல காரியம் என்றால் புண்ணியம். சாத்தான் என்றால் புண்ணியத்தைத் தடுக்க வேண்டுமே? ஆகவே, கட்டுகளை நான் அவிழ்க்காமலிருந்தால்தான் உனக்கு உதவி செய்ததாக ஆகும்,'' என்ற கராஸ் தோளைக் குலுக்கிக் கொண்டார். ''அல்லது உண்மையாக நீ சாத்தான் இல்லையோ என்னவோ, அப்படியானால் ஒரு வேளை நான் கட்டுக்களை அவிழ்க்கக் கூடும்.''

''நீ சரியான குள்ள நரி, பாதிரியாரே!''

அவள் மீண்டும் இளிக்கத் தொடங்கினாள். ''இந்தப் பாழாய்ப் போன நாடாக்கள் என்னை எப்படி அழுத்துகிறது பாருங்கள். இதை அவிழ்த்து விடுங்கள். உங்கள் எதிர்காலத்தைச் சொல்கிறேன்.''

''ரொம்ப ஆசை காட்டுகிறாயே?''

''அதுதான் என் பலம்.''

''ஆனால் உன்னால் எதிர்காலத்தைச் சொல்ல முடியும் என்பது என்ன நிச்சயம்?''

''நான்தான் சாத்தானாச்சே!''

''அப்படி நீ சொல்கிறாயே தவிர அதற்கு ருசு எதுவும் காணோமே?''

''உங்களுக்கு நம்பிக்கை இல்லை?''

கராஸ் பாதிரியார் முறைத்துப் பார்த்தார். ''எதில்?''

''என்னிடம், அருமை கராஸ்! என்னிடம்!'' அந்தக் கண்களில் ஏளனமான, தீயதான ஏதோவொன்று கூத்தாடியது. ''இதெல்லாம் ருசுதான். ஆகாயத்தைப் பார் - எவ்வளவோ அறிகுறிகள்.''

''இதோ பார், ரொம்பச் சின்னதாக ஒரு வேலை செய் போதும்,'' என்றார் கராஸ் பாதிரியார். ''உதாரணமாக, சாத்தான் என்றால் எல்லா விஷயமும் தெரியும். சரிதானே?''

''எல்லாம் என்று சொல்ல முடியாது. கிட்டத்தட்ட எல்லாம் என்று வைத்துக் கொள்ளுங்கள். என்னைக் கர்வம் பிடித்தவன் என்று சிலர் சொல்கிறார்கள். உண்மையில் நான் அப்படி இல்லை. சரி, நீ என்ன கேட்க விரும்புகிறாய், குள்ள நரி?''

''உன் அறிவின் விஸ்தீரணத்தைப் பரீட்சை செய்யலாமென்று பார்த்தேன்.''

''ஓ, சொல்லேன். தென் அமெரிக்காவில் மிகப் பெரிய ஏரி எது என்று கேட்கிறாயா?'' ரெஜினாவின் கண்கள் கேலிச் சிரிப்பினால் பிதுங்குகிற மாதிரி இருந்தன. ''பெருவில் உள்ள டிடிகாகா ஏரி! போதுமா?''

''ஊகூம். சாத்தானுக்கு மட்டுமே தெரிந்த ஒரு விஷயத்தை நான் கேட்க வேண்டியிருக்கிறது. உதாரணமாக ரெஜினா எங்கே இருக்கிறாள்? உனக்குத் தெரியுமா?''

''இங்கே இருக்கிறாள்.''

''இங்கே என்றால் எங்கே?''

''இங்கே.''

''நான் பார்க்கணும்.''

''எதற்கு?''

''எதற்கா? நீ உண்மைதான் சொல்கிறாயா என்று பார்ப்பதற்காக.''

''ஏன், அவளை...'' ஆபாசமான வார்த்தையைச் சொன்னாள் அவள். ''கட்டை அவிழ்த்து விடு. உனக்கு அனுமதி தருகிறேன்.''

''நான் அவளைப் பார்க்கணும்.''

''ரொம்ப அழகாயிருக்கும்,'' மீண்டும் ஒரு ஆபாச வார்த்தை. ''ஆனால் தமாஷாய்ப் பேசிக் கொண்டிருப்பதில் அவள் கெட்டிக்காரியில்லை. நண்பரே! நீ என்னுடன் இருப்பதுதான் நல்லது என்று அடித்துச் சொல்கிறேன்.'' அவளுடைய நாக்கு வெளியே நீட்டிக் கொண்டு துடித்தது. வெடித்துப் போன உதடுகளில் எச்சில் தெறித்தது.

''ஹூம்! ரெஜினா எங்கே இருக்கிறாள் என்பது உனக்குத் தெரியாது. அது வெட்ட வெளிச்சமாகிவிட்டது,'' தோள்களைக் குலுக்கிக் கொண்டார். ''ஆகவே, நீ சாத்தான் இல்லை.''

''நான் சாத்தான்தான்!'' திடீரென்று முன் புறம் குனிந்து சீறினாள் அவள். தாள முடியாத கோபத்தினால் அவள் முகம்

கோணியது. கேட்போரை அச்சுறுத்தும் அந்தப் பிரம்மாண்டமான குரல் அறையின் சுவர்களைப் பிளந்தபோது கராஸ் பாதிரியாருக்கு உடம்பு நடுங்கியது. ''நான் தான் சாத்தான்!''

''நல்லது. அப்படியானால் நான் ரெஜினாவைப் பார்க்கிறேன்,'' என்றார் அவர். ''பார்த்தால் நிரூபணமாகி விடும்.''

''வேறொன்று செய்யலாம். உன் மனசில் நீ என்ன நினைக்கிறாயோ அதைக் கண்டுபிடிக்கிறேன், பார்!'' கோபத்துடன் அது கத்தியது. ''ஒன்றிலிருந்து பத்துக்குள் ஒரு எண் நினைத்துக் கொள்.''

''ஊகூம். அதெல்லாம் உன்னை நிரூபித்ததாக ஆகாது. நான் ரெஜினாவைப் பார்த்தாக வேண்டும்.''

அவள் சட்டென்று சூள் கொட்டிவிட்டு, கட்டிலின் தலைச்சட்டத்தில் சாய்ந்து கொண்டாள். ''இல்லை, எதுவும் உனக்கு எதையும் நிரூபிக்கப் போவதில்லை, கராஸ்! அருமை! அருமை! இருக்கட்டும். இப்போதைக்கு நாங்கள் உனக்கு நன்றாய் விளையாட்டுக் காட்டிக்கொண்டிருக்கப் போகிறோம். உன்னை இழக்க நாங்கள் பிரியப்படவில்லை.''

''நாங்கள் நாங்கள் என்கிறாயே, யார்?'' சட்டென்று ஒரு கேள்வியை வீசினார் கராஸ் பாதிரியார்.

''நாங்கள் இங்கே ஒரு சரியான கும்பல்!'' என்றது அது தலையை ஆட்டியபடி. ''ஆமாம்! பார்த்தால் அசந்து போய்விடுவாய், அப்படிப்பட்ட கும்பல். அந்த அறிமுகமெல்லாம் சாவகாசமாய் ஒருநாள் வைத்துக் கொள்ளலாம். இப்ப, எனக்கு முதுகிலே கை எட்ட முடியாத ஓரிடத்தில் சகிக்க முடியாத அரிப்பாக இருக்கிறது. ஒரு

கட்டையாவது அவிழ்த்து விடுகிறாயா, கராஸ், ஒரு நிமிடத்துக்கு?''

''எங்கே அரிக்கிறதென்று சொல்லு. நானே சொறிந்து விடுகிறேன்.''

''ஐயோ! ரொம்பக் கெட்டிக்காரர் என்று நினைப்பாக்கும்!''

''ரெஜினாவை எனக்குக் காட்டு. அப்புறம் வேண்டு மானால் ஒரு கட்டை அவிழ்த்து விடுகிறேன்,'' என்று கராஸ் பாதிரியார் பேரம் பேசினார். ''ஆனால்-''

திடீரென்று அந்தக் கண்களில் பெரும் பீதியைக் கண்டார். 'என்னைக் காப்பாற்று!' என்று கெஞ்சுவது போல உருவமில்லாத கூச்சலொன்று அவளுடைய வாயில் உருவாவதைப் பார்த்தார். அதிர்ச்சி தாளாமல் உடனே பின்னடைந்தார்.

மசமசவென்று சில சலனங்கள் ஏற்பட்டு ரெஜினாவின் முகபாவம் வேகமாக மாறின. ''இந்தக் கட்டுக்களை அவிழ்க்க மாட்டீர்களா?'' என்ற இச்சகமான குரலொன்று, சுத்தமான பிரிட்டிஷ் உச்சரிப்புடன் கேட்டது.

மறுபடியும் மின்னல் போல சாத்தான் தன்மை திரும்பியது. ''பழைய சர்ச்பையனுக்கு உதவி செய்யக்கூடாதா ஃபாதர்?'' என்று அந்தக் குரல் கொர கொரத்தது. தலையைப் பின்னுக்குச் சாய்த்துக் கொண்டு விழுந்து விழுந்து சிரித்தது.

கராஸ் பாதிரியார் அதிர்ச்சியுற்று அசையாமல் உட்கார்ந்திருந்தார். பனியாலான கையொன்று தன் பிடரியைத் தொடுவது போன்ற உணர்ச்சி அவருக்கு மீண்டும் உண்டா யிற்று. இப்போது அந்த ஸ்பரிசம் இன்னும் அழுத்தமாக இருந்தது. ரெஜினா என்ற பெயருள்ள அது தன் சிரிப்பை

நிறுத்திக் கொண்டது. கேலிப் பார்வையுடன் அவரை இமைக்காமல் பார்த்தது.

''ஒரு விஷயம் சொல்ல மறந்துவிட்டேன், கராஸ். உன் அம்மா இங்கே எங்களுடன் இருக்கிறாள். அவளுக்கு ஏதாவது தகவல் சொல்லவேண்டுமானால் சொல்லு. கட்டாயமாய் அவளிடம் சொல்லிவிடுகிறேன்.''

சர்ரென்று பீய்ச்சிக் கொண்டு வந்தது அவள் வாந்தி. கராஸ் பாதிரியார் குபுக்கென நாற்காலியிலிருந்து எழுந்து கொண்டதால் தப்பினார். அப்படியும் அவர் சட்டையிலும் கையிலும் ஒரு பகுதியில் அந்த அசிங்கம் பட்டது.

அவர் முகம் வெளிறிப் போயிற்று. குனிந்து படுக்கையையே பார்த்தபடி நின்றார். ரெஜினா கிளுகிளு என்று சிரித்துக் கொண்டிருந்தாள். அவர் கையிலிருந்து வாந்தி எச்சம் வழிந்து கீழே ஜமுக்காளத்தில் சொட்டியது.

அவர் உணர்ச்சியற்ற குரலில் கேட்டார். ''நீ சொல்வது உண்மையானால் என் அம்மாவின் முதல் பெயர் என்னவென்று உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே? என்ன அது?''

# 17

''என் அம்மாவின் முதல் பெயரைச் சொல்லு பார்க்கலாம்,'' என்று கராஸ் பாதிரியார் சவால் விட்டவுடன், ரெஜினா என்ற பெயருள்ள 'அது' அவரைப் பார்த்துச் சீறிற்று. அதன் வெறிபிடித்த கண்கள் பளபளத்தன. நல்ல பாம்பின் படம் போல அதன் தலை மெல்ல ஆடியது.

''சொல்லு! என்ன பெயர்?''

கோபம் பொங்கும் தொனியில் காட்டு மானைப்போல ரெஜினா கத்தினாள். அந்தச் சத்தம் ஜன்னலின் சட்டங்களைக் கிழித்தது. பெரிய ஜன்னலின் கண்ணாடிகளைக் குடைந் தெடுத்தது. அவள் விழிகள் மேலே செருகிக் கொண்டு சுழன்றன.

அந்தக் கூச்சல் ஓயட்டும் என்று சிறிது நேரம் கராஸ் பாதிரியார் காத்திருந்தார். பிறகு தன் ஸ்வெட்டரைக் கவனித்தார். வாந்தியின் அசிங்கம் கையில் இருந்ததால் அறையைவிட்டு வெளியே வந்தார்.

சுவரோடு சாய்ந்து நின்றிருந்த கிறிஸ்டி ஓடிவந்தாள். பாதிரியாரின் ஸ்வெட்டரை வேதனையுடன் நோக்கினாள். ''வாந்தியெடுத்தாளா?''

''ஒரு துவாலை இருக்கிறதா?'' என்றார் அவர்.

''அதோ நேரே போனால் பாத்ரூம் இருக்கிறது,'' என்று பக்கத்திலிருந்த கதவைச் சுட்டிக்காட்டினாள். ''கார்ல், அவள்மீது ஒரு கண் வைத்துக்கொள்,'' என்று வேலைக் காரனிடம் சொல்லிவிட்டுப் பாதிரியாரின் பின்னாலேயே சென்றாள்.

ஸ்டாண்டிலிருந்து ஒரு துவாலையை உருவி அவரிடம் கொடுத்து, ''ரொம்ப ஸாரி,'' என்றாள், சங்கடமும் வேதனையும் நிரம்பிய குரலில்.

பாதிரியார் வாஷ்பேசினுக்குச் சென்றார். ''அவளுக்குத் தூக்க மாத்திரைகள் கொடுப்பதுண்டா?'' என்றார்.

கிறிஸ்டி அவருக்காகக் குழாயைத் திறந்துவிட்டாள். ''ஆமாம், லிப்ரியம் தருகிறோம்.''

''எவ்வளவு அளவு கொடுக்கிறீர்கள்?''

''இன்றைக்கு நானூறு மில்லிக்ராம் கொடுத் திருக்கிறோம், ஃபாதர்.''

*''நாலு நூறு!''*

*''ஆமாம். அதன் பிறகுதான் கைகாலில் கட்டுப் போட முடிந்தது. அதுவும் நாங்கள் எல்லாருமாகச் சேர்ந்து-''*

*''உங்கள் பெண்ணுக்கு நானூறு மில்லிக்ராம் லிப்ரியம் ஒரே வேளையில் கொடுத்திருக்கிறீர்கள்!''*

*''அவளுக்கு உடம்பில் எத்தனை பலமிருக்கிறதென்று சொன்னால் உங்களால் நம்பவே முடியாது.''*

*குழாயின் கீழ் அவர் கழற்றி தந்த ஸ்வெட்டரைப் போட்டுத் தண்ணீரை அதன்மீது திருப்பி விட்டாள் அவள். ''வேலைக்காரியிடம் சொல்லி இதைத் துவைத்து உலர்த்தச் சொல்கிறேன். வெரி ஸாரி.''*

*''இருக்கட்டும். ஒண்ணும் பெரிய விஷயமில்லை.''*

*வென்னீர்க் குழாயில் கையைக் காட்டி வாந்தியைச் சுத்தம் செய்து கொண்டார் அவர். ''ஏதாவது சாப்பிடு கிறாளோ?'' என்றார்.*

*அவள் துவாலையைச் சுருட்டுவதும் பிரிப்பதுமாக இருந்தாள். அது சிவப்பு நிறத் துண்டு. நீல நிற நூலில் ரெஜினா என்று சித்திரப் பூவேலை செய்யப்பட்டிருந்தது. ''ஆகாரம் எதுவும் கிடையாது, ஃபாதர். அவள் தூங்கிக் கொண்டிருக்கும் போது குழாய் மூலம் ஸஸ்டெஜன் மட்டும் கொடுக்கிறோம். ஆனால் ட்யூப்களை அவள் பிடுங்கி எறிந்துவிட்டாள்.''*

*''பிடுங்கி எறிந்தாளா?''*

*''ஆமாம். இன்று.''*

*பாதிரியார் கைகளைக் கழுவிக் கொண்டார். சற்று மௌனமாக இருந்த பின்னர், ''அவளை ஆஸ்பத்திரியில் சேர்ப்பித்திருக்க வேண்டும்,'' என்றார்.*

*''அது மட்டும் முடியாது,'' என்றாள் கிறிஸ்டி உணர்ச்சியற்ற குரலில்.*

*''ஏன்?''*

*''என்னால் முடியாது, அவ்வளவுதான்.'' கவலையினால் குரல் நடுங்க, சொன்னதையே திருப்பிச் சொன்னாள் அவள். ''வேறு யாரையும் இதில் சம்பந்தப்படுத்த நான் விரும்பவில்லை.அவள்...'' அவள் தலையைக் குனிந்து கொண்டாள். டைரக்டர் பர்க்கின் மரணம் அவள் நினைவில் நின்றது. ''அவள் ஒன்று செய்திருக்கிறாள், ஃபாதர். அது மற்றவர்களுக்குத் தெரிவதற்கு நான் இடம் தரமாட்டேன்... டாக்டருக்குத் தெரியக்கூடாது. நர்ஸுக்குத் தெரியக் கூடாது.'' அவள் நிமிர்ந்து பார்த்தாள். ''ஊகூம். யாருக்கும் தெரியக் கூடாது.''*

*சிறிது கோபத்துடன் கராஸ் பாதிரியார் குழாயை மூடினார். வாஷ் பேசினை வெறித்து நோக்கியபடி தலையைத் தாழ்த்திக் கொண்டார். ''யார் அவளுக்கு ஸஸ்டெஜன், லிப்ரியம் முதலிய மருந்துகளைக் கொடுக்கிறார்கள்?''*

*''நாங்கள்தான் கொடுக்கிறோம். எப்படிக் கொடுப்பது என்று டாக்டர் சொல்லித் தந்திருக்கிறார்.''*

*''மருந்துகளுக்கு டாக்டர் சீட்டு வேண்டுமே?''*

*கராஸ் பாதிரியார் அவளை நோக்கித் திரும்பினார். கிறிஸ்டியின் பயம் தோய்ந்த பார்வையை ஒரு நிமிடம் சந்தித்தபோது, அதில் ஏதோ பயங்கரமான ரகசியத்தை, பீதியைக் கண்டார். அவள் கையிலிருந்த துவாலையைப் பார்த்துத் தலையசைத்தார். அவள் வெறித்துப் பார்த்தபடி பேசாமலிருந்தாள். ''துவாலை ப்ளீஸ்,'' என்று மெல்ல அவர் சொன்னதும் விழிப்படைந்தவளாக, ''ஸாரி,'' என்று கூறித்*

*துவாலையை அவரிடம் கொடுத்தாள். அவள் செய்கைகளில் குழப்பம் இருந்தது. கடைசியில், ''ஃபாதர், உங்களுக்கு அவளைப் பற்றி என்ன தோன்றுகிறது?'' என்று கேட்டாள். ''அவளுக்குப் பேய் பிடித்திருக்கிறது என்று நினைக் கிறீர்களா?''*

*''நீங்கள் நினைக்கிறீர்களா?''*

*''எனக்குத் தெரியவில்லை. நீங்கள் அல்லவா இதில் எக்ஸ்பர்ட்?''*

*''பேய் பிடிப்பது பற்றி உங்களுக்கு எவ்வளவு தூரம் தெரியும்?'' என்று பாதிரியார் கேட்டார்.*

*''ஏதோ புத்தகங்களில் கொஞ்சம் படித்ததுதான். டாக்டர்கள் கொஞ்சம் சொன்னார்கள்.''*

*துவாலையை மடித்து நீவினார் அவர். ''நீங்கள் கத்தோலிக்கரா?''*

*''இல்லை.''*

*''உங்கள் பெண்?''*

*''இல்லை.''*

*''என்ன மதம்?''*

*''எந்த மதமுமில்லை. ஆனால்-''*

*''பின்னே ஏன் என்னிடம் வந்தீர்கள்? யார் உங்களுக்கு யோசனை சொன்னது?''*

*அவள் வேதனையுடன் கடகடவென்று சொன்னாள்: ''எனக்கு எந்த வழியும் தெரியவில்லை. ஒன்றுமே புரிய வில்லை. அதனால் உங்களிடம் வந்தேன். யாரும் எனக்கு யோசனை சொல்லவில்லை.''*

துவாலையின் நுனிகளை வருடிய வண்ணம் அவளுக்கு முதுகைக் காட்டினாற்போல் நின்றிருந்தார் அவர்.

''யாரோ மனத் தத்துவ டாக்டர்கள் என்னைப் பார்க்கச் சொன்னதாக முதலில் சொன்னீர்களே?''

''ஓ, நான் என்ன பேசுகிறேன் என்பது எனக்கே தெரியவில்லை. எனக்கு மூளை குழம்பிப் போயிருக்கிறது!''

நிதானமாகவும் அழுத்தமாகவும் அவர் சொன்னார்: ''இதோ பாருங்கள். உங்கள் மூளை குழம்பியிருப்பதைப் பற்றி எனக்கு அக்கறையில்லை. என்ன செய்தால் உங்கள் மகளுக்குக் குணமாகும் என்பது ஒன்றுதான் எனக்குக் கவலை. ஆனால் பேயோட்டுவது என்பதை ஏதோ அதிர்ச்சி வைத்தியம் மாதிரி நீங்கள் செய்ய நினைத்திருக்கிறீர்க ளென்றால் அது அவ்வளவு சுலபமாக நடக்காது...'' துவாலை மாட்டும் ஸ்டாண்டை அவர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். அவர் கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன. 'என்ன வந்தது எனக்கு' என்று தனக்குத் தானே ஆச்சரியப்பட்டுக் கொண்டார்.

குரலைத் தணித்துக் கொண்டு தொடர்ந்தார்: ''இது பேய் பிடித்ததாகவும் இருக்கலாம், மனக் கோளாறாகவும் இருக்கலாம். என்னால் எவ்வளவு முடியுமோ அவ்வ்ளவு உதவி செய்ய நான் தயாராயிருக்கிறேன். ஆனால் எனக்கு உண்மை தெரிந்தாக வேண்டும். ரெஜினாவின் நன்மையை முன்னிட்டுக் கேட்கிறேன்,'' என்றார். அவளை நோக்கிப் புன்னகை செய்தார். ''கீழே போய் நாம் பேசலாமே? ஒரு கப் காப்பி சாப்பிட வேண்டும் போலிருக்கிறது எனக்கு.''

''எனக்கும்தான்,'' என்றாள் கிறிஸ்டி. ரெஜினாவைப் பார்த்துக் கொள்ளும்படி ஷெரானிடம் சொல்லிவிட்டு இருவரும் கீழே படிக்கும் அறைக்குச் சென்றார்கள். கணப்படியில் பாதிரியார் அமர்ந்து கொண்டார்.

ரெஜினாவின் நோயைப் பற்றிய விவரங்களை ஆதியோடந்தமாகச் சொல்லி முடித்தாள் கிறிஸ்டி. ஆனால் டைரக்டர் பர்க் டென்னிங்ஸின் விசித்திரமான மரணத்தைப் பற்றி மட்டும் எச்சரிக்கையாகச் சொல்லாமல் மறைத்து விட்டாள்.

# 18

ரெஜினாவிடம் ஏற்பட்டுள்ள கோளாறுக்குக் கராஸ் பாதிரியார் வைத்திய சம்பந்தமான விளக்கம் கூறத் தொடங்கியதும் கிறிஸ்டிக்கு எரிச்சல் ஏற்பட்டது.

''ஃபாதர், இந்தக் குப்பையெல்லாம் நான் ஏற்கெனவே கேட்டுக் கேட்டு அலுத்துப் போய் விட்டது! நீங்களே கண்ணால் இவ்வளவு பார்த்தீர்களே, அப்புறமும் எப்படி வைத்திய அடிப்படையில் விளக்கம் சொல்கிறீர்கள்?'' என்றாள்.

''மனநோய் ஆஸ்பத்திரிகளில் நான் பார்த்த அளவுக்கு நீங்கள் பார்த்திருந்தீர்களானால் நான் சொல்வதை ஒப்புக் கொள்வீர்கள்,'' என்றார் பாதிரியார்.

''அந்த மர்மமான சத்தங்கள், பொருள்கள் தானாகவே எழும்பிக் குதிப்பது - இதெல்லாம்?''

''இரண்டும் கெட்டான் வயதில் உள்ளவர்களுக்கு உணர்ச்சி வசப்படும் சந்தர்ப்பம் ஏற்படும்போது இப்படி நேரிடுவதுண்டு. உள்ளுக்குள் ஒரு கடுமையான போராட்டம் நிகழும்போது, கண்ணுக்குத் தெரியாத சக்தியொன்றை அது கிளப்பி விடுகிறது. அந்தச் சக்தி சில பொருள்களை நகர்த்தக் கூடும். அதிலே அமானுஷ்யமானது எதுவுமில்லை. ரெஜினாவின் அபாரமான தேகப்பலம்கூட அப்படித்தான்.''

''என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை,'' என்று கண்கலங்கினாள் கிறிஸ்டி. ''ஸ்பிளிட் பர்ஸனாலிடி என்கிறார்கள். அதுவும் என்னவென்று தெரியவில்லையே?''

பாதிரியார் மென்மையாக விளக்கிக் கொண்டே இருந்தார்.

எதையும் நம்ப முடியாதவளாக அவள் வெறித்து நோக்கிக் கொண்டிருந்தாள். ''பேசாமல் பேய் பிசாசு சமாசாரத்தை நம்பிவிட்டுப் போவதே சுலபமாய்த் தோன்றுகிறது, ஃபாதர்.''

''வந்து...''

''ஒன்று சொல்கிறேன், கேளுங்கள், ஃபாதர்,'' என்று தாழ்ந்த, தீவிரமான குரலில் அவள் சொன்னாள்: ''ரெஜினாவைப் போலவே அச்சாக இருக்கும் ஒரு பெண்ணை எனக்குக் காட்டுங்கள் - அதே குரல், அதே முகம், அதே வாசனை - எழுத்தில்கூட ரெஜினாவைப் போலவே எழுதும் பெண் - அப்படியொருத்தியைக் காட்டினீர்களானால் கூட, நான் அவள் ரெஜினா அல்ல என்று கண்டுபிடித்து விடுவேன். என் உள்ளுணர்வுக்கு அது தெரிந்து விடும். ஆகவே சொல்கிறேன் - மாடியில் இருக்கிறதே அது... அது என் பெண்ணேயில்லை, ஃபாதர்! அது என் பெண்ணே அல்ல!''

ஆவேசம் வடிந்தவளாக அவள் பின்னுக்குச் சாய்ந்து கொண்டாள். ''நான் என்னதான் பண்ணட்டும் ஃபாதர், சொல்லுங்கள். அவள் மூளைக்குள் ஏதோ கோளாறே தவிர வேறெதுவும் இல்லை என்கிறீர்கள். பேயோட்டத் தேவையில்லை என்கிறீர்கள். அதனால் அவளுக்குப் பயன் ஏற்படாது என்கிறீர்கள். பின்னே நான் என்னதான் செய்யட்டும், சொல்லுங்கள் ஃபாதர்!''

பல வினாடிகளுக்குக் கராஸ் பாதிரியார் மௌனமாக இருந்தார்.

பிறகு மெல்லக் கேட்டார். ''ரெஜினாவின் குரல் ஆழமாய், கனமாயிருப்பது வழக்கமா?''

''ஊகூம். சன்னமாய், மேலோடு இருக்கும்.''

''அவளுடைய அறிவுத் தரம் எப்படி?''

''சராசரியாயிருக்கும்.''

''என்ன மாதிரியான புத்தகங்கள் படிப்பாள்?''

''பொதுவாக, கதைப் புத்தகங்கள், காமிக்ஸ் இப்படித்தான்.''

''அவளுடைய பேச்சுப் பாணி எப்படி? முன்னைக்கு இப்போது மாறியிருக்கிறதா?''

''தலைகீழாய்! இந்த மாதிரி கெட்ட வார்த்தைகளை முன்பு அவள் சொல்லவே மாட்டாள்.''

''நான் வார்த்தைகளைக் கேட்கவில்லை. வார்த்தை களை உச்சரிக்கிற விதம்?''

''நான் கவனிக்கவில்லை.''

''அவள் எழுதின கடிதங்கள் ஏதாவது வைத்திருக் கிறீர்களா? அவள் குரல் - முன்பு ரெகார்டு பண்ணி வைத் திருந்தது ஏதாவது கிடைத்தால் நன்றாயிருக்கும்...''

''ஓ! அவள் அப்பாவுக்காக அவள் பேசியதை டேப் பண்ணிவைத் திருக்கிறேன்,'' என்றாள் கிறிஸ்டி. ''அப்பாவுக் குக் கடிதம் எழுதுகிற மாதிரி டேப்பில் பேசப் போகிறேன் என்று அவள் சொல்லிக் கொண்டிருந்தாள். ஆனால் அதை முடிக்கவேயில்லை. அது வேண்டுமா உங்களுக்கு?''

''ஆமாம், கொடுங்கள். அத்தோடு ஆஸ்பத்திரியில் அவளைப் பற்றிய குறிப்புகள் என்ன வைத்திருக்கிறார்களோ அதையும் வாங்கி வாருங்கள். அவைகளை நான் பார்க்க வேண்டும்.''

''ஏன்?''

''பேயோட்டுவதென்றால் சர்ச்சின் மேலிடத்தாரிடம் போய் நான் அனுமதி பெற வேண்டும்,'' என்றார் பாதிரியார். ''உங்கள் மகளுக்கு ஏற்பட்டிருப்பது வெறும் மனக் கோளாறு மட்டுமல்ல என்று அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். பிறகு, அவளுக்குப் பேய்தான் பிடித்திருக்கிறது என்பதற்கான ருசுக்களைக் கண்டுபிடித்தாக வேண்டும்... சரி, ஆஸ்பத்திரிக் குறிப்புக்கள் சீக்கிரமே வாங்கி வந்து விடுகிறீர்களா?''

''கொண்டு வருகிறேன்.''

''அந்த டேப்?''

அவள் எழுந்துகொண்டாள். ''இதோ போய்ப் பார்க்கிறேன்.''

''இன்னொரு விஷயம்,'' என்றார் கராஸ் பாதிரியார். கிறிஸ்டி நின்றாள். ''பேய் பிசாசுகளைப் பற்றி ஒரு புத்தகம் இருந்ததாகச் சொன்னீர்களே, அதை ரெஜினா எப்போது படித்திருக்க முடியும் என்று உங்களால் ஞாபகப்படுத்திச் சொல்ல முடியுமா? இந்தக் கோளாறு ஏற்படுவதற்கு முன்னதாக அவள் படித்திருக்கக் கூடுமா?''

அவள் நகத்தைக் கொறித்தபடி யோசனை செய்தாள்: ''வந்து... ஆமாம்... இந்தக் கோளாறு ஏற்படுவதற்கு முந்தின தினம் அவள் படித்துக் கொண்டிருந்ததாக ஞாபகம்... சரியாய்த் தெரியவில்லை. ஆனால் படித்தாள். அது நிச்சயம்...''

''அந்தப் புத்தகத்தைக் கொடுக்கிறீர்களா?''

''தாராளமாய். இதோ போய் எடுத்து வருகிறேன்,'' என்று அவள் எழுந்து சென்றாள்.

பாதிரியாரும் எழுந்து கொண்டார். கீழே தரையில் விரிக்கப்பட்டிருந்த கம்பளத்தின் பூக்களைப் பார்த்தபடி கொஞ்ச நேரம் நின்றார். பிறகு மெல்ல நடந்து வாசல்புறம் போய், பையில் இரு கைகளையும் நுழைத்தபடி, இருளில் அசையாமல் நின்றார். மாடியிலிருந்து பன்றியின் உறுமல்கள் கேட்டன; பிறகு ஒரு குள்ளநரியின் ஊளை கேட்டது; அடுத்து கனைப்புகள், சீறல்கள்...

அவள் கொண்டு வந்த டப்பையும் புத்தகத்தையும் அவர் பெற்றுக் கொண்டார். ''நாளை சாயந்தரம் நான் மறுபடி வருகிறேன். அதற்குள் ஏதாவது முக்கியமாக நடந்தால் என்னைக் கூப்பிடத் தவறாதீர்கள். எந்த நேரமாக இருந்தாலும் பரவாயில்லை. நான் எங்கள் டெலிபோன் ஆபரேட்டரிடம் சொல்லி வைக்கிறேன்.''

அவள் தலையாட்டினாள். அவர் கதவைத் திறந்து கொண்டார். ''மறுபடி எந்த டாக்டரையும் கூப்பிட்டுக் காட்டப் போவதில்லையா?''

''இல்லை'' என்றாள் அவள் ஆழமான குரலில்.

கடற்கரையில் அலைகள் வந்து அடிப்பதுபோல அவள் இதயத்தில் கவலைகள் மோதிக் கொண்டிருப்பதை அவரால் உணர முடிந்தது. ''நல்லது... கண்ட கண்ட நேரத்தில் நான் இங்கே வரவேண்டியிருக்கும் என்றால் என் மேலதிகாரியிடம் இதைப்பற்றிச் சொல்லியாக வேண்டும்...''

அவள் முகம் கறுத்தது. ''சொல்லத்தான் வேண்டுமா, ஃபாதர்?''

''இல்லாவிட்டால் தப்பாயிருக்குமே? கவலைப் படாதீர்கள். எவ்வளவு அவசியமோ அவ்வளவு மட்டுமே சொல்வேன்.''

அவள் தனது தீனமான, வேதனை பிடித்த முகத்தை உயர்த்தி அவருடைய சக்திமிக்க, சோகமான கண்களைச் சந்தித்தாள். அவற்றில் வலுவையும் கண்டாள்; வலியையும் கண்டாள்.

அவர் படியிறங்கியவர், ஏதோ யோசிப்பவர் போல உதட்டில் விரலை வைத்துக் கொண்டு நின்றார். திரும்பினார். ''ஒரு பாதிரியார் வரப்போகிறார் என்பது உங்கள் பெண்ணுக்குத் தெரியுமா?''

''தெரியாது - என்னைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது.''

''என் தாய் சமீபத்தில் காலமானது உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியும். வருத்தமாயிருந்தது.''

''ரெஜினாவுக்குத் தெரியுமா?''

''ஊகூம். அவளுக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்? தெரியாது. எதற்குக் கேட்கிறீர்கள்?''

''ஒன்றுமில்லை. சும்மாதான்,'' என்றார் அவர். ''நீங்கள் எதற்கும் உங்கள் பெண்ணிடமிருந்து விலகியே இருங்கள். அவளுடைய இப்போதைய நிலைமையை அதிகம் பார்க்க பார்க்க, உங்கள் உணர்ச்சிகளும் பாதிக்கப் படக்கூடும். எட்டவே இருங்கள். பதட்டப்படாமல் அமைதியாய் இருங்கள்.''

அவர் தெருக்கோடி போகிற வரையில் கிறிஸ்டி பார்த்துக் கொண்டு நின்றாள்.

ஆனால், தெரு முனையில் ஒரு கார் நிற்பதையும் அதனுள் துப்பறியும் நிபுணர் கிண்டர்மான் உட்கார்ந் திருப்பதையும் அவள் பார்க்கவில்லை.

# 19

**பா**திரியார்கள் தங்கியுள்ள இடத்திலிருக்கும் தன் அறைக்கு விரைவாகத் திரும்பினார் கராஸ் பாதிரியார். ஜார்ஜடவுன் நூலகத்திலிருந்து எடுத்து வந்திருந்த பத்திரிகைகளும் புத்தகங்களும் அவர் கை நிறைய இருந்தன. தன் மேஜைமீது அவைகளைப் பொத்தென்று போட்டார். மேஜை அறைகளைக் குடைந்து, பாதி தீர்ந்திருந்த சிகரெட் பாக்கெட் ஒன்றைக் கண்டுபிடித்தார். ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு ஆழ இழுத்தார்.

ஹிஸ்டீரியா. ஆம். ஹிஸ்டீரியாவாகத்தான் இருக்க வேண்டும் என்று அவருக்குப் புரிந்தது. புகையை வெளிவிட்டார். இடுப்பு வாரில் இரு கட்டை விரலையும் செருகிக்கொண்டு மேஜைமீது கிடக்கும் புத்தகங்களைக் குனிந்து பார்த்தார். மனக் கோளாறுகள் பற்றியும் பேய் பிடிப்பது பற்றியும் பல அறிஞர்கள் எழுதிய புத்தகங்கள்.

கராஸ் பாதிரியார் நெற்றியை வழித்துவிட்டுக் கொண்டு விரல்களைப் பார்த்தார். வியர்வை கசகசவென்று மினுமினுத்தது. வாசல் கதவு திறந்திருப்பதை அப்போதுதான் கவனித்தார். எழுந்து சென்று கதவைச் சாத்திக் கொண்டார். சிவப்பு அட்டை போட்ட கனத்த புத்தகமொன்றை அலமாரியிலிருந்து எடுத்தார். ‘ரோமானியச் சடங்குகள்’ என்ற தலைப்பிட்டது. சடங்குகளும் பிரார்த்தனைகளும் அடங்கிய தொகுப்பு. உதட்டில் சிகரெட்டைத் தொற்ற வைத்துக்

கொண்டு, புகையினூடே கண்ணை இடுக்கியபடி பக்கங் களைப் புரட்டினார். 'பொது விதிகள்' என்ற தலைப்பின் கீழ் பேய் ஓட்டுபவர்கள், பேய் பிடித்திருப்பதற்கான அறிகுறிகளை எப்படிக் கண்டுபிடிக்க வேண்டும் என்று கூறப்பட்டிருந்தது. முதலில் மேலோடு பார்த்தார். பிறகு மெதுவாகப் படிக்கலானார்:

> பேயோட்டி, ஒருவருக்குப் பேய் பிடித் திருக்கிறது என்று சொல்லப்படுவதை உடனே நம்பி விடக்கூடாது. வெறும் வியாதி - குறிப்பாக மனநோய் - உள்ளவர்களுக்கும் இவர்களுக்கும் வித்தியாசம் இருக்கிறதா என்று சில அறிகுறிகளைக் கொண்டு கண்டுபிடிக்க வேண்டும். பேய் பிடித்திருப்பவரிடம் கீழ்க்கண்ட அறிகுறிகள் தென்படும்: ஏதாவதொரு அன்னிய மொழியைச் சரளமாகப் பேசும் திறமை பெற்றிருப்பார்கள்; அல்லது அன்னிய மொழியில் வேறொருவர் பேசினால் புரிந்து கொள்வார்கள். எதிர்காலத்து நிகழ்ச்சிகள் அல்லது ஒளிக்கப்பட்ட ரகசியங்களைச் சொல்லும் திறமை. அந்த நபரின் வயதுக்கு இயற்கையான நிலைமைக்கும் மீறிய சக்திகளை வெளிப்படுத்துதல்...

கராஸ் பாதிரியார் புத்தகத்தை மூடி வைத்துவிட்டு, புத்தக அலமாரியின்மீது சாய்ந்தாற்போல் சிறிது நேரம் யோசனை செய்தார். பிறகு புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ள மீதிக் குறிப்புக்களையும் படித்து முடித்தார்.

யாரோ கதவைத் தட்டினார்கள்.

''உள்ளே வரலாம்,'' என்றார்.

டையர் பாதிரியார்தான் வந்தார். லெமனேட் இருக்கிறதா என்ற கேட்டுவிட்டு வளவளவென்று பேசிக்

கொண்டிருந்தார் அவர். ''இதோ பாருங்கள், எனக்கு வேலையிருக்கிறது,'' என்று கூறிய கராஸ் பாதிரியார், ''இங்கே டேப் ரெகார்டர் இருக்கிறதா?'' என்று கேட்டார்.

''ஃபாதர் ஜெனிட்டரின் அறையில் இருக்கிறது. நான் சாவி வாங்கி வந்து தருகிறேன்,'' என்று புறப்பட்டுச் சென்றார் டையர்.

கராஸ் பாதிரியார் குளித்து உடை மாற்றிக் கொண்டார். மேஜை மீது ஃபாதர் ஜெனிட்டரின் அறைச் சாவி வைக்கப்பட்டிருந்தது. கைக் கடியாரத்தைக் கழற்றி மேஜைமீது வைத்துக் கொண்டார். மணி 10.58 காட்டிற்று. மீண்டும் படிக்கத் தொடங்கினார். சாம்பல் கிண்ணத்தில் சிகரெட்டு முனைகள் குவிந்து கொண்டேபோயின. களைப்புடன் எழுந்து ஜன்னலருகே சென்று நின்று கொண்டார். விடிகாலைக் காற்று அவர் முகத்தை வருடியது.

பேய் பிடித்தவருக்கு வெளிப்புற அறிகுறிகள் என்னென்ன உண்டோ அவ்வளவும் ரெஜினாவிடம் இருக்கின்றன என்று அவருக்குத் தெரிந்தது. அதில் சந்தேக மில்லை. அவர் படித்த வரையில், அது எந்த தேசமானாலும் சரி, எந்தக் காலமானாலும் சரி, பேய் பிடித்தவர்களுக்கு இதே அறிகுறிகள்தான் குறிக்கப்பட்டிருந்தன.

இன்னும் சில அறிகுறிகள் தான் மிச்சம் - அருவருப்பான உணவுகளில் ஆசை, உடம்பில் வலி உணராமை, இடைவிடாத, அடக்க முடியாத, உரத்த இருமல்கள் - இதுபோன்ற அறிகுறிகள் இன்னும் வரவில்லை.

இருளில் மூழ்கிக் கிடக்கும் தெருவைப் பார்த்தார். எட்டத்தில் ரெஜினாவின் வீடும் மாடியிலுள்ள படுக்கையறையின் பெரிய ஜன்னலும் தெரிந்தன.

இதுவரை படித்தவற்றில் ஒன்று அவருக்குத் தெளிவாகப் புலப்பட்டது. பேய் என்பது பெரும்பாலும் பெண்களைத்தான் பிடித்துக் கொள்கிறது.

ஏதோ ஓர் அன்னிய சக்தி அப்படிப்பட்ட எண்ணங் களைப் புகுத்துவதால்தான் மனக்கோளாறு ஏற்படுகிறது என்று ரெஜினாவின் வைத்தியக் குறிப்புகள் கூறின. அப்படி யானால் எது புகுந்திருக்கும்? பில்லி சூனியம்பற்றி ஒரு புத்தகம் இருந்ததாகக் கிறிஸ்டி கொடுத்தாளே? அதை எடுத்துப் புரட்டினார். பேய் பிடிப்பது பற்றிய அத்தியாயத்தைக் கவனித்தார். இதைப் படித்துத்தான் ரெஜினாவுக்கு அந்தக் கோளாறு ஏற்பட்டிருக்குமோ?

பக்கங்களைப் புரட்டினார். இதிலுள்ள விவரங்களைப் போலவே ரெஜினாவின் கோளாறுகளும் இருக்குமானால்... ஒரு வேளை...

ரெஜினா கத்துவதைப் போலவே கத்துகிறவர்கள்; குரல் உச்சரிப்பு மாறியவர்கள்; புரியாத மொழியில் உளறியவர்கள்; பம்பரம் போல் உடம்பைச் சுழற்றியவர்கள் - இப்படிப் பல 'கேஸ்'கள் அதில் தரப்பட்டிருந்தன.

ஒரு வேளை... ரெஜினா இதைப் படித்திருக்கக் கூடும். ஆனால் இதனால் மட்டுமே அவளுக்குக் கோளாறு ஏற்பட்டிருக்கக் கூடுமா? இருக்காது. ஒருநாளும் இருக்காது.

பின்னே என்னதான் அது? உண்மையிலேயே பேய் என்ற ஒன்றுதான் ரெஜினாவைப் பிடித்திருக்கிறதா?

பேயோட்டுவது பற்றிய புத்தகத்தை மறுபடி எடுத்துப் பார்த்தார். சற்று முன் அடிக் கோடிட்டிருந்த வரிகளைப் பார்த்தார். பேய்தான் பிடித்திருக்கிறது என்பதைப் பேயோட்டுகிறவர் மிக எச்சரிக்கையாக ஆராய்ந்து தெளிய வேண்டும்.

அறையின் குறுக்கும் நெடுக்குமாக உலாவியபடி, ரெஜினாவின் ஒவ்வொரு கோளாறையும் பற்றிச் சிந்தனை செய்தார். ஒவ்வொன்றுக்கும் ஒரு விளக்கம் தர முடிந்தது.

அவரை ஒரு பாதிரியார் என்று ரெஜினாவால் எப்படிக் கண்டுபிடிக்க முடிந்தது? பில்லி சூனியப் புத்தகத்தில், பேயோட்டுவதற்கு ஒரு பாதிரியார் வருவார் என்று படித்திருப்பாள்.

அவருடைய அம்மாவைப் பற்றிச் சொன்னாளே, அது? ஊகித்திருக்கிறாள். அவருக்கு நாற்பத்தாறு வயதாகிறது. அவர் அம்மா உயிருடன் இருக்கமாட்டாள் என்று ஊகித் திருக்கிறாள்.

உன் அம்மா இங்கே எங்களோடுதான் இருக்கிறாள், கராஸ், என்று ரெஜினா சொன்னது அவருக்கு நினைவு வந்தது.

சிகரெட்டிலிருந்து சுருளாகக் கிளம்பும் புகையை வெறித்து நோக்கியவாறு அவர் உட்கார்ந்திருந்தார். மேஜையின் இடது பக்கச் செருகு அறையை அவர் கை துழாவிக் கொண்டிருந்தது. ஒரு பழைய நோட்டுப் புத்தகம் அவர் கையில் தட்டுப்பட்டது. அவருடைய அம்மாவி னுடையது. 'முதியோர் கல்வி' வகுப்பில் அவள் சேர்ந்த பொழுது எழுதிய பாடங்கள். மேஜைமீது எடுத்து வைத்துக் கொண்டு பாசத்துடன், மிருதுவாக ஒவ்வொரு பக்கமாக மெல்லப் புரட்டினார். ஏபிஸிடி எழுத்துக்கள். கொட்டை கொட்டையான எழுத்துக்கள். பிறகு எளிய பயிற்சிகள்.

ஒரு பக்கத்தில், ஏதோ ஒரு கடிதம் எழுத முயற்சி கோணல் கோணலான கையெழுத்தில்.

அன்புள்ள டிம்மி, நான் காத்துக் கொண்டிருக்கிறேன்...

இதற்கு மேல் பூர்த்தியாகவில்லை. மீண்டும் எழுத ஆரம்பித்தும் பார்த்து, மீண்டும் நின்று விட்டிருந்தது.

கராஸ் பாதிரியார் நிமிர்ந்து நோக்கினார். ஜன்னலில் அவளுடைய கண்கள் தெரிந்தன... காத்துக் கொண்டு...

அந்தக் கண்கள் ரெஜினாவின் கண்களாக மாறின. கிறீச்சிடும் கண்கள்... காத்துக் கொண்டிருக்கும் கண்கள்...

ரெஜினாவின் குரல் பதிவாகியுள்ள 'டேப்'பை நோக்கினார் அவர்.

அறையை விட்டு வெளியே சென்றார். டேப்பையும் எடுத்துக் கொண்டு, டையர் பாதிரியார் தந்திருந்த சாவியைக் கொண்டு ஜெனிட்டரின் அறையைத் திறந்தார். டேப் ரெகார்டரை எடுத்து வைத்துக் கொண்டார். டேப்பைப் பொருத்தினார். காது போனைக் காதில் மாட்டிக் கொண்டு விசையைப் போட்டார். முன்புறமாகக் குனிந்தவாறு உற்றுக் கேட்டார். சோர்வு ஒரு பக்கம், தீவிரம் ஒரு பக்கம்.

கொஞ்ச நேரத்துக்கு டேப் சுழலும் சத்தம் மட்டுமே கேட்டது. யந்திரத்தின் சிறுசிறு கீச்சு ஒலிகள்; பிறகு யாரோ, வரும் சத்தங்கள். குரல்கள்: ''ஹலோ...'' பின்னணியில் கிறிஸ்டியின் கிசுகிசுப்பான குரல். ''மைக்குக்கு அவ்வளவு கிட்டப் போகக் கூடாது கண்ணு. பின்னுக்குப் போ.'', ''இப்படியாம்மா?'', ''இன்னும் கொஞ்சம்...'', ''இது போதுமா?'', ''ரைட், பேசு, கண்ணே'' கிளுகிளு என்று சிரிப்பு. மைக்ரபோன் மேஜையில் இடிக்கும் சத்தம். அதைத் தொடர்ந்து ரெஜினாவின் தெளிவான, இனிமையான குரல் கேட்கத் தொடங்கியது.

# 20

குழந்தை ரெஜினாவின் குரல் டேப்ரிகார்டரில் ஒலிக்கத் தொடங்கியது:

''ஹலோ அப்பா! நான்தான் பேசறேன். வந்து... ம்...'' கிளுகிளுவென்று சிரிப்பு. பிறகு ரகசியமான குரலில் தனியே: ''என்ன பேசறதுன்று தெரியலே அம்மா.'' ''நீ எப்படி இருக்கிறே என்று சொல்லேன், கண்ணு. நீ செஞ்சிட்டிருக்கிற வேலைகளைப் பத்திச் சொல்லு.'' மேலும் கிளுகிளுவென்று சிரிப்பு. ''ம்... வந்து அப்பா ...வந்து... நான் பேசறேன், அப்பா. நான்தான்... உனக்குக் கேட்குது இல்லே?... இரு இரு. வந்து... ம்... ம்... நாங்க... முன்னே வாஷிங்டனிலே இருந்தோம்... வாஷிங்டன் உனக்குத் தெரியுமில்லே?... ஜனாதிபதியெல்லாம் இருக்கிறாரே அந்த ஊர். இப்ப இந்த வீடு... இல்லேல்லே. இரு அப்பா. நான் மறுபடியும் முதல்லேயிருந்து சொல்றேன். வந்து அப்பா...''

அதற்கப்புறம் வந்த பேச்செல்லாம் எங்கோ வெகு எட்டத்திலிருந்து வருகிற மாதிரி மங்கலாகத்தான் கேட்டது கராஸ் பாதிரியாருக்கு. அந்தக் குரலை அடக்கிக் கொண்டு ஒரு பெரும் இரைச்சல் - சமுத்திரத்தின் கர்ஜனை போல - அவர் மார்பில் பொங்கியெழுந்து காதுகளில் மோதிக் கொண் டிருந்தது. ஏதோ ஓர் உள்ளுணர்வினால் அமுக்கப்பட்டவர் மாதிரி அவர் முகம் வீங்கிப் போயிற்று.

'ரெஜினாவின் அறையில் கண்ட பிராணி ரெஜினா அல்ல!' என்று ஏதோவொன்று அவருக்குச் சொல்லிற்று.

தமது அறைக்குத் திரும்பினார். பிரார்த்தனை செய்தார். அவருடைய உள்ள உறுதி ஒவ்வொரு துண்டு துணுக்கும் ஆட்டம் கண்டு நடுங்குகிற மாதிரி இருந்தது.

அன்று அவர் காலையுணவு அருந்தவில்லை. ஜார்ஜ்டவுன் பல்கலைக் கழக மருத்துவக் கல்லூரியில் நிகழ்த்த வேண்டிய விரிவுரைக்கான குறிப்புகளைத் தயாரித்தார். ஏதோ பேருக்கு உரை நிகழ்த்தினார்.

அந்தக் குரல் அவர் செவியில் ஒலித்துக் கொண்டே யிருந்தது.

'நான் பேசறேன் அப்பா. நான்தான்...'

யார் அந்த 'நான்?'

வகுப்பைச் சுருக்கமாகக் கலைத்து விட்டுத் திரும்பினார் தமது அறைக்கு. மேஜைமீது கைகளை ஊன்றிக் கவிழ்ந்து உட்கார்ந்திருந்தார் வெகு நேரம். பேய் பிடித்திருப் போருக்காகச் செய்ய வேண்டிய நடவடிக்கைகளைப் பற்றி சர்ச்சின் கட்டளை என்னவென்று மீண்டுமொரு முறை படித்துப் பார்த்தார். சைத்தானைப் பற்றிச் சொல்லப் பட்டிருப்பவைகளை ஆராய்ந்தார்.

'இயற்கைக்கு மீறிய அறிகுறிகள் எத்தனைதான் தென்பட்டாலும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்... நோயாளியுடன் நடத்திய சம்பாஷணைகளையெல்லாம் கவனமாக ஆராய்ந்து பார்க்க வேண்டும்...'

கராஸ் பாதிரியாரைச் சோர்வு அழுத்தியது. ஆழமாக மூச்சுவிட்டார். புத்தகத்தில் ஒரு படம் அவர் கண்ணில் பட்டது. பேயின் படம். அதன் கீழே தரப்பட்டிருக்கும் தலைப்பைப் பார்த்தார். 'பிசாசு.' கண்களை மூடிக் கொண்டார். என்ன வந்து விட்டது எனக்கு? அமைதி, அமைதி.

பேயோட்டுகிறவருக்கு நேரக்கூடிய கோரமான சாவு அவர் நினைவில் எழுந்தது. உயிர் பிரியும் வேதனைகள்...

இரைக்க இரைக்க வாங்கும் சுவாசம்... சீறல்... வாந்தி... அவர் விரட்டியடித்த பேய்கள் அவரைப் படுக்கையிலிருந்து புரட்டிக் கீழே தள்ளுகின்றன... அவைகளுக்கு ஏகப்பட்ட ஆத்திரம்... இந்த ஆள் செத்துப்போய் விட்டால் பிறகு இவனை வாட்டி வதைக்க முடியாமல் போய்விடுமே என்று ஆங்காரம்.

ரெஜினாவைக் காப்பாற்ற வேறு வழியே கிடையாது என்பது தெளிவாய்த் தெரிந்தது அவருக்கு. பின்கை கட்டிய படி குறுக்கும் நெடுக்கும் நடந்தார். அந்த அத்தியாயம்... பில்லி சூனியம் பற்றிய புத்தகத்தில் அந்த அத்தியாயம்...

எடுத்துப் பார்த்தார் மறுபடி. அதிலே இருந்தது அவர் தேடிய விஷயம்.

புனிதச் சடங்குகளைக் கண்டால்... புனித நீரைத் தெளித்தால்... பேய்களுக்கு ஆத்திரம் வரும்.

நல்லது. சாதாரணக் குழாய்த் தண்ணீரை எடுத்துக் கொண்டு இப்போதே ரெஜினாவிடம் போகலாம். அவள் மேல் தெளிக்கலாம் - ஆனால் புனித நீர் என்று அவளிடம் சொல்லலாம். பேய்களுக்கு ஆத்திரம் வருகிற மாதிரி அவளுக்கும் ஆத்திரம் வருமானால், உண்மையில் அவளைப் பேய் பிடிக்கவில்லை என்று நிச்சயம் பண்ணிக் கொள்ளலாம். சும்மா அந்தப் புத்தகத்தைப் படித்ததால் அவளாகவே ஏற்படுத்திக் கொண்டிருக்கிற பிரமைகள் என்பது தெரிந்துவிடும்.

ஆனாலும்... அந்தச் சாதாக் குழாய் நீருக்கு அவளிடம் எவ்வித மாற்றமும் நிகழவில்லை என்றால்...

உண்மையாகவே பிடித்திருக்கிறது என்று கொள்ள வேண்டியிருக்கும்...

அவசர அவசரமாக, புனித நீர் வைத்திருக்கும் குப்பிக்காகத் தேடலானார் அவர்.

ரெஜினாவின் வீட்டை அடைந்தபோது வேலைக்காரி கதவைத் திறந்தாள். வாசல்படியில் நின்றவாறே ரெஜினாவின் படுக்கையறையை நோக்கினார். கூச்சல்கள். கெட்ட வார்த்தைகள். ஆனால் பேயின் ஆழமான கரகரப்பான குரல் அல்ல. வேகமாயும் சற்று மென்மையாயும் உள்ள குரல். கொஞ்சம் பிரிட்டிஷ் உச்சரிப்பு.

வேலைக்காரி, அவருடைய காலரையும் பாதிரியார் உடுப்புக்களையும் திகைப்புடன் நோக்கியவாறு நின்றிருந்தாள்.

''கிறிஸ்டி எங்கே?'' என்று கேட்டார் கராஸ் பாதிரியார்.

மாடியை நோக்கிச் சாடை காட்டினாள் அவள்.

மாடிப்படியில் ஏறினார் அவர். கிறிஸ்டியைக் கண்டார். ரெஜினாவின் படுக்கையறைக்குச் சமீபமாக, ஒரு நாற்காலியில் தலையைத் தாழ்த்திக் கொண்டு, மார்பின் குறுக்காகக் கைகளைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள் அவள். கராஸ் பாதிரியார் அவளை நெருங்கியபோது, அவருடைய ஆடைகளின் சரசரப்பைக் கேட்டு அவள் தலை நிமிர்ந்தாள். சட்டென்று எழுந்து கொண்டு, ''ஹலோ ஃபாதர்,'' என்றாள்.

அவள் கண்களின் கீழே கருவளையம் கட்டியிருந்தது. கராஸ் முகம் சுளித்தார். ''சரியாய்த் தூங்கவில்லையா?''

''தூங்க முடியவில்லை'' என்று பெருமூச்சு விட்டாள் அவள். ''வாருங்கள். கீழே போய்ப் பேசலாம்.''

''ஊகூம், நான் ரெஜினாவைப் பார்க்க விரும்புகிறேன்.''

''இப்போதேயா அவளைப் பார்க்க வேண்டும் என்கிறீர்கள்?''

என்னவோ கோளாறு என்று புரிந்தது பாதிரியாருக்கு. அவள் முகத்தில் கவலை படர்ந்திருக்கிறது. பயத்துடன் இருக்கிறாள். ''ஏன், இப்போது கூடாதா?'' என்று கேட்டார்.

அவள் எச்சரிக்கையுடன் ரெஜினாவின் படுக்கை யறையை நோக்கினாள். உள்ளேயிருந்து கரகரப்பான அந்தப் பேய்க் குரல் கேட்டது. ''விடு என்னை! நாஜிப் பயலே! விடுடா!''

கிறிஸ்டி வேறு புறம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அரை மனதாகத் தலையை அசைத்தாள். ''சரி, உள்ளே போய்ப் பாருங்கள்.''

''உங்களிடம் டேப் ரெகார்டர் இருக்கிறதா?''

அவள் கண்கள் அவர் கண்களைப் பரபரப்பாகச் சந்தித்தன. இமைகள் படபடத்தன.

''டேப் ரெகார்டருடன் ஒரு புதிய டேப்பும் தயவு பண்ணி எடுத்து வாருங்கள்.''

அவள் முகத்தில் சந்தேகம் படர்ந்தது. ''டேப்... டேப் ரெகார்டர்... எதற்கு?'' பின்னர் கலவரம்.

''பேச்சுப் பாணி, உச்சரிப்பு இதெல்லாம் நான் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.''

திடீரென்று கர்ண கடூரமான ஆபாசக் கூச்சல்கள் ரெஜினாவின் அறையிலிருந்து கேட்டன. அதைச் சகிக்க முடியாதவன் போல வேலைக்காரன் கார்ல் - ஜெர்மானியன் - வெகுவேகமாக வெளியே ஓடி வந்தான். அவன் முகம் வெளிறிப் போயிருந்தது. கையில் நனைந்த உள்ளாடைகளும் படுக்கை விரிப்புகளும் இருந்தன.

கராஸ் ரெஜினாவின் அறைக்குள் நுழைந்தார். நுழையுமுன் பையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டார். தண்ணீர்க் குப்பி பத்திரமாயிருந்தது.

# 21

புனித நீர் என்று தோன்றுகிற மாதிரி குழாய் நீரை அடக்கிய குப்பி பத்திரமாக இருக்கிறதா என்று பையை ஒருமுறை தொட்டுப் பார்த்துக் கொண்டு, கதவைத் திறந்து ரெஜினாவின் படுக்கையறைக்குள் நுழைந்தார் கராஸ் பாதிரியார்.

கிறிஸ்டிக்கு மகள்மீது இருக்கும் பாசத்தை நினைக்கையில் அவருக்கு மனம் நெகிழ்ந்தது. தாய்மீது அளவற்ற பாசம் வைத்திருந்தவர் அவர்.

சில மாதங்களுக்கு முன்தான் அவரது தாய் இறந்து போனாள். மூளையில் நீர் சுரந்ததால் புத்தி சுவாதீனம் இழந்துவிட்டாள். பண வசதி இல்லாததால் அவளை நல்ல ஆஸ்பத்திரியில் சேர்க்க முடியவில்லை. இரண்டு நாள் வரையிலும் அவள் இறந்து போனதே யாருக்கும் தெரியாது. ரேடியோ பாட்டுக்கு இடைவிடாமல் இரண்டு நாளாகப் பாடிக்கொண்டேயிருந்ததால் அக்கம் பக்கத்துக்காரர்கள் சந்தேகப்பட்டுக் கதவைத் திறந்து பார்த்தார்கள். கராஸ் பாதிரியாரின் அம்மா இறந்து போயிருப்பது தெரிந்தது.

அவளை அடக்கம் செய்த போது அவரால் துக்கத்தைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. கடைசிக் காலத்தில் அவள் எந்த டாக்டரையும் அருகில் நெருங்க விடவில்லையாம்.

தாயைப் பற்றிய நினைவு அவர் மனத்தில் சுமையாக இருந்தது.

முந்தின தடவை வந்திருந்த போது இருந்ததைக் காட்டிலும் இப்போது ரெஜினாவின் அறையில் இன்னும் மோசமாக நெடி அடித்தது. கதவை உட்புறம் சாத்திக் கொண்டார். வெறித்து நோக்கினார்.

அவர் ரெஜினாவின் படுக்கையை நெருங்கியபோது, கண்களில் கேலியுடன் 'அது' அவரைக் கவனித்துக் கொண்டிருந்தது. தந்திரம் நிரம்பிய கண்கள்; வெறுப்பு நிறைந்த சக்தி நிறைந்த கண்கள்.

''ஹலோ கராஸ்!'' என்றது அது. அசிங்கமான சத்தங்கள் ரெஜினாவின் காற்சட்டைக்குள்ளிருந்து வருவதைக் கேட்டார் பாதிரியார்.

படுக்கையின் கால்மாட்டில் நின்ற வண்ணம் அமைதியாக அவர் பேசினார். 'சைத்தானே! எப்படி இருக்கிறாய்?''

''இந்த நிமிஷம் உன்னைப் பார்த்ததில் ரொம்ப சந்தோஷம், மகிழ்ச்சி.'' ரெஜினாவின் நாக்கு வெளியே நீண்டு ஊஞ்சலாடியது. கண்கள் திமிருடன் பாதிரியாரை அளவெடுத்தன. ''ஜம்மென்று வந்திருக்கிறாயே!'' மீண்டும் ஓசை. ''கொஞ்சம் நாற்றமாயிருக்கிறதே, உனக்குக் கஷ்டமாயில்லை, கராஸ்?''

''ஊகூம். இல்லை.''

''பொய் சொல்கிறாய்.''

''நான் பொய்யனாயிருந்தால் உனக்கென்ன? சைத்தான்களுக்குப் பொய்யர்களைப் பிடிக்குமே?''

''பொய்யர்களிலும் நல்லவர்களை மட்டும்தான் பிடிக்கும்,'' என்று சூள் கொட்டியது அது. ''அதிருக்கட்டும். நான் சைத்தான் என்று யார் சொன்னது?''

''நீதானே சொன்னாய்?''

''ஓகோ... சொன்னேனோ என்னவோ... அதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்... ரொம்பக் கஷ்டப்படுகிற ஏழை சைத்தான் நான். அவ்வளவுதான். எங்கள் தந்தை நரகத்தில் இருக்கிறார். நீ அவரைப் பார்க்கிறபோது என் துடுக்கான பேச்சைப் பற்றி அவரிடம் சொல்லி விடாதே கராஸ்.''

''அவர் இங்கே இருக்கிறாரா?'' என்றார் பாதிரியார்.

''இங்கேயா? சே, சே! வீடு வாசல் இல்லாத சில அப்பாவி பேர்வழிகள்தான் இங்கே இருக்கிறோம். எங்களை நீ குற்றம் சொல்ல முடியாது. நாங்கள் எங்கே போக முடியும்? எங்களுக்கு வீடு கிடையாதே? அதனால்தான் இங்கே இருக்கிறோம்.''

''எத்தனை நாள் இங்கே இருப்பதாக உத்தேசம்?''

தலையணையிலிருந்து அதன் தலை வெடுக்கென்று உயர்ந்தது. ஆங்காரத்தினால் எட்டுக் கோணலாகிவிட்ட முகத்துடன் உறுமிற்று. ''இந்தப் பன்றிலாயம் சாகிற வரை!'' பின்னர் மீண்டும் திடீரென்று அதன் முகபாவம் மாறியது. உதடுகள் கோணிக் கொண்டு ஒரு புன்சிரிப்பை வெளியிட்டன. ''அதிருக்கட்டும் கராஸ். பேயோட்டுவதற்கு இன்று ரொம்ப அருமையான நாள்! இல்லை?''

புத்தகம். நிச்சயமாய் அந்தப் புத்தகத்தில்தான் இதை இவள் படித்திருக்க வேண்டும்.

அவரைக் கிழிக்கிற மாதிரி அந்தக் கண்கள் நோக்கின. ''சீக்கிரமே ஆரம்பியேன். உடனே! சீக்கிரம்!''

ரெஜினாவின் பேச்சில் ஏதோவென்று பொருத்த மில்லாதிருக்கிறது... என்னவோ ஒரு மாறுதல்...

''பேயோட்டுவதென்றால் உனக்குப் பிடிக்குமா என்ன?'' என்றார்.

''ரொம்ப.''

''ரெஜினாவை விட்டு உன்னை விரட்டும்படி நேரிடுமே?''

அது தலையணையில் நன்றாகச் சாய்ந்துகொண்டு வெறி பிடித்த மாதிரி கடகடவென்று சிரித்தது. ''பேயோட்டும் சடங்கை நீ செய்தால் அது நம்மை ஒன்று சேர்க்கும்! அதாவது நீ எங்களிடம் வந்துவிடுவாய்!''

கராஸ் பாதிரியார் வெறித்துப் பார்த்தபடியே இருந்தார். பிடரியில் யாரோ கையை வைக்கிற மாதிரி இருந்தது. பனிச் சில்லிப்பான கைகள். மெல்லத் தொடுகின்றன. பிறகு போய் விடுகின்றன. 'சே, வெறும் பயம்' என்று அவர் தனக்குத் தானே சொல்லிக் கொண்டார்.

எதைப் பற்றிப் பயம்?

திடுப்பென ஒரு கதவு திறக்கிற மாதிரி சத்தம் கேட்டது. சரேலென்று தலையைத் திருப்பிப் பார்த்தார் பாதிரியார். ஒரு அலமாரியின் செருகு அறை தானாகவே திறந்து முழு நீளத்துக்கு வெளியே வந்தது. படக்கென்ற ஓசையுடன் திரும்ப உள்ளுக்கு இழுத்துக் கொண்டது. பாதிரியாருக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. மறுகணமே, விஞ்ஞான ரீதியான ஒரு சமாதானத்தைக் கற்பித்துக் கொண்டார். சூள் கொட்டியவாறு ரெஜினாவை நோக்கினார்.

''நீ தானே அதைச் செய்தாய் - அலமாரி டிராயர் திறந்து மூடும்படி செய்தது நீதானே?''

அவளுக்கு அது கேட்கவில்லை. வாசற் கதவை ஓரக் கண்ணால் பார்த்தபடி ஏதோவொரு சத்தத்தைக் கூர்ந்து

செவிமடுத்தபடி இருந்தது. அறையை நோக்கி யாரோ வருகிற மாதிரி காலடியோசை கேட்கவே, ரெஜினாவின் முகபாவம் குரூரமாயிற்று. ''அயோக்கிய ராஸ்கல்!'' என்று பிரிட்டிஷ் உச்சரிப்பில் கரகரத்த தொண்டையில் கூச்சலிட்டது. கடகடவென்று கெட்ட வார்த்தைகள் ஒலித்தன.

ஜெர்மன் வேலைக்காரனான கார்ல், பாதிரியார் கேட்டிருந்த டேப்ரெகார்டரை எடுத்துக் கொண்டு உள்ளே வந்தான். படுக்கையினருகே அதை வைத்தான். ரெஜினாவின் பார்வையைச் சந்திக்காமல் வேறு புறம் திரும்பியபடியே வெளியேறினான்.

''போடா நாஜி! என் பார்வையில் படாமல் ஒழிந்து போ!'' என்று ரெஜினா கத்திக் கொண்டிருக்கையில் கார்ல் போய் விட்டான்.

ரெஜினாவுக்குள்ளிருந்த அது மறுபடியும் சாந்தமடைந்தது. கராஸ் பாதிரியார் டேப் ரெகார்டரைத் திறந்து வைத்தார்; டேப்பைப் பொருத்தினார். பிளக்கைச் செருகினார்.

''அட! அட! அட! என்ன இதெல்லாம்?'' என்று மகிழ்ச்சியுடன் கூவியது அது. ''எதையாவது டேப்பில் பதிவு பண்ணப் போகிறோமா, பாதிரியாரே? ஜோர் ஜோர்! எனக்குப் பாட்டு, பேச்சு என்றால் ரொம்பப் பிடிக்கும்!''

பாதிரியார் டேப் ரெகார்டரில் பதிவு பண்ணத் தொடங்கியபடி பேசினார்: ''என் பெயர் டேமியன் கராஸ். நீ யார்?''

''ஓ! என்னைப் பற்றி அத்தாட்சிப் பத்திரம் கேட்கிறாயா! ரொம்பத் துணிச்சல்தான் உனக்கு!'' அது சிரித்தது. சுற்றும் முற்றும் பார்த்தது. ''குடிப்பதற்கு எதுவும் இல்லையா இங்கே? நாக்கு உலர்ந்து போகிறது எனக்கு.''

மைக்ரபோனை மெல்ல மேஜைமீது வைத்தார் அவர். ''நீ உன் பேரைச் சொன்னாயானால், குடிப்பதற்கு ஏதாவது இருக்கிறதா என்று பார்க்கிறேன்.''

அது தமாஷாகச் சிரித்தது. ''இருந்தால் நீயே குடித்து விட்டு என்னை ஏமாற்றி விடுவாய்.''

''உன் பெயரைச் சொல்லு.''

அது ஏதோ கெட்ட வார்த்தை சொல்லிச் சீறியது. உடனே குரல் மாறிற்று. பேயின் குரல் ஒலித்தது. ''நாம் இப்போ என்ன பண்ணப் போகிறோம், கராஸ்? நம்முடைய சிறு விவாதத்தைப் பதிவு செய்து கொள்ளப் போகிறோமா?''

கராஸ் பாதிரியார் தனது நாற்காலியை ரெஜினாவுக்குப் பக்கமாக இழுத்துப் போட்டுக் கொண்டார். மறு வினாடி குபுக்கென்று ஒரு நாற்றம் அதனிடமிருந்து வந்தது. வந்த வேகத்திலேயே மறைந்து விட்டது.

'இதெல்லாம் என் பிரமையோ ஒரு வேளை?' என்று அவர் எண்ணிக் கொண்டார். 'புனித நீர்' குப்பியை இப்போது வெளியே எடுக்கலாமா என்று யோசித்தார். இன்னும் கொஞ்சம் பொறுமையாக இருந்து பார்க்கலாம் எனத் தீர்மானித்து, ரெஜினாவை மேற்கொண்டு கேள்வி கேட்கலானார்.

## 22

**பு**னித நீர்க் குப்பியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டார் கராஸ் பாதிரியார். அதை ரெஜினாமீது தெளித்துப் பார்க்கலாமா என்று யோசனை செய்தார். ஆனால் அவளுடைய குரலை மேலும் பரீட்சை செய்ய வேண்டு

மென்று தீர்மானித்தார். ''என்னுடன் பேசிக் கொண்டிருப்பது யார்?'' என்று கேட்டார்.

''எங்கள் குடும்பத்தில் ஒருத்தர் தான், கராஸ்.''

''சைத்தானா?''

''சைத்தான் என்று சொல்லாதே. சைத்தான் என்றால் அறிவாளி என்று அர்த்தம்.''

''எந்த மொழியில்?''

''கிரேக்க மொழியில்.''

''நீ கிரேக்க மொழியில் பேசுவாயா?''

''ரொம்பச் சரளமாய்.''

பேய் பிடித்திருக்கிறது என்பதற்கான அறிகுறிகளில் ஒன்று! கராஸ் பாதிரியாருக்குப் படபடப்பு ஏற்பட்டது. தெரியாத மொழியைப் பேசுவது பேய் பிடித்திருப்பதற்கு ஓர் அடையாளம்.

கிரேக்க மொழியில் இலக்கண நடையில் ஒரு கேள்வி கேட்டார்.

''எனக்குப் பதில் சொல்லப் பிடிக்கவில்லை, கராஸ்.''

''தெரியவில்லை என்கிறாயா?''

''பதில் சொல்லப் பிடிக்கவில்லை என்றேனே!''

ஏமாற்றத்துடன் கராஸ் சற்றுச் சிந்தனையில் ஆழ்ந்தார். பிறகு, ''அலமாரி டிராயர் தானாகவே வெளியே நீட்டிக் கொள்ளும்படி நீதானே பண்ணினாய்?'' என்றார்.

''அதிலென்ன சந்தேகம்?''

''ரொம்பப் பிரமிப்பாயிருந்தது,'' என்று பாராட்டினார். ''நீ நிச்சயமாய் ரொம்பச் சக்தி வாய்ந்த பேய்தான்.''

''ஆமாம்.''

''மறுபடியும் அதைச் செய்து காட்டேன், பார்க்கிறேன்.''

''ஆகட்டும், சமயம் வரும் போது செய்கிறேன்.''

''இப்போது செய்யேன். ப்ளீஸ் - எனக்குப் பார்க்க ஆசையாயிருக்கிறது.''

''சமயம் வரட்டும்.''

''ஏன் இப்போது கூடாது?''

''இப்படியா அப்படியா என்று நீ சந்தேகப்பட்டுக்கொண்டே இருக்க வேண்டாமா!'' அந்தக் கரகரத்த குரலில் நச்சுச் சிரிப்பு இருந்தது. ''அதுதானே எனக்குக் குஷி!''

சிலீரென்ற கரங்கள் தன் பிடரியைத் தடவுவதுபோல் உணர்ந்தார் பாதிரியார். வெறித்துப் பார்த்தார். ஏன் இந்த அச்சம்? பிடரியைத் தொடுகிற மாதிரி அச்சம்...

அது, இளித்துக் கொண்டிருந்தது. ''நான்தான் தொட்டேன்.''

பாதிரியாருக்கு புதிய பிரமிப்பு ஏற்பட்டது. மிடறு விழுங்கிக் கொண்டார். என் மனசில் இருப்பதை ஊகித்து இப்படிப் பேசுகிறதா? அல்லது நிஜமாகவே என் பிடரியில் கையை வைத்ததா? கண்டுபிடிக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டார். ''இந்த வினாடி நான் மனசில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறேன் என்று உன்னால் சொல்ல முடியுமா?'' என்றார்.

''உப்புச் சப்பில்லாத எண்ணங்கள்தான் உன் மனசில் இருக்கிறது.''

''என் மனசிலிருப்பதை உன்னால் கண்டுபிடிக்க முடியவில்லை!''

''வைத்துக் கொள்ளேன். உன் இஷ்டம்போல் வைத்துக்கொள்.''

அந்தப் புனித நீர் குப்பியை வெளியே எடுக்கலாமா என்று யோசித்தார். டேப் ரெகார்டர் விர்விர்ரென்று ஓடிக் கொண்டிருந்தது.

''உன் பின்னணியைப் பற்றி இன்னும் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். உதாரணமாய், நீ யாரென்று சொல்லவே யில்லையே?''

''ஒரு பேய்,'' என்று முணுமுணுத்தது அது.

''அது தெரிகிறது. ஆனால் என்ன பேய்? உன் பெயர் என்ன?''

''என்ன கராஸ் நீ! பெயரில் என்ன இருக்கிறது? பரவாயில்லை. ஹௌடி என்று என்னைக் கூப்பிடேன் - உச்சரிப்பதற்கு உனக்கு வசதியாயிருக்கிறதென்றால்.''

''ஓ, காப்டன் ஹௌடியா?'' என்றார் பாதிரியார். ''ரெஜினாவின் சினேகிதர். இல்லை?''

''ரொம்ப நெருங்கிய சினேகிதர்.''

''உண்மையாகவா?''

''உண்மையாகத்தான்.''

''பின்னே ஏன் ரெஜினாவைச் சித்திரவதை செய்கிறாய்?''

''நான் அவள் சினேகிதன். அவளுக்கு என்னைப் பிடித்திருக்கிறது.''

''எதனால்?''

''அவளையே கேள்.''

''அவள் பதில் சொல்வதற்கு நீ அனுமதிப்பாயா?''

''மாட்டேன்.''

''அப்புறம் அவளை நான் கேட்பதில் என்ன அர்த்தம்?''

''ஒரு அர்த்தமுமில்லை.'' அதன் முகம் துவேஷத்தால் பளபளத்தது.

''நடுநடுவே இன்னொரு குரல் கேட்கிறதே, அது யார்?''

''இங்கே எங்கள் உலகத்திலே இருக்கிற இன்னொரு நல்ல சினேகிதன். இனிமையானவன்.''

''அவனிடம் நான் பேசலாமா?''

''ஊகூம். இப்ப அவன் உன் அம்மாவிடம் போய்ப் படுத்துக்கொண்டிருக்கிறான்!''

அது அவரைப் பார்த்து ஏளனமாக நகைத்தது. ஓர் ஆங்காரமான சீற்றம் தன் காலோடு தலை பரவுவதைக் கராஸ் பாதிரியார் உணர்ந்தார். வெறுப்பு அவர் உடம்பை நடுங்க வைத்தது. 'கராஸ்! உனக்கு என்ன வந்து விட்டது!' என்று தன்னைத் தானே அடக்கிக் கொண்டார். நாற்காலியின் முனைகளை இறுக்கிப் பிடித்துத் தன்னை அமைதிப்படுத்திக் கொண்டார். ஆழமாக மூச்சு விட்டார். பின்னர் எழுந்து நின்று, சட்டைப் பாக்கெட்டுக்குள்ளிருந்து அந்தக் குப்பியை - வெறும் குழாய் நீர் அடங்கிய குப்பியை - வெளியே எடுத்தார்.

அது சந்தேகத்துடன் பார்த்தது. ''என்ன அது?''

''உனக்குத் தெரியவில்லையா?'' என்று கேட்டபடி கராஸ் பாதிரியார் குப்பியின் வாயைத் திறந்து, கட்டை விரலால் பாதி அழுத்திக் கொண்டு ரெஜினாவின் மீது தெளிக்கலானார். ''இது புனித நீர், பேயே! புனித நீர்!''

மறு வினாடியே அது துள்ளியது. சுருண்டது. நெளிந்தது. பீதியும் வேதனையும் பிடித்தாட்டக் கூச்சலிட்டது.

''எரிகிறது! ஐயோ, எரிகிறது! நிறுத்து! நிறுத்துடா அயோக்கியப் பாதிரி!''

# 23

ரெஜினா அலறித் துள்ளத் தொடங்கியதும் குப்பி நீரைத் தெளிப்பதை நிறுத்திக் கொண்டார் கராஸ் பாதிரியார். அவர் முகம் உணர்ச்சியற்றிருந்தது. இது ஹிஸ்டீரியாதான் என்று எண்ணிக் கொண்டார். தனக்குத் தானே கற்பனை செய்து கொள்கிறாள் இவள். அந்தப் பில்லி சூனியப் புத்தகத்தைப் படித்ததால் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் பிரமை.

டேப் ரெகார்டரை ஏறிட்டு நோக்கினார். ரெஜினாவின் குரல்களைப் பதிவு செய்துகொண்டதுகூட அனாவசியமோ என்று தோன்றியது.

அறையில் நிசப்தம் நிலவியது. ரெஜினாவைப் பார்த்தார். அவர் புருவங்கள் சுருங்கின. என்ன இது - அவளுக்குள் என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது? பேய்த் தோற்றம் மறைந்திருந்தது. இப்போது முகத்தில் வேறு மாறுதல்கள் தோன்றினாற் போலிருந்தது. விழிகள் உருண்டு மேலே செருகிக்கொண்டிருந்தன. வெள்ளை விழி மட்டுமே தெரிந்தது. மெதுவாக முணுமுணுப்பு. பிறகு ஜன்னி பிடித்த மாதிரி உளறல்கள். கராஸ் பாதிரியார் படுக்கைக்குப் பக்கமாக வந்தார். குனிந்து காது கொடுத்துக் கேட்டார். என்ன அது? எதுவுமில்லை. இருந்தாலும் ஏதோ சில சொற்கள் - அன்னியமான மொழியைப் போல. அப்படியும் இருக்குமா? அவருக்கு வயிற்றுக்குள் என்னவோ படபடவென்று இறக்கையை அடித்துக் கொள்கிற மாதிரி இருந்தது. அந்தப்

படபடப்பை நிறுத்திக் கொண்டார். சே.சே, முட்டாள்தனமாக நாம் கற்பனை செய்து கொள்ளக் கூடாது என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டார்.

டேப் ரெகார்டரில் ஒலியைப் பெரிதுபடுத்தும் குமிழைத் திருகிவிட்டு ரெஜினாவின் உதட்டருகே காதை வைத்து உற்றுக் கேட்டார். ஆழமாயும் விட்டு விட்டும் சுவாசம் மட்டும் கேட்டது.

கராஸ் பாதிரியார் நிமிர்ந்தார்: ''நீ யார்?'' என்று கேட்டார்.

''நோவான்மை'' என்றது அது. முனகலான கிசுகிசுப்பு. ஏதோ வலியில் இருப்பதுபோல கண்ணில் வெள்ளைப் பரப்பு இன்னும் பெரிதாகத் தெரிந்தது. இமைகள் படபடத்தன. ''நோவான்மை,'' என்றது மறுபடி. எப்படி அந்தக் குரலின் சொந்தக்காரன் காலத்துக்கு அப்பால் திரை போட்ட இருண்ட பகுதியில் இருக்கிறானோ அது போலவே அந்தக் குரலும் உடைந்துபோனதாக, மூச்சு இரைப்பதாக வெளிப்பட்டது.

''அதுதான் உன் பெயரா?'' பாதிரியார் கோபமாகக் கேட்டார்.

உதடுகள் அசைந்தன. ஜன்னி பிடித்த ஒற்றைச் சொற்கள். மெதுவானவை. புரிந்து கொள்ள முடியாதவை. பின்னர் அதுவும் நின்று விட்டது.

''நான் பேசுவதை உன்னால் புரிந்து கொள்ள முடிகிறதா?'' என்றார்.

மௌனம். மூச்சு விடுவது மட்டுமே கேட்டது. ஆழமாக அமுக்கப்பட்ட மாதிரி விசித்திரமாக.

பாதிரியார் காத்திருந்தார். மேற்கொண்டு ஏதோ வருமென்று எதிர்பார்த்தார்.

எதுவும் வரவில்லை.

டேப்பைத் திருப்பிச் சுற்றினார். டேப் ரெகார்டரை அதன் உறைக்குள் வைத்து மூடிக் கையில் எடுத்துக் கொண்டார். டேப் சுருளையும் பையில் போட்டுக் கொண்ட பின் ரெஜினாவைக் கடைசியாக ஒரு முறை பார்த்தார். பல விஷயங்கள் அவருக்குப் புரியவில்லை. எதையும் தீர்மானிக்க இயலாதவராக அறையை விட்டு வெளியேறிக் கீழே வந்தார்.

கிறிஸ்டி சமையலறையில் இருந்தாள். காரியதரிசி ஷெரானுடன் மேஜையடியில் காப்பியுடன் சிந்தனையில் ஆழ்ந்தவளாக உட்கார்ந்திருந்தாள். என்ன ஆயிற்று என்று கேட்பது போல அவரை ஏறிட்டுப் பார்த்தார்கள். கவலை யுடன் கூடிய ஒரு எதிர்பார்ப்பு அவர்கள் பார்வையிலிருந்தது. கிறிஸ்டி அமைதியாக ஷெரானிடம், ''நீ போய் ரெஜினா எப்படி இருக்கிறாள் என்று பார், என்ன?'' என்றாள்.

ஷெரான் மிச்சக் காப்பியை உறிஞ்சிவிட்டு, பாதிரியாரை அலுப்புடன் பார்த்துவிட்டு வெளியே சென்றாள்.

கராஸ் பாதிரியார் களைப்பாக மேஜையருகே உட்கார்ந்தார்.

அவருடைய கண்களைத் துருவியது அவள் பார்வை. ''என்ன ஆச்சு?'' என்றாள்.

கராஸ் பதில் சொல்ல வாயெடுத்தார். அதற்குள் வேலைக்காரன் கார்ல் உள்ளே நுழைந்தான். சமையலறைக் குழாயில் தட்டுக்களைக் கழுவத் தொடங்கினான்.

பாதிரியாரின் பார்வை அவன்மீது நிலைப்பதைக் கண்டாள் கிறிஸ்டி. ''பரவாயில்லை. அவன் பாட்டுக்கு இருக்கட்டும்,'' என்றாள் மெதுவான குரலில். ''நீங்கள் சொல்லுங்கள். என்ன நடந்தது?''

''இரண்டு ஆட்கள் ரெஜினாவுக்குள் இருக்கிறார்கள். அவர்களை நான் இதுவரையில் அறிந்ததில்லை... ஊகூம். வந்து, ஒருவரை மட்டும் கொஞ்சம் தெரிகிறது. பிரிட்டிஷ் உச்சரிப்புடன் பேசுகிறார் அந்த ஆள். உனக்குத் தெரிந்து அப்படி யாரேனும் ஒருவர் உண்டா?''

அவள் குனிந்து தலையை அசைத்தாள். ''ஆமாம். எனக்குத் தெரிந்த ஒருவர் உண்டு.''

''யார்?''

அவள் நிமிர்ந்தாள். ''பர்க் டெனிங்ஸ்.''

''டைரக்டர்?''

''ஆமாம்.''

''அவர்தானே சமீபத்தில் -''

''ஆமாம்,'' என்று அவள் அவர் பேச்சை வெட்டினாள்.

அவர் முழங்கைகளை மேஜைமீது ஊன்றி அவளை நோக்கிக் குனிந்தார். ''ரெஜினாவுக்கு அவருடன் பழக்க முண்டா?''

''உண்டு.''

''வந்து-''

சிலீரென்று ஒரு சத்தம். தூக்கி வாரிப் போட்டவளாகக் கிறிஸ்டி விருட்டெனத் திரும்பி நோக்கினாள். வேலைக்காரன் கார்ல்தான் ஒரு வாணலித் தட்டைக் கீழே போட்டிருந்தான். குனிந்து அதைத் திரும்பியெடுத்தவன், மறுபடியும் நழுவ விட்டான்.

''கார்ல்! என்ன வந்தது உனக்கு?'' என்றாள் கிறிஸ்டி.

''ஸாரி மேடம்.''

''கொஞ்ச நேரம் வெளியே போய் வா, கார்ல்! இந்த இடத்தை விட்டுப் போ. சினிமா கினிமா எங்காவது

போய்விட்டு வா. எல்லாரும் இந்த வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடக்கணுமா? போய் விட்டு வா!'' கராஸ் பக்கம் திரும்பியவள் ஒரு சிகரெட்டை எடுத்துக் கொண்டு பாக்கெட்டைப் பட்டென்று மேஜைமீது எறிந்தாள்.

கார்ல் அவள் சொன்னபடி செய்யாமல், ''வந்து... நான்...'' என்றான்.

''கார்ல்! நீ இப்போ போகப் போகிறாயா இல்லையா?'' என்று எரிச்சலுடன் கத்தினாள் கிறிஸ்டி. ''போ சொல்கிறேன்! இந்த வீட்டை விட்டு கொஞ்ச நேரமாவது போய்த் தொலை. நாம் எல்லாருமே வெளியே போக வேண்டியதுதான். இப்ப நீ போ!''

வேலைக்காரி வில்லி இப்போது உள்ளே வந்தவள், ''போ என்றால் போயேன்!'' என்று சொல்லிக் கார்லின் கையிலிருந்து வாணலியைப் பறித்துக் கொண்டாள். அவனை வெளியே மெல்லத் தள்ளினாள்.

''ஸாரி ஃபாதர்,'' என்று முணுமுணுப்பான குரலில் மன்னிப்பு கேட்டுக் கொண்டாள் கிறிஸ்டி.

நெருப்புப் பெட்டியைத் திறந்து ஒரு குச்சியை வெளியெடுத்த வண்ணம் அவர் சொன்னார்: ''நீங்கள் சொன்னது சரிதான்.'' குச்சியைக் கிழித்து அவள் சிகரெட்டைப் பற்ற வைத்தவர், ''நீங்கள் எல்லாருமே இந்த வீட்டை விட்டு வெளியேறுவதைப் பற்றி யோசிக்க வேண்டும்... நீங்கள் கூடத்தான்,'' என்றார்.

# 24

வேலைக்காரன் கார்ல் வெளியேறியதும் கிறிஸ்டி பாதிரியாரைக் கேட்டாள்: ''ரெஜினாவுக்குள்ளே டைரக்டர் பர்க் டென்னிங்ஸ் இருக்கிற மாதிரி தோன்றுகிறது என்கிறீர்களே, அவர் என்ன பேசினார்?''

''என்னவோ கெட்ட வார்த்தைகள்,'' என்றார் கராஸ் பாதிரியார். ''அதிருக்கட்டும். உங்கள் வேலைக்காரன் கார்லுக்கு ஒரு பெண் இருக்கிறாளா?''

''பெண்ணா? இல்லையே, எனக்குத் தெரிந்து இல்லை.''

''நிச்சயமாய்த் தெரியுமா?''

வேலைக்காரி வில்லி சமையலறைக் குழாயில் பாத்திரங்களைக் கழுவிக் கொண்டிருந்தாள். கிறிஸ்டி அவள் பக்கம் திரும்பி, ''ஏன் வில்லி, உங்களுக்கு ஒரு பெண் இருக்கிறாளா என்ன?'' என்று கேட்டாள். (வில்லி கார்லின் மனைவி).

''இருந்தாள். ரொம்ப ரொம்பக் காலத்துக்கு முன் இறந்து விட்டாள்,'' என்றாள் அவள்.

''அடப் பாவமே.''

கிறிஸ்டி கராஸ் பாதிரியாரைப் பார்த்து ரகசியமாகச் சொன்னாள்: ''பெண் இருந்தாளென்று இவள் சொல்வது இதுதான் முதல் தடவை. நீங்கள் எதற்குக் கேட்டீர்கள்? எப்படித் தெரியும் உங்களுக்கு?''

''ரெஜினா சொன்னாள். கார்ல் அவள் அறைக்குள் வந்தபோது கன்னாபின்னாவென்று அவனைத் திட்டி, 'உன்

மகளைப் பார்க்கப் போய்த் தொலை' என்று சொன்னாள். அதனால் கேட்டேன். பிறர் மனசில் உள்ளதை அறியக்கூடிய சக்தி அவளிடம் இருப்பதாகத் தோன்றியதுண்டா - அதாவது இதற்கு முன்பு?''

கிறிஸ்டி யோசித்துப் பார்த்தாள். ''ஊகூம். நிச்சயமாய்த் தெரியவில்லை. என் மனசில் என்ன நினைத்திருக்கிறேனோ அதையே அவளும் சொல்கிற மாதிரி பல சமயங்களில் நேர்ந்ததுண்டு. ஆனால் ஒருவருக்கொருவர் நெருக்க மாயிருக்கும்போது அப்படித் தோன்றுவதில் அதிசய மில்லையே?'' என்றாள் கிறிஸ்டி.

''ஆஸ்பத்திரி ரெகார்டுகளைப் பார்க்க வேண்டும் என்று சொன்னேனே, ஏற்பாடு செய்திருக்கிறீர்களா?''

''ஓ, இன்று சாயங்காலம் விமானத்தில் வந்து சேருகின்றன. லேசிலே கொடுக்கமாட்டேனென்றார்கள் ஆஸ்பத்திரியில்,'' என்றாள் கிறிஸ்டி. ''ஏன் ஃபாதர், பேயோட்டுவது பற்றி என்ன முடிவு செய்தீர்கள்?''

அவர் தலையைக் குனிந்து கொண்டு பெருமூச்சு விட்டார். ''ஊகூம்... அதற்கு பிஷப்பைச் சம்மதிக்க வைக்க முடியுமா என்பது சந்தேகமாயிருக்கிறது.''

''சந்தேகமா? ஏன்?''

அவர் தன் கோட்டுப் பைக்குள்ளிருந்து அந்தக் குப்பியை எடுத்துக் காட்டினார். ''என்ன, தெரிகிறதா?''

''என்ன?''

''இதைப் புனித நீர் என்று சொல்லி ரெஜினாவின் மீது தெளித்தேன். அவள் கூச்சலிட்டுத் துள்ளித் திமிறி ரகளை பண்ணிவிட்டாள்.''

''அதனால் என்ன?''

''இது புனித நீர் அல்ல. சாதாரணக் குழாய்த் தண்ணீர்.''

''சில பேய்களுக்கு அந்த வித்தியாசம் தெரியாதோ என்னவோ?''

''அவளுக்குள் ஒரு பேய் இருக்கிறதென்று நீங்கள் உண்மையிலேயே நம்புகிறீர்களா?'' கராஸ் பாதிரியார் கேட்டார்.

''ரெஜினாவுக்குள் ஏதோவொன்று இருந்து கொண்டு அவளைக் கொல்வதற்கு முயலுகிறது என்று நினைக்கிறேன். ஃபாதர் அதற்குப் புனித நீராயிருந்தால் என்ன, சாக்கடைத் தண்ணீராயிருந்தாலென்ன?'' சிகரெட்டை அழுத்தி அணைத்தாள் கிறிஸ்டி. ''அது சரி ஃபாதர், குழாய்த் தண்ணீருக்கும் புனித நீருக்கும் என்ன வித்தியாசம்?''

''புனித நீர் என்பது ஆசீர்வதிக்கப்பட்டது.''

அவர் சிகரெட் பாக்கெட்டைக் கையில் உருட்டிய வண்ணம் பேசினார். ''அது பேய்தான் என்று ஒப்புக் கொள்ளக்கூடிய அறிகுறி ஒன்று இருக்கிறது! - முன்பின் தெரிந்திராத அன்னிய மொழியில் பேசுவது. அதற்காகத்தான் டேப் பதிவுகள் உதவி செய்யுமென்று நம்பிக் கொண்டிருக்கிறேன்.''

''அவள் உடம்பின்மீது சில எழுத்துத் தோன்றியதே; அதற்கு என்ன அர்த்தம்?'' என்றாள் கிறிஸ்டி.

''என்ன எழுத்து?''

அவள் தன் மார்பின் மீது விரலால் எழுதிக் காட்டினாள்: ''அவள் மார்புமீது இரண்டொரு தடவை 'எம்' எழுத்து காணப்பட்டதாம். ஒரு தடவை எல் எழுத்துத் தெரிந்ததாம்.''

''யார் சொன்னார்கள்? நீங்கள் பார்த்தீர்களா?''

''இல்லை. ஆஸ்பத்திரியில் டாக்டர்கள் பார்த்தார் களாம். அவர்களுடைய ரிப்போர்ட்டில் அதையும் எழுதி யிருக்கிறார்கள்.''

அவர் எழுந்து கொண்டார். ''ஆஸ்பத்திரி ரெகார்டுகள் வரட்டும்; அவைகளையும் பரிசோதித்து விட்டுச் சொல்கிறேன்.''

கிறிஸ்டி தலையசைத்தாள்.

அவர் தொடர்ந்தார்: ''டேப்பில் பதிவாகியிருப்பதை மொழிகள் ஆராய்ச்சிக் கழகத்தில் எடுத்துப் போய்க் காட்டிக் கேட்கிறேன். அர்த்தமில்லாத உளறல் என்று நான் நினைத் திருப்பது உண்மையில் ஏதாவது அன்னிய மொழியாக இருக்கக்கூடும். அப்படியில்லையென்றால் அவளுக்குப் பேய் பிடிக்கவில்லை என்பது நிச்சயம் செய்து கொள்ளலாம்.''

''அதற்கப்புறம்?''

பாதிரியார் அவள் கண்களை நோக்கினார். அதில் சஞ்சலம் நிரம்பியிருந்தது. பெண்ணுக்குப் பேய் பிடிக்க வில்லை என்றால்கூட அவள் கவலைப்படுவாள் போலிருக் கிறதே என்று எண்ணிக் கொண்டார். பர்க் டென்னிங்ஸ் மரணம் பற்றி ஞாபகம் வந்தது.

''உங்கள் காரைக் கொஞ்ச நேரம் இரவல் தர முடியுமா?'' என்று கேட்டார்.

''வியாழனன்று திருப்பிக் கொண்டு வந்து கொடுங்கள். அன்று எனக்குத் தேவைப்படலாம். இருங்கள், சாவி எடுத்து வருகிறேன்.''

கராஸ் பாதிரியார் உள்ளத்தில் ஒரு வலியுடன் அவளுடைய குனிந்த தீனமான முகத்தை நோக்கினார். அவள் கையைப் பற்றி, ''எல்லாம் சரியாகிவிடும் அம்மா, கவலைப்

படாதே,'' என்று சொல்ல வேண்டும் போல அவருக்குள் ஏக்கமாயிருந்தது. ஆனால் எப்படிச் சொல்ல முடியும்?

அவர் தன் ஜாகைக்குச் சென்று டேப் ரெகார்டரை வைத்துவிட்டு டேப்புகளை மட்டும் எடுத்துக்கொண்டு கிறிஸ்டியின் காருக்கு வந்தார். காரை ஸ்டார்ட் பண்ணிய சமயம், ''ஒரு நிமிஷம் ஃபாதர்...?'' என்று ஒரு குரல் கூப்பிட்டது.

திரும்பிப் பார்த்தார். வேலைக்காரன் கார்ல்தான். ''ஃபாதர், நானும் கொஞ்சம் வெளியே போக வேண்டியிருக்கிறது. வரலாமா?'' என்றான்.

''தாராளமாய்'' என்று அவனுக்கு இடம் கொடுத்தார். ''எதுவரை போக வேண்டும்?''

''பஸ் ஸ்டாப்பில் இறங்கிக் கொள்கிறேன்,'' என்றான் கார்ல். ''சினிமாவுக்குப் போகிறேன்.''

பாதிரியார் தன் சிந்தனையில் ஆழ்ந்தவராக மௌன்மாகவே காரைச் செலுத்தினார். பிறகு, ''ஏன் கார்ல், உனக்கு பர்க் டெனிங்ஸைத் தெரியுமா?'' என்றார்.

அவன் சற்று விறைப்பாகத் தலையை அசைத்து, ''ஆமாம், தெரியும்,'' என்றான்.

''ரெஜினா... வந்து... அவள் டென்னிங்ஸ் மாதிரி சில சமயங்களில் பேசுகிறாளே, அது நிஜமாகவே டென்னிங்ஸ் என்று உனக்குத் தோன்றுவதுண்டா?''

வெகு நேரம் அவன் பேசாமலிருந்தான். கடைசியில், ''ஆமாம்,'' என்றான்.

அதன் பிறகு கராஸ் பாதிரியார் அவனை எதுவும் கேட்கவில்லை. பஸ் ஸ்டாப்பில் இறங்கிக் கொண்டு, ''தாங்க்ஸ் ஃபாதர்,'' என்றான்.

கராஸ் பாதிரியார் காரை ஓட்டிக் கொண்டு சென்றார். அது பார்வையிலிருந்து மறையும் வரை, கார்ல் அங்கேயே நின்றான். பிறகு ஒரு பஸ்ஸில் ஏறிச் சென்று, இறங்கி, பின்னொரு பஸ் மாறி, நகரத்தின் வடக்குப் பகுதியில், ஏழைகளின் பேட்டையை அடைந்தான். பல குடித்தனங்கள் உள்ள ஓர் இடிபாடான வீட்டை அடைந்தான். ஒரு குறிப்பிட்ட ஜாகையை அடைந்து கதவைத் தட்டினான். உள்ளே ஒரு கட்டில் கிறீச்சிடும் சத்தம் கேட்டது. கதவு சடக்கென்று திறந்து கொண்டது. ஒரு பெண் திறந்தாள்.

''ஏய், யாரடி அங்கே? உள்ளே வா!'' என்று உள்ளேயிருந்து ஓர் ஆண்குரல் கேட்டது.

''கம்முனு இரு. என் அப்பா தான் வந்திருக்கிறார்,'' என்றாள் அந்தப் பெண்.

# 25

''அம்மா எப்படி இருக்கிறாள்?'' என்று கார்லை அந்தப் பெண் விசாரித்தாள்.

''நன்றாயிருக்கிறாள்,'' என்று விறைப்பாகப் பதிலளித்தான் கார்ல். ''சௌக்கியமாயிருக்கிறாள்,'' என்று மீண்டும் சொல்லியபடி அவள் கையில் பணத்தைக் கொடுத்த போது அவளுக்குக் கமறிக் கமறி இருமல் வந்தது. வாயை ஒரு கையால் பொத்திக் கொண்டு, ''இந்தப் பாழாய்ப் போன சிகரெட்!'' என்றாள்.

அவள் கையில் ஊசி குத்திய வடுக்களை நோக்கினான் கார்ல்.

''தாங்க்ஸ் அப்பா,'' அவன் கையிலிருந்து நோட்டுக் களைப் பறிக்காத குறையாக வாங்கிக் கொண்டாள்.

''ஏய்! எத்தனை நேரம் அங்கே?'' என்று வீட்டுக்குள்ளிருந்து அவள் 'காதலன்' கத்தினான்.

''நீங்க சீக்கிரமாய்ப் போயிடுங்க அப்பா. அவர் சமாசாரம் தான் உங்களுக்குத் தெரியுமே?''

அவள் கதவைச் சாத்தப் போனாள். அதற்குள் அவள் மணிக்கட்டைப் பிடித்துக்கொண்டான் கார்ல். கெஞ்சலான குரலில் ரகசியமாகச் சொன்னான். ''நியூயார்க்கில் ஒரு ஆஸ்பத்திரி இருக்கிறது... அங்கே உனக்கு...''

அவள் முகம் சுளித்தாள். அவன் கையை விடுவித்துக் கொள்ள முயன்ற வண்ணம், ''சரி, சரி,'' என்றாள்.

''உன்னை நான் அங்கே அனுப்பி வைக்கிறேன். அவர்கள் உதவி செய்வார்கள். நீ ஜெயிலுக்குப் போக வேண்டி நேராது. அது...''

''கடவுளே! விடுங்க அப்பா!'' என்று கிறீச்சிட்டவள், அவன் பிடியை வெடுக்கென உதறிவிட்டாள்.

''கேளம்மா, தயவு பண்ணி அது... அது...''

படீரென்று கதவைச் சாத்திக் கொண்டு அவள் உள்ளே போய்விட்டாள்.

அந்த அரை இருளான வெராந்தா, தன் எதிர்பார்ப்புகள் அனைத்தும் அடக்கம் செய்யப்பட்ட கல்லறை மாதிரி தோன்றியது கார்லுக்கு. சாத்தப்பட்ட கதவைப் பார்த்த வண்ணம் ஊமையாக ஒரு நிமிடம் நின்றான். மௌனமான துயரத்தில் ஆழ்ந்தவனாக தலையைக் குனிந்து கொண்டான். வீட்டுக்குள்ளேயிருந்து கிசுகிசுவென்ற பேச்சுக் குரல்கள் கேட்டன. பின்னர் ஒரு பெண்ணின் கேலியான, கலீரென்ற சிரிப்பு. தொடர்ந்து இருமல்.

கார்ல் திரும்பினான். வழிமறித்தாற்போல் தன் எதிரே யாரோ நிற்பதைக் கண்டு அதிர்ச்சியுற்றான்.

துப்பறியும் அதிகாரி கிண்டர்மான்தான்.

''மிஸ்டர் கார்ல், இப்போது நாம் கொஞ்சம் பேசலாமில்லையா?'' என்றார் அவர். கோட்டுப் பைகளில் அவர் கைகள் செருகியிருந்தன, கண்கள் சோகமாயிருந்தன.

'மொழி ஆராய்ச்சி கழக'த்தில் கராஸ் பாதிரியார் உட்கார்ந்திருந்தார். தனித்தனியாக ரெகார்டர்களில் டேப்புகள் கவனமாகப் பொருத்தப்பட்டிருந்தன. முதல் டேப்பை அவர் ஓடவிட்டார். வெறிபிடித்த குரல் கொறகொறவென்று உளறத் தொடங்கியது. ஆராய்ச்சி கழகத்தின் டைரக்டரை நோக்கித் திரும்பினார் கராஸ். ''இது என்ன, பிராங்க்? ஏதேனும் ஒரு மொழியாக இருக்குமா இது?''

மேஜையின் முனையில் தொற்றிக் கொண்டிருந்தார் பிராங்க். டேப் முடியும் வரை பேசாமலேயிருந்தார். அவர் முகத்தில் குழப்பம் கூத்தாடியது. ''எங்கே பிடித்தீர்கள் இதை? ரொம்பக் கோரம்.''

கராஸ் டேப்பை நிறுத்தினார். ''பல வருஷங்களாக ஒரு மன நோயாளியைப் பற்றி ஆராய்ச்சி செய்து வருகிறேன். அப்போது பதிவு செய்தது. ஒரு கட்டுரை எழுத உத்தேசம்... சரி. ஏதாவது புரிகிறதா இதில்?''

டைரக்டர் தனது ஆமை ஓட்டு மூக்குக் கண்ணாடியின் பிரேமைக் கொறித்தபடி கொஞ்ச நேரம் மௌனமாயிருந்தார். பிறகு ''இன்னொரு தரம் போட்டுக் காட்டுங்கள்,'' என்றார்.

கராஸ் பாதிரியார் உடனே மறுபடியும் இயக்கினார் டேப் ரெகார்டரை. ''என்ன நினைக்கிறீர்கள்?''

''வந்து... ஏதோ ஒரு பேச்சின் உருவம் மாதிரி இருக்கிறது. சந்தேகமில்லை.''

கராஸ் பாதிரியாருக்குக் குபுக்கென்று நம்பிக்கை பொங்கியது. அதை வெளிக்காட்டாமல் அடக்கிக் கொண்டு, ''ஆமாம், எனக்கும் அப்படித்தான் தோன்றியது,'' என்றார்.

''ஆனால் என்ன மொழி என்று என்னால் இனம் கண்டுபிடிக்க முடியவில்லை, ஃபாதர். நவீன மொழியா, புராதன மொழியா என்று தெரியவில்லை. உங்களுக்குத் தெரிகிறதா?''

''ஊகூம்.''

''எதற்கும் இதை இங்கே கொடுத்துவிட்டுச் செல்லுங்களேன். என் உதவியாளர்களைக் கேட்கிறேன்.''

''சரி. ஆனால் ஒரு நகல் எடுத்துக்கொள்ளுங்கள். ஒரிஜினல் என்னிடம் இருந்தால் தேவலையென்று பார்க்கிறேன். அப்புறம், இன்னொரு கோரிக்கை, பிராங்க். உங்களுக்கு நேரம் இருக்குமா?''

''ஓ, தாராளமாய். சொல்லுங்கள். என்ன விஷயம்?'' என்றார் டைரக்டர்.

''சாதாரணமான சில பேச்சுக்களைத் தனித்தனியாகப் பதிவு பண்ணி வைத்திருக்கிறேன். மேலோடு பார்த்தால் இரண்டு வெவ்வேறு ஆள் பேசியது மாதிரி இருக்கும். ஒரே ஆளே அந்த இரண்டையும் பேசியிருக்க முடியுமா என்று பரிசோதனை செய்து கண்டுபிடிக்க வேண்டும். அது சாத்தியமா?''

''முடியுமே?''

''எப்படி?''

''அதற்கென்று சில சோதனைகள் இருக்கிறது. வார்த்தைகள் உச்சரிக்கிற முறை, பாணி - இப்படிப் பல அம்சங்கள் உண்டு. சாதாரண நபர்களுக்கு அது புரியாது.'' பாதிரியாரின் கையிலுள்ள டேப்புகளைப் புன்னகையுடன் நோக்கினார் டைரக்டர். ''இரண்டு வெவ்வேறு நபர்களின் பேச்சு இதில் பதிவாகியிருக்கிறதா?''

''இல்லை. குரலும் பேச்சும் ஒரே நபரின் வாயிலிருந்து வந்தது. அதான் சொன்னேனே, இரட்டைப் பர்ஸனாலிட்டி கேஸ். பேச்சும் குரலும் வெவ்வேறு ஆட்கள் மாதிரி தோன்றும். ஆனால் ஒரே ஒரு நபரின் வாயிலிருந்துதான் வந்தது. இதை வேறு யாரிடமும் ஒப்படைக்காமல் நீங்களே கண்டுபிடித்துத் தர வேண்டும். வெகு சீக்கிரமாகச் செய்ய வேண்டும்.''

''சரி. நானே செய்கிறேன்.''

டேப்புகளுக்கு நகல் செய்து அவரிடம் தந்துவிட்டுப் பாதிரியார் தன் ஜாகைக்குத் திரும்பினார். ஆஸ்பத்திரியிலிருந்து ரெஜினாவைப் பற்றிய ரெகார்டுகள் வந்து சேர்ந்திருந்தன.

உடம்பின்மீது எழுத்து தென்பட்டதாகக் கிறிஸ்டி சொல்லியிருந்தது அவருக்கு ஞாபகம் வந்தது. ரெகார்டுகளைப் பார்த்தார். அதுவும் குறிக்கப்பட்டிருந்தது.

ரெஜினாவுக்கு உணர்வுகளை மிகமிக வெளிப்படுத்தக் கூடிய சருமமாம். அவளே தன் விரலால் தன் உடம்பின் மீது எழுத்தை எழுதிக் கொண்டால், கொஞ்சம் பொறுத்து அது வெளிப்படக்கூடுமாம். அந்த மர்ம எழுத்துக்கள் அப்படி உண்டாகியிருக்கலாம் என்று ஆஸ்பத்திரி ரெகார்டுகள் குறிப்பிட்டிருந்தன.

# 26

உடம்பின்மீது எழுத்து தோன்றும்படி ரெஜினா தானே செய்து கொண்டாளா? அப்படித் தான் இருக்கும் என்று கராஸ் பாதிரியாருக்கு நிச்சயமாகத் தெரிந்தது. ஏனெனில்-

ரெஜினாவின் கைகளை நாடா போட்டுக் கட்டிய பிறகு அந்த மர்ம எழுத்துத் தோன்றவேயில்லையாம். கட்டோடு நின்று விட்டதாம். ஆஸ்பத்திரி ரெகார்டு தெரிவித்தது.

மோசடி - தெரிந்தோ தெரியாமலோ ரெஜினா செய்து வருகிறாளா?

கராஸ் பாதிரியார் குழப்பத்துடன் தலை நிமிர்ந்தார். எதிரிலிருந்த ஆராய்ச்சிக் கழகத்தின் டைரக்டரைக் கூப்பிட்டார். அவர் வெளியே போயிருக்கிறார் என்று பதில் வந்தது. மிகவும் களைப்பாயிருந்தது பாதிரியாருக்கு. எழுந்து சென்று குளிர்ந்த தண்ணீரை எடுத்து முகத்தில் அடித்துக் கொண்டார்.

'ஒருவருக்குப் பேயோட்டு முன், பேய்தான் பிடித்திருக்கிறது என்பதை மிகக் கவனமாக ஊர்ஜிதம் செய்து கொள்ள வேண்டியது பேயோட்டுபவரின் பொறுப்பு...' என்ற சர்ச் கட்டளை திரும்பத் திரும்ப அவருக்கு நினைவு வந்தது.

இன்னும் எதையாவது ஆராயாமல் விட்டுவிட்டோமா என்று யோசித்துப் பார்த்தார். அந்த நாற்றங்கள்... 'ஆட்டோ சஜஷன்' மூலம், தனக்குத் தானே நாற்றங்களைக் தூண்டி விட்டுக் கொள்ளவும் நோயாளிகளால் முடியும் என்று படித்திருப்பது ஞாபகம் வந்தது.

அந்தத் தட்தட் சத்தம்? மேஜை டிராயர் தானாகத் திறந்து தானாக மூடிக் கொண்டது? அவரால் தீர்மானிக்க

முடியவில்லை. தம் சிந்தனைகள் தெளிவின்றி இருப்பது அவருக்குத் தெரிந்தது.

நூல்நிலையத்துக்குச் சென்றார். இது சம்பந்தமாக ஜெர்மன் மனத்தத்துவ நிபுணரொருவர் எழுதியுள்ள புத்தகத்தை எடுத்துப் படித்தார். ரெஜினாவிடம் காணப் படுவதெல்லாம் மனசைப் பொறுத்த கோளாறுகள்தான் என்று அப்புத்தகம் உறுதியாகச் சொல்லிற்று. இதையெல்லாம் மன நோய் மருத்துவமனைகளில் கூர்ந்து கவனித்திருக்கிறார்கள். புகைப் படம் எடுத்திருக்கிறார்கள். ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள்...

இருந்தாலும் கராஸ் பாதிரியாருக்குத் திருப்தி ஏற்படவில்லை. களைத்துப் போன கண்களைத் தேய்த்து விட்டுக் கொண்டார். இன்னும் ஏதோ ஒன்றை விட்டு விட்டோம் என்று எண்ணினார். எதை? எதை?

எதுவுமில்லை என்று முடிவு செய்து கொண்டார்.

கிறிஸ்டியின் வீட்டுக்குப் புறப்பட்டார். வேலைக்காரி வில்லிதான் கதவைத் திறந்தாள். உள்ளே அறையில் மேஜைமீது கவிழ்ந்தாற்போல் படுத்திருந்தாள் கிறிஸ்டி. ''வாருங்கள், ஃபாதர்,'' என்றாள். அவள் குரல் கரகரப்பாயும், விரக்தியினால் கிசுகிசுப்பாயும் இருந்தது.

''என்னம்மா உனக்கு?'' என்று கவலையுடன் கேட்டார் கராஸ் பாதிரியார்.

''ஒன்றுமில்லை. நன்றாய்த்தான் இருக்கிறேன்,'' என்றாள் கிறிஸ்டி. அவள் பேச்சில் அவள் மனப் போராட்டம் வெளிப்பட்டது. அவர் உற்றுப் பார்த்தார். அவள் கைகள் முகத்தை மறைத்தாற்போலிருந்தன. அந்தக் கைகள் நடுங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார். ''ஏதாவது தெரிந்ததா?'' என்றாள் அவரிடம்.

''ஆஸ்பத்திரி ரெகார்டெல்லாம் பார்த்தேன்...'' சிறிது நிறுத்திவிட்டு அவர் அவளைப் பார்த்தார். அவள் பதிலேதும் கூறவில்லை. தொடர்ந்தார்: ''எனக்கு என்ன தோன்றுகிற தென்றால்... ரெஜினாவுக்குத் தீவிரமாய் மனநோய் வைத்தியம் செய்தால் ரொம்ப உதவியாயிருக்கும். அதுதான் என் உண்மையான அபிப்பிராயம்...''

''ஊகூம்,'' என்பது போல அவள் மிக மெல்லத் தலையை அசைத்தாள்.

''ரெஜினாவின் அப்பா எங்கே இருக்கிறார்?'' என்று பாதிரியார் கேட்டார்.

தாழ்ந்த குரலில் அவள் பதிலளித்தாள்: ''ஐரோப்பாவில்.''

''இங்கே நடக்கிறதையெல்லாம் அவருக்குத் தெரிவித்தீர்களா?''

அவருக்குத் தெரிவிக்க வேண்டுமென்று பலமுறை அவள் எண்ணியதுண்டு. இந்த நெருக்கடி தங்கள் இருவரையும் மீண்டும் ஒன்று சேர்க்க உதவியாயிருக்குமே என்றுகூட அவள் நினைத்தாள். ஆனால் ரெஜினாவின் நன்மையை முன்னிட்டு, அவருக்குத் தெரிவிக்க வேண்டாமென்று முடிவு செய்திருந்தாள்.

''ரெஜினாவின் அப்பா இப்போது இங்கே இருந்தால் உதவியாயிருக்குமென்று நினைக்கிறேன்.''

''இதோ பாருங்கள். கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒன்றைத் தவிர வேறெதுவும் நமக்கு உதவி செய்யப் போவதில்லை!'' சட்டென்று உரத்த குரலில் கிறிஸ்டி சொன்னாள். பாதிரியாரை நோக்கி முகத்தை நிமிர்த்திய போது அவள் கண்களில் நீர் ததும்பிக் கொண்டிருந்தது. ''ஆமாம்,

ஃபாதர், கண்ணுக்குத் தெரியவே தெரியாத அந்த ஒன்றுதான் நமக்கு உதவ வேண்டும்...''

கராஸ் பாதிரியார் மீண்டும் சொன்னார்: ''ரெஜினாவின் அப்பாவுக்கு நீங்கள் சொல்லி யனுப்ப வேண்டும் என்று நான் நினைக்கிறேன்.''

ஜன்னி பிடித்த மாதிரி அவள் கத்தினாள். ''இருக்கிற பேயை வெளியே விரட்டும்படி உங்களைக் கேட்டுக் கொண்டேனே தவிர இன்னொரு பேயை உள்ளே அழைத்து வரச் சொல்லவில்லை!'' தாள முடியாத வேதனையினால் அவள் முகம் கோணிற்று. ''ஏன் ஃபாதர், ஹோவார்டு - ரெஜினாவின் அப்பா - வந்து இப்ப என்ன ஆகணும்?''

''ரெஜினாவின் கோளாறுக்குக் காரணம் ஏதோவொரு குற்ற உணர்வுதான் என்பதால்...''

''என்ன குற்ற உணர்வு? எதைப் பற்றி? எங்கள் விவாக ரத்தைப் பற்றியா? அதெல்லாம் சுத்தப் பேத்தல்!''

''அதில்லை. வந்து-''

''அவளுக்குக் குற்ற உணர்வு எங்கிருந்து வருகிறது? சொல்லட்டுமா? டைரக்டர் பர்க் டென்னிங்ஸை அவள் கொலை செய்துவிட்டாள்! அதுதான்!'' கிறிஸ்டி கூச்சலிட்டாள். நெற்றியை நொறுக்கி விடுகிற மாதிரி இரு கைகளாலும் அழுத்திப் பிடித்துக் கொண்டு கூச்சலிட்டாள்: ''அவரை அவள் கொலை செய்து விட்டாள்! கொலை செய்து விட்டாள்! அவளைப் போலீசில் இழுத்துக் கொண்டு போவார்கள்! கடவுளே, கடவுளே, கடவுளே!...''

விம்மியழுதபடி சுருண்டு விழும் கிறிஸ்டியைக் கராஸ் பாதிரியார் தாங்கிக் கொண்டார். மெல்ல அழைத்துப் போய் சோபாவில் உட்கார்த்தி வைத்தார். ''பதற்றப்படாதீர்கள்.

ஒன்றுமில்லை. பதற்றப்படாதீர்கள்.'' அவளைச் சமாதானப்படுத்தி மெல்லப் பிடித்து சோபாவில் கால் நீட்டிப் படுக்க வைத்தார். சோபாவின் முனையில் அமர்ந்து கொண்டு அவள் கையைத் தன் இரு கைகளாலும் பிடித்துக்கொண்டார்.

துப்பறியும் அதிகாரி கிண்டர்மானைப் பற்றி... மரணமடைந்த டைரக்டர் பர்க்கைப்பற்றி... கிறிஸ்டியின் விம்மல்கள்... எல்லாம் அவர் எண்ணத்தில் நீந்தின.

# 27

**டை**ரக்டர் பர்க் டென்னிங்ஸைத் தன் மகள் கொலை செய்துவிட்டாள் என்று தெரிவித்த பிறகு, கிறிஸ்டியின் அழுகை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது. கராஸ் பாதிரியார் அவளை மெதுவே எழுப்பி உட்கார்த்தி வைத்தார். சிறிது தண்ணீர் கொண்டுவந்து தந்தார். ஷெல்பில் ஒரு பெட்டியில் கைக் குட்டைகள் இருப்பதைக் கண்டெடுத்து அவளிடம் கொடுத்தார்.

கிறிஸ்டி மூக்கையும் கண்ணையும் கைக்குட்டையில் துடைத்துக் கொண்டாள். ''அப்பாடா! ஒரு வழியாக அந்த விஷயம் என்னிடமிருந்து வெளிப்பட்டு விட்டது. நிம்மதியாயிருக்கிறது எனக்கு,'' என்றாள்.

கராஸ் பாதிரியாருக்கு, அவளுடைய மனச்சுமை தன் மீது ஏறித் தன்னை அழுத்துவதாகத் தோன்றியது. உள்ளுக்குள் அவர் தன்னைத் திடப்படுத்திக் கொண்டார். ''இன்னும் ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா?'' என்று மென்மையாக அவளை விசாரித்தார்.

கிறிஸ்டி தலையை அசைத்தாள். பெருமூச்சு விட்டபடி ஒரு கண்ணைத் துடைத்துக் கொண்டாள். திக்கித் திக்கி,

திணறித் திணறி, பேசினாள்: போலீஸ் துப்பறியும் அதிகாரி கிண்டர்மான் வந்ததைப் பற்றி, டைரக்டர் பர்க் டென்னிங்ஸ், ரெஜினாவின் அறையில் இருந்தாரென்பது தனக்கு நிச்சயமாகத் தெரியும் என்பதைப் பற்றி, ரெஜினாவின் அசுரபலம் பற்றி, டென்னிங்ஸின் தலை பின்புறமாகத் திருகிக் கொண்டு கிடந்ததைப் பற்றி.

சொல்லி முடித்துவிட்டு, கராஸ் பாதிரியார் என்ன சொல்லப் போகிறாரென்று அறிய அவர் முகத்தைப் பார்த்தாள். கொஞ்ச நேரம் அவர் மௌனமாக இருந்தார். கடைசியில் மெதுவாய்க் கேட்டார். ''ரெஜினாதான் பர்க்கைக் கொலை செய்தாள் என்று நீங்கள் எப்படி நிச்சயமாகச் சொல்கிறீர்கள்?''

''தலை திரும்பிக் கிடந்ததே?'' என்றாள் கிறிஸ்டி.

''சுவரில் பலமாய் மோதிக் கொண்டதால் அப்படி இருக்கலாம்,'' என்றார் பாதிரியார். ''நீங்கள் அதிர்ச்சியில் இருந்தீர்கள்; அதனால் கற்பனை செய்து கொண்டிருக்கலாம்.''

''தான் செய்ததாக அவளே சொன்னாள்,'' உணர்ச்சியற்ற குரலில் கிறிஸ்டி பதிலளித்தாள்.

சிறிது மௌனம். ''எப்படிச் செய்தாளாம்? அதைச் சொன்னாளா?''

''இல்லை.''

''கொலை செய்தவரைத் தவிர வேறு யாருக்கும் தெரிந்திருக்க முடியாத விவரங்களை ரெஜினா சொன்னாளா? இல்லையென்றால் அவள் சொல்வதில் ஒரு அர்த்தமும் இல்லை.''

''அவள்தான் பர்க்கைக் கொலை செய்தாள் என்று எனக்குத் தோன்றுகிறது. இன்னும் யாரையாவது கொலை

செய்துவிடுவாளோ என்று பயப்படுகிறேன்...'' அவள் தயங்கினாள். ''ஃபாதர், நான் இப்போது என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?''

அவர் தன் மீதுள்ள சுமை பன்மடங்கு அதிகரிப்பதை உணர்ந்தார். ''நல்லது... யாரிடமாவது சொல்ல வேண்டு மென்று நினைத்தீர்கள், சொல்லி விட்டீர்கள். என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்தாகிவிட்டது. இனி அதை மறந்து விடுங்கள். மனசிலிருந்து அதை ஒதுக்கிவிட்டு, மற்றதை என்னிடம் விட்டு விடுங்கள்.'' அவள் பார்வை தன் மீதே படர்ந்திருப்பதை அவர் உணர்ந்தார். அவள் முகத்தை நோக்கினார். ''எனக்காக ஒன்று செய்யுங்கள். வெளியே போய் ஏதாவது படம் பார்த்துவிட்டு வாருங்கள்.''

அவள் புறங்கையால் கண்ணைத் துடைத்துக் கொண்டு புன்னகை செய்தாள். ''சினிமா என்றாலே எனக்கு வெறுப்பு.''

''அப்படியானால் யாராவது நண்பர்களைப் பார்த்து விட்டு வாருங்கள்.''

''எனக்குள்ள ஒரே நண்பர் இதோ இங்கேயே இருக்கிறார்,'' என்றாள் அவள்.

''சரி. கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்,'' என்று அவர் கூறிய அறிவுரையை அவள் ஏற்றுக் கொண்டாள்.

அவருக்கு ஒரு எண்ணம் ஞாபகம் வந்தது. ''அந்தப் பில்லி சூனியப் புத்தகம்... அதை டென்னிங்ஸ் ரெஜினாவின் அறைக்கு எடுத்துச் சென்றிருப்பாரோ? அல்லது அது அங்கேதான் இருந்தா?''

''ஏற்கெனவே அங்கு இருந்தது என்றுதான் நினைக்கிறேன்,'' என்றாள் அவள்.

''அப்புறம் வந்து பார்க்கிறேன்,'' என்று புறப்பட்டார் அவர். தெருவில் நடக்கையில் அவருடைய மனத்தில்

*சிந்தனைகள் கொந்தளித்தன. ரெஜினா - டென்னிங்ஸ்... சே! ஒரு நாளும் இருக்க முடியாது. ஆனால் ரெஜினா அவ்வளவு தூரம் உறுதியாகச் சொல்கிறாளே...*

*அவர் புறப்பட்டார்.*

*ஏதோ ஒரு வீட்டிலிருந்து ஆர்மோனியத்தின் இசை கேட்டது. சிறு வயது முதல் அவருக்கு மிகவும் பிடித்த இசை. நின்று சிறிது நேரம் கேட்டார். மனம் அமைதிப்பட்டது. ஆனால் மறுகணமே போக்குவரத்து ஓசைகள் அந்த இசையை அமுக்கிற்று.*

*கடவுளே கடவுளே என்று தன்னுள் சொல்லிக் கொண்டார். ஓர் உயிர் இறந்து கொண்டிருக்கிறது. உடனே ஏதாவது செய்ய வேண்டும் என்று அவர் உள்ளம் பதைத்தது.*

*தன் ஜாகையை அடைந்தவர் மொழி ஆராய்ச்சிக் கழகத்தை போனில் கூப்பிட்டார். இயக்குனர் இல்லை. 'பேயோட்டுபவர்களுக்கான கட்டளைகள்' என்ற சர்ச் புத்தகத்தை மீண்டுமொரு முறை படித்தார். போனை எடுத்துக் கிறிஸ்டியைக் கூப்பிட்டார்.*

*''என்ன ஃபாதர்?'' என்று வினவியபோது அவள் குரல் கரகரவென்றிருந்தது.*

*''டாக்டர் க்ளைன்தானே ரெஜினாவை முதலில் பரிசோதித்தவர்? அவர் எங்கே இருக்கிறார்?''*

*அவள் டாக்டரின் ஆஸ்பத்திரி முகவரியைத் தெரிவித்தாள்.*

*''ரெஜினாவின் ஈஈஜி ரிப்போர்ட்டைப் பார்க்க நான் வருகிறேன் என்று அவரிடம் சொல்லுகிறீர்களா?'' என்று கூறியவர், தன் பாதிரியார் உடைகளைக் களைந்து விட்டுச் சாதா உடைகளை அணிந்து கொண்டார்.*

*கிறிஸ்டியின் காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டார். போக்குவரத்து சிக்னலுக்காக ஓரத்தில் காத்திருந்தபோது எட்டத்தில் ஒரு காட்சி அவர் கண்ணில் பட்டது.*

*கிறிஸ்டியின் வேலைக்காரனான கார்ல் ஒரு கறுப்புக் காரிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தான். அதை ஓட்டிக் கொண்டிருந்தவர் துப்பறியும் அதிகாரியான கிண்டர்மான்.*

*சிக்னல் கிடைத்து விட்டதால் கராஸ் பாதிரியார் மேலே காரை ஓட்டிச் சென்றார். ஆனால் அந்தக் காட்சி அவர் மனத்தை உறுத்தியது. கார்லும் கிண்டர்மானும் சேர்ந்து என்ன செய்கிறார்கள்? அல்லது தற்செயலாகச் சந்தித்திருப்பார் களோ? ரெஜினாவைப் பற்றித்தான் இரண்டு பேரும் பேசிக் கொண்டிருப்பார்களோ?*

*டாக்டர் கிளைனின் மருத்துவமனையை அடைந்த போது, ஈஈஜி ரிப்போர்ட்டை ஒரு நர்ஸ் தயாராய் வைத் திருந்தாள். வாங்கிப் பார்த்தார். அதன் அலைகள் ஒரே சீராக இருந்தன. ஏற்ற இறக்கங்கள் இருக்கவில்லை.*

*டாக்டர் கிளைன் சற்றைக்கெல்லாம் தன்னை அறிமுகம் செய்து கொண்டார். ''என்ன, ஈஈஜி பார்த்தீர்கள் அல்லவா? ஒரே சீராக இருக்கிறது,'' என்றார்.*

*''ஆமாம் டாக்டர். அதுதான் விசித்திரமாயிருக்கிறது,'' என்றார் கராஸ் பாதிரியார்.*

*''என்ன விசித்திரம்?''*

*''இங்கே ரெஜினா வந்திருந்த போது மிகவும் மனக் கோளாறுடன் இருந்தாள் இல்லையா?''*

*''ஆமாம்.''*

*''நிதானமான, சரியான புத்தியுடன் இருப்பவர் களுக்குக்கூட, ஈஈஜியில் ஓரளவு ஏற்ற இறக்கங்கள்*

காணப்படும். மன நிலை மிகவும் மோசமாயிருந்த ரெஜினாவுக்கு எப்படி இவ்வளவு சுத்தமாய், சீராய், ஏற்ற இறக்கம் இல்லாத அலைகளாக இருக்கிறது? இது விசித்திரம் இல்லையா?''

டாக்டர் பதில் சொல்லுமுன் ஒரு நர்ஸ் வந்து அவரை அவசரமாய் அழைத்தாள். ''மன்னியுங்கள்,'' என்று சொல்லி விட்டு அவர் உள்ளே சென்றுவிட்டார்.

ஈஈஜி ரிப்போர்ட்டை மறுபடியும் ஒரு முறை கூர்ந்து பார்த்துவிட்டு நர்ஸின் கையில் ஒப்படைத்தார் கராஸ் பாதிரியார்.

இதுவும் ஒரு வகையில் ஆதாரமாகப் பயன்படக் கூடும் என்று எண்ணிக் கொண்டார் அவர். ரெஜினா வெறும் ஹிஸ்டீரியா நோயாளி அல்ல என்றும் பேய்தான் பிடித்திருக்கிறது என்றும் பிஷப்பிடம் நிரூபிக்க முற்படும் போது ஒரு ஆதாரமாகப் பயன்படும்...

# 28

கிறிஸ்டியின் வீட்டுக்குத் திரும்பிச் சென்றபோது மீண்டும் அந்தத் திடுக்கிடும் காட்சியைக் கண்டார் கராஸ் பாதிரியார்.

காரில் தனியாக உட்கார்ந்திருந்தார் துப்பறியும் அதிகாரியான கிண்டர்மான். காரின் கதவுக்கு வெளியே அவர் முழங்கை நீட்டிக் கொண்டிருந்தது. கிறிஸ்டியின் வீட்டையே அவர் கவனித்துக் கொண்டிருப்பது போல் தோன்றியது. டைரக்டர் பர்க் டென்னிங்ஸின் மரணத்துக்கும் ரெஜினா வுக்கும் சம்பந்தம் உண்டு என்று இவர் நினைக்கிறாரோ?...

பாதிரியார் தன் காரை அதன் இடத்தில் நிறுத்தினார். கிண்டர்மானை நோக்கி வந்தார்.

காரின் மறு பக்கமாகச் சென்று, உள்ளே தலையை நீட்டி, ''ஹலோ இன்ஸ்பெக்டர்!'' என்று விளித்தார்.

துப்பறியும் அதிகாரி சரேலெனத் திரும்பினார். முதலில் அவர் முகத்தில் ஆச்சரியம் தென்பட்டது. பிறகு மலர்ந்தது. ''ஹலோ கராஸ்!'' என்றார்.

எதிர்பாராத சமயத்தில் அவரை மடக்கி விட்டோம் என்று எண்ணிக் கொண்டார் கராஸ்.

''என்ன, இந்த நேரத்தில் இங்கே உட்கார்ந் திருக்கிறீர்கள்?'' என்று சும்மா, இரண்டொரு வார்த்தை பேசிவிட்டு, ''அந்தக் கேஸில் குற்றவாளியைக் கண்டுபிடித்து விட்டீர்களா?'' என்று கேட்டார்.

''எந்தக் கேஸ்?''

''டைரக்டர்.''

''ஓ, அதுவா?'' சூள்கொட்டி விட்டுப் பேச்சை மாற்றினார் கிண்டர்மான். ''அதிருக்கட்டும். சினிமாவுக்குப் போகிறீர்களா இன்று? ஒதெல்லோ படம் கிரெஸ்ட் தியேட்டரில். என்னிடம் இலவச டிக்கெட் இருக்கிறது.''

''இல்லை. எனக்குக் களைப்பாக இருக்கிறது,'' என்றார் கராஸ் பாதிரியார். ஆனால் துப்பறியும் அதிகாரியைச் சிறிது ஆழம் பார்க்கவும் தோன்றியது. ''கிரெஸ்ட் தியேட்டரில் 'ஒதெல்லோ' படம் ஓடுகிறதென்றா சொன்னீர்கள்? கிறிஸ்டி நடித்த படம் அல்லவா ஓடுகிறது?''

கண்ணிமைக்கும் நேரம் கிண்டர்மான் தடுமாறி விட்டார். ஆனால் உடனே சமாளித்துக் கொண்டு அவசரமாக, ''இல்லை, ஒதெல்லோதான். எனக்கு நிச்சயமாகத் தெரியும்,'' என்றார்.

பாதிரியார் அவரையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''என்ன விஷயம், அப்படிப் பார்க்கிறீர்கள்?'' என்றார் கிண்டர்மான்.

கராஸ் பாதிரியார் கவலை நிறைந்த முகத்துடன் உள்ளே கையை நீட்டி, கிண்டர்மானின் கண் இமையை உயர்த்தினார். கண்ணைப் பரிசோதித்தார். ''எனக்கு நிச்சயமாகத் தெரிய வில்லை... ஆனால் உங்களுக்கு மைதோமானியா நோய் வரக்கூடும்...''

''அது என்ன நோய்? எனக்குத் தெரியவில்லையே? ஸீரியஸா?''

''உயிர் போய் விடாது.''

''பின்னே? சொல்லுங்கள். எனக்கு ஸஸ்பென்ஸ் தாளவில்லை. என்ன மாதிரியான நோய் அது?''

''அகராதியில் பாருங்கள்,'' பலவீனமான புன்னகையை வெளியிட்டார் பாதிரியார். ''வேலை யிருக்கிறது. போக வேண்டும். உடம்பைப் பார்த்துக் கொள்ளுங்கள்,'' தன் ஜாகையை நோக்கி அவர் நடந்தார்.

துப்பறியும் அதிகாரியின் முகத்தில் மலர்ச்சி மறைந்து கவலை படர்ந்தது. கிறிஸ்டியின் வீட்டை ஒரு முறை நோக்கி விட்டுக் காரைக் கிளப்பினார். பாதிரியாரைத் தாண்டிச் செல்கையில் ஹாரன் அடித்துக் கைவீசினார்.

பாதிரியாரும் பதிலுக்குக் கை வீசினார். பிறகு ஒரு நிமிடம் தெருவின் ஓரத்தில் அசையாது நின்றார். நடுங்கும் விரல்களால் புருவத்தை நீவிவிட்டுக் கொண்டார். உண்மையிலேயே ரெஜினா செய்திருப்பாளா? டைரக்டர் பர்க் டென்னிங்ஸை அவ்வளவு கோரமான முறையில் ரெஜினாவினால் கொலை செய்திருக்க முடியுமா? ஜிவு ஜிவு வென்று உஷ்ணமடைந்த கண்களால் ஏறிட்டுக் கிறிஸ்டியின் வீட்டைப் பார்த்தார். ரெஜினாவின் படுக்கையறை தெரிந்தது.

கடவுளே! அந்த வீட்டுக்குள் என்னதான் உலவுகிறது?

துப்பறியும் அதிகாரி ரெஜினாவை எப்போது சந்திக்கப் போகிறாரோ என்னவோ? சந்திக்கும்போது, ரெஜினாவுக்குள் டென்னிங்ஸின் அருவம் ஒளிந்திருப்பதாகத் தோன்றுமோ? அவருடைய குரல் கேட்பதாகத் தோன்றுமோ? வெகு விரைவில் ரெஜினாவை ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் அடைத்து விடுவார்கள். அல்லது வெகு விரைவில் -

அவள் இறக்கக் கூடும்.

அதற்குள், ரெஜினாவைப் பேய்தான் பிடித்திருக்கிறது என்பதற்கான ஆதாரங்களைத் திரட்டி. சர்ச் மேலிடத்தாரிடம் அனுமதி வாங்க வேண்டும்...

தெருவைக் கடந்து கிறிஸ்டியின் வீட்டை அடைந்தார். கதவைத் தட்டியதும் வேலைக்காரி வில்லி வந்து கதவைத் திறந்தாள். எஜமானி தூங்குவதாகத் தெரிவித்தாள்.

''அதுவும் நல்லதுதான்,'' பாதிரியார் தலையசைத்து விட்டு, மாடிக்குச் சென்று ரெஜினாவின் படுக்கையறையை அடைந்தார்.

உள்ளே நுழைந்தவர், ஜன்னலருகே ஒரு நாற்காலியில் வேலைக்காரன் கார்ல் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். கையைக் கட்டிக் கொண்டு ரெஜினாவையே கவனித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் அவன். மரக்கட்டை மாதிரி ஆடாமல் அசையாமல், வாய் திறவாமல் இருந்தான்.

கராஸ் படுக்கையை நெருங்கினார். குனிந்து நோக்கினார். ரெஜினாவின் கண்ணில் வெள்ளைப் பரப்பு, வெள்ளைப் பனி படர்ந்தாற்போலிருந்தது. ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். வேறு ஏதோவொரு உலகத்தின் ஆதிக்கம் அவள்மீது படிந்திருந்தது. கார்லை ஓரப் பார்வையால் பார்த்தார் பாதிரியார். பிறகு மெல்லக் குனிந்து,

ரெஜினாவைக் கட்டிப் போட்டிருக்கும் நாடாக்களில் ஒன்றை அவிழ்க்க ஆரம்பித்தார்.

''ஃபாதர்! வேண்டாம்!''

கார்ல் படுக்கையருகே பாய்ந்து வந்தான். பாதிரியாரின் கைகளை வலுவாகப் பிடித்துத் தள்ளினான். ''ரொம்பப் பொல்லாது ஃபாதர்! ரொம்ப வலுவாக இருக்கிறது அது. கட்டை அவிழ்க்காதீர்கள்.''

# 29

கட்டுக்களை அவிழ்க்க வேண்டாமென்று வேலைக்காரன் கார்ல் பதறியபோது அவன் கண்களில் அச்சத்தைக் கண்டார் கராஸ் பாதிரியார். அந்த அச்சம் உண்மையான தென்று தெரிந்தது. ரெஜினாவின் பிசாசுப் பலம் என்பதெல்லாம் வெறும் பேச்சல்ல, உண்மையானதுதான் என்று இப்போது அவருக்குப் புலப்பட்டது.

டைரக்டர் டென்னிங்ஸின் கழுத்தை ரெஜினாவால் அப்படித் திருகியிருக்க முடியும்.

கடவுளே! கடவுளே! ஏதாவதொரு ஆதாரத்தை, சாட்சியத்தைக் காட்டேன்! சீக்கிரம்! சீக்கிரம்! அவர் உள்ளம் ஓலமிட்டது.

''என்ன கார்ல், சௌக்கியமா?'' திடீரென்று வந்தது அந்தக் குரல் ரெஜினாவிடமிருந்து. ஜெர்மன் மொழியில்!

பொங்கியெழுந்த நம்பிக்கையுடன் தலையைத் திருப்பிப் படுக்கையை நோக்கினார் கராஸ்.

வேலைக்காரன் கார்லை நோக்கி ரெஜினா - அவளைப் பிடித்திருந்த பேய் - விகாரமாய் இளித்துக் கொண்டிருந்தது.

அது கார் லிடம் ஏதோ கேட்டது. கவனித்தார்.

கார்லின் பெண் டான்ஸ் ஆட விரும்புகிறாளா என்று கேட்கிறது.

ஜெர்மன் மொழியில்!

தடக் தடக்கென்று அடித்துக் கொள்ளும் இருதயத்துடன் கராஸ் பாதிரியார் கார்லைத் திரும்பி நோக்கினார். அந்த வேலைக்காரனின் கன்னங்கள் செக்கச் செவேலென்று சிவந்திருந்தன. அவன் நடுங்கிக் கொண்டிருந்தான். கண்கள் கோபத்தினால் பளபளத்தன.

''கார்ல், நீ வெளியே போய் இருப்பது நல்லது,'' என்று கூறினார்.

அதை மறுக்கிற மாதிரி அந்த வேலைக்காரன் தலையை அசைத்தான். கைகளை அவன் இறுக்கிப் பிசைந்து கொண்டிருந்ததால் விரல் முட்டிகள் வெளுத்திருந்தன. ''இல்லை, நான் இங்கேயே இருக்கிறேன்,'' என்றான்.

''தயவு செய்து போகிறாயா இல்லையா?'' - பாதிரியார் உறுதியாக அதட்டினார். அவர் பார்வை அவன்மீது அசையாமல் நின்றது.

ரெஜினாவின் சிரிப்பு நின்றுவிட்டது. கராஸ் அதைத் திரும்பிப் பார்த்தார். பேய் அவரையே கவனித்துக் கொண்டிருந்தது. அதன் முகத்தில் திருப்தி நிலவியது. ''ஆக, நீ மறுபடியும் வந்திருக்கிறாயாக்கும்?'' என்று கரகரத்த தொண்டையில் அது பேசியது. ''எனக்கு ஆச்சரியமா யிருக்கிறது. அந்தப் புனித நீர் சமாசாரத்துக்குப் பிறகு நீ மறுபடி இங்கே வரமாட்டாயென்று நினைத்தேன். ஆனால் பாதிரியார்களுக்கு மானம் ரோஷம் கிடையாதென்பது எனக்கு மறந்துவிடுகிறது!''

கராஸ் பாதிரியார் மெல்ல மூச்சு விட்டார். ஜெர்மன் மொழியில் அதைச் சோதிக்க விரும்பினால் புத்திசாலித்

தனமாகப் பேச வேண்டும் என்று அவருக்குத் தெரிந்தது. ரெஜினாவின் மறைமனத்தில் எப்போதோ புதைந்து கிடக்கும் ஜெர்மன் வாக்கியங்களை வெளிக் கொணருவதாக அது அமைந்துவிடக் கூடாது.

'பொறு! பொறு!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார். பேய் பிடித்ததாகச் சொல்லப்பட்ட ஒரு வேலைக்காரப் பெண்ணைப் பற்றிப் புத்தகத்தில் படித்தது அவருக்கு நினைவு வந்தது. ஜன்னி வெறியில் இருக்கும் சமயங்களில் அவள் ஏதோவொரு மொழியில் கண்டபடி உளறுவாள். அது ஸிரியாக் மொழி என்று கண்டுபிடித்தார்கள். எப்படி அவளுக்கு அது தெரிந்திருக்க முடியும் என்று ஏகப்பட்ட பரபரப்பு. கடைசியில் விஷயம் புரிந்தது. முன்னொரு சமயம் அவள் ஓர் ஓட்டலில் வேலை செய்துகொண்டிருந்தாளாம். அங்கே தங்கியிருந்தவர்களில் ஒருவர் சமயவியல் மாணவர். தேர்வு நாட்களின் போது ஸிரியாக் மொழியிலுள்ள தனது பாடங்களை உரக்கப் படித்தபடியே அறையில் குறுக்கும் நெடுக்கும் நடப்பார், போவார், வருவார். அந்த வாக்கியங்களைக் கேட்டுக் கேட்டு அந்த வேலைக்காரப் பெண்ணின் அடிமனத்தில் அவை படிந்திருந்தன என்று கண்டுபிடிக்கப்பட்டது. அந்த மாதிரி ரெஜினாவின் விஷயமும் ஆகிவிடக் கூடாது.

''நீ ஜெர்மன் மொழியில் பேசப் போகிறாயா?'' என்று அவர் அமைதியாகக் கேட்டார்.

''ஆமாம்,'' என்ற பேய் அவரை நோக்கி இளித்தது. ''ஏன், உனக்கு அது இஷ்டமில்லையா?''

அந்த வாக்கியத்தைக் கேட்டதும் இன்னும் படபடத்தது பாதிரியாரின் இதயம். ஏனெனில் இந்த வாக்கியத்தை லத்தீன் மொழியில் பேசியது அது. அதுவும் பொருத்தமாக, பிழையில்லாமல்!

''என் பெயர் என்ன?'' சட்டென்று லத்தீன் மொழியில் கேட்டார்.

''கராஸ்,'' என்று பதில் வந்தது.

பாதிரியாரின் பரபரப்பு அதிகரித்தது. லத்தீன் மொழியிலேயே கேள்வி கேட்கலானார். அதுவும் லத்தீன் மொழியிலேயே பதில் சொல்லிற்று.

''நான் எங்கே இருக்கிறேன்?''

''ஓர் அறையில்.''

''அறை எங்கே இருக்கிறது?''

''ஒரு வீட்டில்.''

''பர்க் டென்னிங்ஸ் எங்கே இருக்கிறார்?''

''அவர் இறந்துவிட்டார்.''

''எப்படி இறந்து போனார்?''

''தலை திருகிக் கிடந்தது.''

''யார் அவரைக் கொன்றது?''

''ரெஜினா...''

''எப்படிக் கொன்றாள்? விவரமாகச் சொல்லு.''

''இப்போதைக்கு இத்தனை விஷயமே போதும்,'' என்று சொல்லி அது சிரித்தது. ''நீ லத்தீன் மொழியில் கேள்வி கேட்கும்போதே, அதற்கான பதிலையும் லத்தீன் மொழியிலேயே உன் மனத்துக்குள் உருவகப்படுத்திக் கொள்கிறாய் - உன்னையும் அறியாமல்!'' மீண்டும் சிரித்தது அது. ''நான் என்ன சொல்கிறேனென்று உனக்குப் புரிகிறதா கராஸ்? எனக்கு லத்தீன் மொழி கொஞ்சமும் தெரியாது. ஆனால் நான் உன் மனத்தைப் படிக்கிறேன். உன் மண்டையிலிருந்தே பதில்களைப் பறித்துக் கொள்கிறேன். அவ்வளவு தான்!''

ரொம்பத் தீர்மானமாக நினைத்திருந்த விஷயம் பொடிப் பொடியாக நொறுங்கவே கராஸ் பாதிரியார் இடிந்துபோனார். சந்தேகங்கள் அவருடைய மூளையைக் குடைந்தெடுத்தன.

அதுவோ தலையைப் பின்னுக்குச் சாய்த்துக்கொண்டு இடி இடியென்று சிரித்தது.

பாதிரியாரின் மனம் வேகமாக வேலை செய்தது. அவருக்கே பதில் தெரியாத ஒரு கேள்வியைக் கேட்டால்?

# 30

**பே**யின் சிரிப்பு அடங்கியதும் கராஸ் பாதிரியார் வினவினார்:

''இந்து மகாசமுத்திரத்தின் ஆழம் என்ன?''

அதன் கண்கள் பளபளத்தன. சீற்றமாக ஏதோ சொல்லியது.

கராஸ் ஏதோ கேட்க முயன்றார். அதற்குள் அதன் கண்கள் மேலே செருகிக்கொண்டன. ஒழுங்காய்ப் பதில் சொல்லுகிற பேய் மறைந்து, அர்த்தமில்லாமல் உளறுகிற வேறொரு தோற்றம் தெரிந்தது.

பொறுமை இழந்தவராக, விரக்தி அடைந்தவராக, கராஸ் அதட்டினார்: ''நான் பேயுடன் பேச வேண்டும்.''

பதில் இல்லை. மூச்சு விடுகிற சப்தம் மட்டுமே எங்கோ தொலைவில் கேட்கிற மாதிரி கேட்டது.

''நான் சொன்னது காதில் விழவில்லை?'' என்று கரகரத்த குரலில் வெடித்தார், கோபம் பொங்க.

அப்போதும் அந்த மூச்சு ஒலி மட்டும்தான்.

''பர்க் டென்னிங்ஸுடன் என்னைப் பேச விடு.''

ஓர் இருமல். சுவாசம். மீண்டும் மூச்சு. சுவாசம்.

''நான் பர்க் டென்னிங்ஸுடன் பேச வேண்டும்,'' என்றார் மீண்டும்.

அந்தச் செருமல் ஓசை ஒரே சீராகத் தொடர்ந்து கேட்டது. கராஸ் பாதிரியார் தலையை ஆட்டிக் கொண்டார். எழுந்து சென்று ஒரு நாற்காலியின் முனையில் உட்கார்ந்து கொண்டார். சுருண்டு மடங்கினார். வேதனை அவரைப் பிடுங்கித் தின்றது.

கிறிஸ்டியின் செயலாளரான ஷெரானைப் பார்க்கலாமென்று கீழே சமையலறைக்குச் சென்றார்.

சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்தவள் அவரைக் கண்டதும், ''உங்களுக்கு ஏதாவது சாப்பிடத் தரட்டுமா ஃபாதர்?'' என்றாள். ''நீங்கள் பசியாயிருப்பீர்களே?''

''இல்லை, வேண்டாம். தாங்க்ஸ்,'' என்று கூறிவிட்டு உட்கார்ந்து கொண்டார் அவர். ஷெரானின் டைப் ரைட்டரிலிருந்து பென்ஸிலும் காகிதமும் எடுத்துக் கொண்டார். ''அவள் ஒரேயடியாக இருமிக் கொண் டிருக்கிறாள்,'' என்று கூறி அதற்குத் தேவையான மருந்து வைத்திருக்கிறார்களா என்று விசாரித்தார்.

''இருக்கிறது,'' என்றாள் ஷெரான்.

அவர் காகிதத்தில் எழுதிக் கொண்டே பேசினார். ''அப்படியானால் 25 மில்லி கிராம் மாத்திரையில் பாதி கொடு.''

''சரி, ஃபாதர்.''

''அவளுக்கு உடம்பில் தண்ணீர் வற்றிக் கொண் டிருக்கிறது,'' என்றார் தொடர்ந்து. ''ஆகவே அவளுக்கு ரத்தக்குழாய் மூலம் ஆகாரம் செலுத்த வேண்டும். நாளைக் காலை மருந்துக் கடைக்குச் சொல்லியனுப்பி இதையெல்லாம்

கொண்டு வரச்சொல்லு.'' தான் எழுதிய காகிதத்தை அவளிடம் நீட்டினார்.

''சரி ஃபாதர்.'' அவர் எழுதித் தந்த பட்டியலைப் பார்த்த படியே சூப்பை உறிஞ்சினாள் அவள்.

கராஸ் பாதிரியார் அவளைக் கவனித்தவாறு இருந்தார். அவர் புருவங்கள் சுருங்கின யோசனை மிகுதியினால். ''நீ ரெஜினாவின் ஆசிரியை தானே?'' என்றார்.

''ஆமாம்.''

''அவளுக்கு லத்தீன் மொழி கற்றுக் கொடுத்ததுண்டா?''

அவள் திகைத்தாள். ''இல்லையே?''

''ஜெர்மன் மொழி?''

''ஊகூம். பிரெஞ்சு மொழி மட்டும்தான் கற்றுக் கொடுத்திருக்கிறேன்.''

''மற்றபடி ஜெர்மனோ லத்தீனோ கற்றுத் தந்ததில்லை?''

''இல்லை.''

''சரி, கார்லும் அவன் மனைவியும் சில சமயம் ஜெர்மன் மொழியில் பேசிக் கொண்டது உண்டா?''

''ஓ, நிச்சயமாய்.''

''பக்கத்தில் ரெஜினா இருக்கும்போது?''

''இருக்கும்போதும் பேசிக்கொள்வது உண்டு.''

''ரெஜினா வேறு எந்த மொழியுமே பேசிய தில்லையா?''

அவள் ஏதோ யோசனையாகப் பேசாமலிருந்தாள். ''வந்து... இல்லை... நான் ஒரு வேளை கற்பனை செய்து கொண்டேனோ என்னவோ...''

''என்னது? சொல்லு.''

''வந்து...'' அவள் முகம் கறுத்தது. ''சத்தியம் கூடப் பண்ணுவேன். ஒரு நாள் அவள் ரஷ்ய மொழியில் பேசிக் கொண்டிருப்பது என் காதில் விழுந்தது.''

ரஷ்ய மொழியா! அவர் தொண்டை உலர்ந்தது.

''நீ ரஷ்ய மொழி பேசுவது உண்டா?'' என்றார்.

அவள் தோள்களைக் குலுக்கினாள். ''ஏதோ கொஞ்சம் கொஞ்சம்.'' மேஜை விரிப்பைப் பிரித்து வைக்கலானாள் அவள். ''கல்லூரியில் கொஞ்சம் படித்திருக்கிறேன், அவ்வளவுதான்.''

கராஸ் பாதிரியார் தமது இருக்கையில் தொய்ந்து போனார். சந்தேகங்களும் கேள்விகளும் அவரை வாட்டியெடுத்தன. படித்த அறிவும் பகுத்தறிவும் அவருக்குள் மோதின.

''சரி, நான் என் ஜாகைக்குப் போகிறேன். ரெஜினா விழித்துக் கொண்டதும் என்னைக் கூப்பிடு,'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார்.

வாசற்புற ஹாலை அவர் அடைந்தபோது, வேலைக் காரன் கார்ல், ''ஃபாதர் கராஸ்!'' என்று கூப்பிட்டபடி ஓடி வந்தான்.

திரும்பினார். ரெஜினாவின் வாந்தியைச் சுத்தம் செய்வதற்காக முன்னொரு நாள் கொடுத்திருந்த அவருடைய ஸ்வெட்டர் அவன் கையில் இருந்தது.

''ஸாரி ஃபாதர். சீக்கிரமாய்த் தர முடியாமல் போய் விட்டது,'' என்று அவரிடம் ஸ்வெட்டரைக் கொடுத்தான். வாந்திக் கறைகள் அகன்றிருந்தன. இனிய மணமொன்று வீசியது. ''தாங்க்ஸ் கார்ல்,'' என்றார் மென்மையாக.

''உங்களுக்குத்தான் நாங்கள் நன்றி சொல்லணும் ஃபாதர்,'' என்றான் கார்ல். அவன் குரல் தழுதழுத்திருந்தது. கண்களில் நீர் தளும்பியது. ''ரெஜினாவைப் பற்றி இவ்வளவு அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறீர்களே, ரொம்ப நன்றி ஃபாதர்.''

கராஸ் அவனையே பார்த்தார். துப்பறியும் அதிகாரி கிண்டர்மானின் காரில் அவனைப் பார்த்தது ஞாபகம் வந்தது. மேலும் மர்மம்... குழப்பம்... சலிப்புடன் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். இரவு... இருளிலிருந்து வெளிப்பட்டு இருளுக்குள்ளேயே இறங்கினார்.



# 31

**தூ**க்கம் கண்ணைச் செருக, கராஸ் பாதிரியார் தம் ஜாகையை அடைந்தபோது டெலிபோன் குமாஸ்தா அவருக்காக ஒரு குறிப்பு வைத்திருந்தார்.

பிராங்க்... மொழி ஆராய்ச்சிக் கழகத்திலிருந்து...

கராஸ் டெலிபோனை எடுத்து அவரைக் கூப்பிட்டார். முதலில் ஒரு சிறுவன் எடுத்தான். அவர் தம் பெயரைச் சொல்லிய பிறகு பிராங்க் வந்து பேசினார்.

''என்ன, ஏதாவது தெரிந்ததா?'' என்றார் கராஸ்.

''இரண்டு குரலும் ஒரே ஆளா, வேறு வேறு ஆளா என்று பார்க்கச் சொல்லியிருந்தீர்கள் அல்லவா?''

''ஆமாம், பார்த்தீர்களா?''

''ரொம்பத் திட்டவட்டமாய்ச் சொல்ல முடியாது. ஆனால் பெரும்பாலும் நிச்சயம்தான் - இரண்டும் வெவ்வேறு நபர்கள்.''

''ஓகோ.'' சற்று மௌனமாயிருந்த பின் கேட்டார், ''சரி, இன்னதென்று விளங்காத அந்த உளறல்கள்? அது என்னவென்று பார்த்தீர்களா?''

பிராங்க் லேசாகச் சிரிப்பது கேட்டது.

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று பாதிரியார் கேட்டார்.

''அது மனத் தத்துவ கேஸா, சிறுபிள்ளைகள் விளையாட்டு என்று தெரியவில்லை!''

''பிராங்க், புரியும்படி சொல்லுங்கள். அந்த உளறல்கள் பிதற்றலா அல்லது ஏதாவது மொழியா?''

''ஒரு மொழிதான். நிச்சயமாய் மொழிதான்.''

''என்ன மொழி?''

''இங்கிலீஷ்.''

கராஸ் பாதிரியார் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''என்ன மொழி என்றீர்கள்?''

''இங்கிலீஷ்.''

ஒரு நிமிடம் கராஸ் பாதிரியார் ஊமையாக உட்கார்ந்திருந்தார்.

''சரி, உங்களிடம் ரெக்கார்டர் இருக்கிறது இல்லையா?'' என்றார் பிராங்க்.

''இருக்கிறது.''

''அதில் டேப்பை ரிவர்ஸ் - தலைகீழாக - ஓட்டிப் பார்க்க வசதி இருக்கிறதா?''

''முடியும்.''

''அப்படிப் போட்டுப் பாருங்கள், புரியும்.''

''என்னது தலைகீழாக போட்டுப் பார்ப்பதா?'' திகைத்தார் கராஸ் பாதிரியார்.

மொழி ஆராய்ச்சிக் கழக டைரக்டர் சிரித்தார். ''ஆமாம் ஃபாதர், போட்டுப் பாருங்கள். குட் நைட், நாளைக்கு நான் மறுபடி பேசுகிறேன்.''

''குட் நைட்.'' கராஸ் போனைத் திரும்ப வைத்தார். அவர் உள்ளத்தில் குழப்பம் கூத்தாடியது. ரெஜினாவின் உளறல்கள் அடங்கிய டேப்பைத் தேடிப் பிடித்தார். ரெகார்டரில் பொருத்தினார். முதலில் அதை நேராகவே போட்டுப் பார்த்தார். கவனித்துக் கேட்டார். ஒரு சந்தேகமும் இல்லை. வெறும் உளறல் வார்த்தைகள்தான்.

கடைசிவரை அதை ஓடவிட்டார். பிறகு அதை ரிவர்ஸில் ஓடும்படி செய்தார். ரெஜினாவின் - அல்லது யாரோ ஒருவரின் குரல் - இங்கிலீஷ் மொழியில் கேட்டது!

எப்படித்தான் அவளால் வார்த்தைகளைத் தலைகீழாகப் பேச முடிகிறது! பிரமித்தார் அவர்.

கடைசி வரை முழுதும் கேட்டார். பிறகு திருப்பிச் சுற்றிய பின் மறுபடியும் ரிவர்ஸிலேயே போட்டுக் கேட்டார். பிறகு மீண்டும் அதே போல் கேட்டார். சொற்கள் மட்டுமின்றி வாக்கியங்களும் தலைகீழாக அமைந்திருக்கின்றன என்பதை உணர்ந்து கொண்டார்.

பென்ஸிலும், காகிதமும் எடுத்து வைத்துக் கொண்டு மேஜையடியில் உட்கார்ந்தார். டேப்பை ஓடவிட்டார். வார்த்தைகளைக் குறித்துக் கொண்டு வந்தார். ஓடவிடுவதும், நிறுத்துவதும், குறித்துக் கொள்வதுமாக இருந்தார்.

முழுதும் முடிந்தது.

இப்போது சொற்கள் நேராக இருந்தன. ஆனால் வாக்கியங்கள் தலைகீழாக இருந்தன.

இன்னொரு காகிதம் எடுத்து வைத்துக் கொண்டார். அந்தச் சொற்களைக் கொண்டு நேரான வாக்கியங்களை

எழுதலானார். என்ன சொல் என்று புரியாத சில இடங்களில் அப்படியே விட்டு விட்டு மற்றதை எழுதினார். படித்துப் பார்த்தார்:

> *...ஆபத்து. அதற்குள் இல்லை. (புரியவில்லை.) மரணம் நேரும். கொஞ்ச காலத்தில். இப்போது (புரியவில்லை). அவள் சாகட்டும். வேண்டாம், வேண்டாம். ஸ்வீட்! உடம்பில் ஸ்வீட்டாக இருக்கிறது. நான் உணர்கிறேன். அது (புரியவில்லை.) சூனியத்தைக் காட்டிலும் மேலான மேலான (புரியவில்லை.) பாதிரியாரைக் கண்டு பயப்படுகிறேன். எங்களுக்கு அவகாசம் கொடு. பாதிரியாரிடம் பயம்! இந்தப் பாதிரியார் இல்லை. இந்த ஆள் இல்லை. அவன் (புரியவில்லை.) அந்த (புரியவில்லை) செய்தவன். அவன் உடம்பு சரியில்லாமல் இருக்கிறான். ரத்தம்! ரத்தத்தை உணர்ந்து பார். எப்படி இருக்கிறது?*

இந்த இடத்தில் கராஸ் பாதிரியார், *'யார் நீ?'* என்று நேராகக் கேட்டது பதிவாகியிருந்தது.

*'நான் யாருமில்லை. நான் யாருமில்லை,'* என்று அது தலைகீழாகப் பதிலளித்திருந்தது.

*'அதுதான் உன் பெயரா?'* என்று பாதிரியார் கேட்கிறார்.

> *'எனக்குப் பெயர் கிடையாது. நான் ஒருத்தனில்லை. பல பேர். நாங்கள் பாட்டுக்கு இருப்போம். உடம்பில் கதகதப்பாக இருப்போம். உடம்பிலிருந்து சூனியத்துக்குள் (புரியவில்லை) வேண்டாம். எங்களை விட்டு விட்டுப் போ. நாங்கள் பாட்டுக்கு இருக்கிறோம். கராஸ்...*

திரும்பத் திரும்பப் படித்தார் கராஸ் பாதிரியார். அந்தக் குரல்... பேசுவது ஒரு நபரல்ல, பல நபர்கள் என்ற உணர்வு - அவரைப் பிடித்தாட்டியது. கடைசியில் கேட்டுக் கேட்டு

அவருக்கே சலித்து விட்டது. எழுதியிருந்த காகிதங்களை ஒரு புறமாய் வைத்து விட்டு முகத்தைத் தேய்த்து விட்டுக் கொண்டார்; கண்களைத் தேய்த்து விட்டுக் கொண்டார்.

ரெஜினா பேசியது அன்னிய மொழி அல்ல என்றாகி விட்டது. இங்கிலீஷ். அதில் வார்த்தைகளைத் தலைகீழாக, வேகமாய் எழுதுவது அசாதாரணமல்ல; அசாத்தியமும் அல்ல. ஆனால் தலைகீழாகப் பேசுவதென்றால்! ஸ்பெல்லிங்கையும் உச்சரிப்பையும் தலைகீழாக மாற்றியமைத்துக் கொண்டு போவதென்றால்! ரொம்ப ரொம்பக் கூர்மையான புத்தி படைத்தவரால் கூட இயலாத காரியமாயிற்றே!

## 32

புத்தக அலமாரியிலுள்ள ஒரு புத்தகம் அவருக்கு நினைவு வந்தது. எழுந்து சென்று எடுத்தார் - மனத் தத்துவ நிபுணர் யங் எழுதிய புத்தகம்.

தன் நினைவில்லாமல் ஒருவர் புதிர் புதிராக எழுதிய வாக்கியங்கள் அதில் தரப்பட்டிருந்தன. கேள்விகளையும் பதில்களையும் படித்தார்.

ஊகூம். அதில் மனித சக்திக்கு அப்பாற்பட்டதாக எதுவும் தெரியவில்லை. மனத்தின் எல்லையற்ற திறமைகளைத்தான் காண முடிந்தது.

புத்தகத்தை வைத்து விட்டு, உட்கார்ந்து ஒரு சிகரெட் பற்ற வைத்துக் கொண்டார். 'நான் ஒருத்தனில்லை. பல பேர்.'' இந்தப் பேச்சு எங்கிருந்து வருகிறது?

புகையை வெளிவிட்டுக் கண்களை மூடிக் கொண்டார். இருமினார். தொண்டை உலர்ந்தது. எரிந்தது. புகையினால்

கண்கள் அரிக்க, சிகரெட்டை நசுக்கினார். களைத்துப் போனார். எலும்புகள் இரும்புக் குழாய்கள் போலிருப்பதாகத் தோன்றியது. எழுந்து வாசலுக்குச் சென்று, 'தயவு செய்து தொந்தரவு செய்யாதீர்கள்' என்ற அறிவிப்பை மாட்டிவிட்டுத் திரும்பினார். விளக்கை அணைத்து, ஜன்னல் கதவுகளை மூடிவிட்டு, மிதியடிகளை உதறியெறிந்த பின் படுக்கையில் தொம்மென்று விழுந்தார். ரெஜினா... ரெஜினாவுக்கு உதவி செய்ய வேண்டும். எப்படி? எப்படி? மிகவும் களைத்தவராகத் தூக்கத்தில் ஆழ்ந்தார்.

டெலிபோன் மணி அவரை எழுப்பியது. கிறிஸ்டியின் செயலாளர் ஷெரான்தான் கூப்பிட்டவள்.

''உடனே இங்கே வருகிறீர்களா?'' என்றாள்.

அவள் குரலில் பதற்றம் தென்பட்டது. இதோ வருகிறேன் என்று கூறி டெலிபோனை வைத்தார். ஏதோ பொறியில் அகப்பட்டுக் கொண்ட மாதிரியான உணர்வு அவரைப் பின்னிக் கொண்டது. மூச்சுத் திணற அழுத்தியது.

குளியலறைக்குச் சென்று முகத்தில் பச்சைத் தண்ணீரை அடித்துக் கொண்டார். துடைத்துக் கொண்டு புறப்பட்டார். வாசல் வரை வந்தவர் திரும்பிச் சென்று ஸ்வெட்டரை எடுத்து அணிந்து கொண்டார். தெருவில் இறங்கினார்.

மெல்லிய குளிர் காற்று வீசிக் கொண்டிருந்தது. இருட்டில் மூழ்கியிருந்தது தெரு. ரெஜினாவின் வீட்டுக்காக அவர் தெருவைக் குறுக்கே கடந்தபோது, குப்பைத் தொட்டியைக் கிளறிக் கொண்டிருந்த சில பூனைகள் பயந்து கொண்டு ஓட்டம் பிடித்தன.

ஷெரான் அவரை வாசலிலேயே வரவேற்றாள். அவளும் ஸ்வெட்டர் அணிந்து மேலே ஒரு போர்வை போர்த்துக் கொண்டிருந்தாள். பயந்து போனவள் போலிருந் தாள். முகத்தில் குழப்பம் பரவியிருந்தது. ''உங்களைக்

கூப்பிட்டதற்கு மன்னியுங்கள் ஃபாதர்,'' என்று கிசுகிசுக்கும் குரலில் சொன்னாள். அவர் உள்ளே நுழைகையில், ''அதை நீங்கள் பார்ப்பது நல்லது என்று தோன்றியது,'' என்றாள்.

''எதை?''

''காட்டுகிறேன். தயவு பண்ணிச் சத்தம் போடாமல் வாருங்கள். கிறிஸ்டியை எழுப்ப வேண்டாம். அவள் அதைப் பார்க்கக் கூடாது,'' என்று கூறியவள் தன் பின்னே வருமாறு பாதிரியாருக்குச் சாடை காட்டினாள்.

ரெஜினாவின் படுக்கையறைக்குச் செல்லும் மாடிப் படியில் அடிமேலடி வைத்து ஓசைப்படாமல் அவளைப் பின்பற்றினார். அறைக்குள் நுழையும் போது கராஸ் பாதிரியாரின் எலும்புகள் உறைந்தன. ஐஸ் கட்டி போல சில்லிட்டிருந்தது அறை. ஒன்றும் புரியாதவராக ஷெரானின் முகத்தைப் பார்த்தார்.

அவள் மனச் சுமையுடன் தலையை அசைத்து, ''ஆமாம்... அது வந்திருக்கிறது,'' என்று ரகசியக் குரலில் சொன்னாள். பின்னர் ரெஜினாவை நோக்கித் திரும்பினாள். உற்றுக் கவனித்தாள். விளக்கின் வெளிச்சத்தில், அவள் கண்ணின் வெள்ளைப் பரப்புப் பிசாசுத்தனமாகப் பளபளப்பதைக் கண்டாள். அவள் தன் நினைவற்றுக் கிடப்பதாகத் தோன்றியது. பெரும் சத்தத்துடன் மூச்சு வந்து கொண்டிருந்தது. அசைவே இல்லை. நாசியில் செருகியிருந்த ட்யூப் இடத்தை விட்டு நழுவாமல் இருந்தது. உணவு சிறிது சிறிதாக உடம்புக்குள் இறங்கிக் கொண்டிருந்தது.

ஷெரான் படுக்கையிடம் விரைந்து சென்றாள். அந்த அறையின் சில்லிப்பைத் தாள முடியாமல் இன்னும் தள்ளாடியவாறே இருந்தார். ரெஜினாவின் அருகே சென்றவர் அவள் நெற்றியில் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் நிறைந்திருப்பதைக் கண்டார். கீழ்ப் புறம் பார்வையை

செலுத்தினார். கட்டிப் போட்டிருக்கும் நாடாக்களை அவள் கைகள் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. ஷெரானைப் பார்த்தார்.

அவள் குனிந்து மென்மையாக ரெஜினாவின் சட்டையைப் பிடித்து மார்புப் புறத்தை இரண்டாகத் திறந்தாள். அந்த வற்றிப்போன மார்பைப் பார்த்தார். அவளுடைய ஆயுள் இன்னும் சில நாட்களோ வாரங்களோதான் என்று சொல்வது போல் துருத்திக் கொண்டிருக்கும் விலா எலும்புகளைப் பார்த்தார். சொல்லில் வடிக்க முடியாத ஒரு பரிதாபம் வெள்ளம் போல் அவரை அழுத்தியது.

ஷெரானின் பயந்துபோன கண்கள் அவர் மீதே நிலைத்திருந்தது. ''இப்போது போய்விட்டதோ என்னவோ தெரியவில்லை,'' என்று ரகசியக் குரலில் சொன்னாள். ''எதற்கும் பார்த்துக் கொண்டேயிருங்கள். அவள் மார்பைக் கண் கொட்டாமல் கவனித்துக் கொண்டேயிருங்கள்.''

அவள் குனிந்து ரெஜினாவையே பார்க்கலானாள். கராஸ் பாதிரியாருக்கு ஒரே புதிராயிருந்தது. அவளுடைய பார்வை நிலைத்திருக்கும் இடத்தையே தானும் பார்த்தபடி இருந்தார். நிசப்தம். கவனி, கவனி, கவனித்தபடி இரு... சில்லிப்பு.

திடீரென்று அவர் புருவங்கள் இறுக்கமாய் முடிச்சிட்டன. ரெஜினாவின் சருமத்தில் ஏதோ நிகழ்கிற மாதிரி அவருக்குத் தோன்றியதே காரணம்.

ஒரு மெல்லிய சிவப்புக்கோடு - கூராக, கச்சிதமாக, கையால் ஏதோ எழுதிய மாதிரி... இன்னும் அருகில் குனிந்து பார்த்தார்.

''வந்து கொண்டிருக்கிறது,'' என்றாள் ஷெரான் மிகக் கிசுகிசுப்பாக.

திடீரென்று கராஸ் பாதிரியாரின் கைகள் நடுங்கின. ஆனால் அந்த அறையிலிருந்த சில்லிப்பினால் அல்ல. ரெஜினாவின் மார்பின்மீது கண்ட அந்த அதிசயத்தினால்.

சருமத்தின்மீது, ரத்தச் சிகப்பான எழுத்துக்கள் புடைத்துக் கொண்டு நின்றன. தெளிவான கையெழுத்தில், இரண்டே இரண்டு சொற்கள்:

**என்னைக் காப்பாற்று**

''அது ரெஜினாவின் கையெழுத்து,'' என்று ரகசியக் குரலில் சொன்னாள் ஷெரான்.

**ம**றுநாள் காலை ஒன்பது மணி. பெரிய பிஷப்பைச் சந்தித்தார் கராஸ் பாதிரியார்.

அவர் சொன்னதனைத்தையும் மிகுந்த கவனத்துடன் கேட்டுக் கொண்ட பெரிய பிஷப், இறுதியில், ''அது நிச்சயம் பேய்தான் என்று உங்கள் மனத்துக்குச் சந்தேகமில்லாமல் தெரிகிறதா?'' என்றார்.

''நமது சர்ச் சட்டப்படி என்னென்னவெல்லாம் உறுதி செய்து கொள்ள வேண்டுமோ அதையெல்லாம் ஆழ்ந்து பரிசீலனை செய்துவிட்டேன்,'' என்றார் கராஸ். அவருடைய அறிவு அல்ல, இருதயம் தான் அவரை இப்போது இங்கே வரவழைத்திருந்தது. ஏதாவது செய்து அந்தக் குழந்தையைக் குணப்படுத்த மாட்டோமா என்ற ஏக்கமும் நம்பிக்கையும் அவரைப் பிடித்தாட்டின.

''பேயோட்டும் சடங்கை நீங்களே செய்யத் தயாரா?'' என்று கேட்டார் பிஷப்.

கும்மென்று ஒரு நிம்மதி பிறந்தது பாதிரியாரின் மனத்தில்.

''ஓ, எனக்கு இஷ்டம்தான்,'' என்று பதிலளித்தார்.

''இந்த மாதிரி விஷயங்களில் இதற்கு முன் நீங்கள் ஈடுபட்டதுண்டா?''

''ஊகூம். ஈடுபட்டதில்லை.''

''சரி, பார்க்கலாம். அனுபவமுள்ள ஒருவரிடம் இதை ஒப்படைப்பதுதான் மேல். ஆனால் அப்படிப்பட்டவர் கிடைப்பது கஷ்டம். வெளிநாட்டு மிஷன்களிலிருந்து திரும்பியவர்கள் யாராவது இருக்கிறார்களா என்று விசாரித்துப் பார்க்கிறேன்,'' என்றார் பிஷப்.

# 33

**க**ராஸ் புறப்பட்டுப் போனதும் தமது உதவியாளரைக் கூப்பிட்டார். ''பேயோட்டக்கூடியவர்கள் யாராவது இருக்கிறார்களா உங்களுக்குத் தெரிந்து? எனக்குத் தெரியவில்லை,'' என்றார்.

''மெர்ரின் வந்திருக்கிறார்.''

''மெர்ரினா? அவர் ஈராக்கில் அல்லவா இருந்ததாக ஞாபகம்? நினேவாவுக்குப் பக்கத்தில் புதைபொருள் ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தாரே? இல்லை?'

''ஆமாம், அந்த வேலை முடிந்துவிட்டது. மூன்று நாலு மாதத்துக்கு முன்பு திரும்பி வந்துவிட்டார்.''

''இப்போது என்ன செய்கிறார்? கல்லூரியில் பாடம் நடத்துகிறாரா?''

''இல்லை. புத்தகம் எழுதத் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறார்.''

''ஆனால்... அவருக்கு ரொம்ப வயதாகிவிடவில்லையோ? உடல்நிலை எப்படி இருக்கிறது?''

''நல்ல ஆரோக்கியமாய்த்தான் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் இந்த வயதில் கல்லறைகளைத் தோண்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பாரா?''

''உண்மைதான்.''

''அத்தோடு அவருக்கு அனுபவம் உண்டு,'' என்றார் உதவியாளர்.

''அப்படியா?''

''ஆமாம். பத்துப் பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பு அவர் ஆப்பிரிக்காவில் இருந்தபோது பல மாத காலம் அவர் பேயோட்டினாராம். அந்த அனுபவத்தில் கிட்டத்தட்ட அவர் உயிரே போய்விட்டது என்று சொன்னார்கள்.''

''அப்படியானால் இப்போது ஒப்புக்கொள்வாரோ மாட்டாரோ?'' என்றார் பெரிய பிஷப்.

''நாங்களெல்லாம் பழங்காலத்துப் பேர்வழிகள். சொன்னதைச் சொன்னபடி செய்வோம்,'' என்றார் உதவியாளர்.

''சரி, அவருக்குச் சொல்லியனுப்புங்கள்.''

அன்று மாலைப் பொழுது மெல்ல மெல்லத் தேய்ந்து கொண்டிருந்த வேளையில், மேரிலண்ட் உட்ஸ்டாக் பாதிரியார்கள் கல்லூரியில் ஓர் இளைஞன், கையில் ஒரு தந்தியுடன் தோட்டத்தில் சென்று கொண்டிருந்தான். ஒல்லியான, உயரமான, தலை நரைத்த ஜெசூயிட் பாதிரியாரொருவரை அவன் தேடிக் கொண்டிருந்தான். அவர் மலர்ச் செடிகள் நிறைந்த நடைபாதை வழியே சென்று கொண்டிருப்பது அவனுக்குத் தெரிந்தது. தந்தியை அவரிடம் சேர்ப்பித்தான். கிழவர் அவனுக்கு நன்றி சொன்னார். அவர் கண்கள் கருணை மிகுந்ததாக இருந்தன. அவர் திரும்பி நடந்தார், தன் சிந்தனையில் மீண்டும் ஆழ்ந்தவராக.

அவருடைய நெஞ்சம் கவர்ந்த அந்த இயற்கைச் சூழலில் தொடர்ந்து நடந்தார். நடுநடுவே ஒரு சிட்டுக் குருவி கீச்சிடுவதைக் கேட்டோ, பளபளப்பான ஒரு பட்டாம்பூச்சி ஒரு செடியின் கிளையில் படபடத்து உட்காருவதைக் கண்டோ சற்று நிற்பார். தந்தியின் உறையைத் திறந்து என்ன விஷயமென்று அவர் படிக்கவில்லை. அதில் என்ன இருக்கும் என்று அவருக்குத் தெரியும். முன்பே படித்திருந்தார். ஈராக்கில் புராதனக் கோயில்களின் புழுதியில் நின்றிருந்தபோதே இந்த வேளை வரப்போகிறதென்று அவருக்குத் தெரிந்தாகி விட்டது.

அவர் தயாராக இருந்தார். போய் வருகிறேன். போய் வருகிறேன் என்று ஒவ்வொன்றிடமும் அவர் தொடர்ந்து விடை பெற்றுக்கொண்டார்.

நிசப்தம் நிறைந்த, மெல்லிய இருட்டுப் பரவிய தமது அறையில் துப்பறியும் நிபுணர் கிண்டர்மான் உட்கார்ந் திருந்தார். மேஜை விளக்கைத் திருப்பி வைத்துக்கொண்டார். ஏராளமான போலீஸ் ஃபைல்களும் தஸ்தாவேஜிகளும், குறிப்புக் காகிதங்களும், ஆராய்ச்சிக்கூடத்தின் தகவல்களும் கிடந்தன. அந்தக் காகிதங்களையெல்லாம் ஒரு ரோஜாப் பூக்கொத்து வடிவத்தில் அமைத்து வைத்துக் கொண் டிருந்தார். அவருடைய மனப் போராட்டத்துக்கு அது அமைதி தருவது போலிருந்தது.

டைரக்டர் பர்க் டென்னிங்ஸின் மரணத்தைப்பற்றி வேலைக்காரன் கார்ல்மீது அவருக்குச் சந்தேகம் இருந்து வந்தது. அன்று இரவு தான் வெளியே போய் வந்ததைப் பற்றி அவன் பொய் சொன்னதால் அப்படிச் சந்தேகப்பட்டார். ஆனால் தன் பெண்ணைப் பார்த்து, அவளுடைய போதைச் செலவுகளுக்காகப் பணம் கொடுத்து வரத்தான் அவன் போனான் என்று பிற்பாடு அறிந்தார். அவள் இறந்து விட்டாள் என்றும் இனிமேல் அவளால் அவமானங்கள் கிடையா

தென்றும் கார்லின் மனைவி நினைத்திருக்கிறாள். அவளுக்கு மனக் கஷ்டம் ஏற்படக் கூடாதென்பதற்காக மகளை ரகசியமாகச் சந்தித்துவிட்டு வருகிறான் என்பது தெரிந்து விட்டது. அவன்மீது டென்னிங்ஸின் கொலைக் குற்றம் விழக்கூடும் என்று மிரட்டியதும் அவன் மகளே இதை ஒப்புக்கொண்டாள்.

சரி, கார்ல் குற்றவாளியல்ல என்றால் யார்தான் பின்னே?

மேஜைமீதுள்ள குறிப்புக்களை மீண்டுமொருமுறை பார்வையிட்டார் கிண்டர்மான். சில தகவல்கள் அவருக்குத் தெளிவாய்ப் புலப்பட்டன.

ஒன்று: ஹோலி ட்ரினிட்டி சர்ச்சில் செய்யப்பட்ட அசிங்க ஆபாசங்களுக்கும் டைரக்டர் டென்னிங்ஸின் மரணத்துக்கும் ஏதோ ஒருவகையில் தொடர்பு உண்டு. இரண்டிலும் பில்லிசூனியம் சம்பந்தப்பட்டிருக்கிறது. சர்ச்சில் ஆபாசப்படுத்தியவரே டென்னிங்ஸைக் கொலை செய்திருக்கக் கூடும்.

இரண்டு: பில்லி சூனிய விஷயங்களில் நிபுணரான ஒரு பாதிரியார் அடிக்கடி கிறிஸ்டியின் வீட்டுக்குப் போய் வந்து கொண்டிருக்கிறார்.

மூன்று: மதத்தை அவதூறு செய்யும் வாசகங்கள் அடங்கிய காகிதம் சர்ச்சில் கிடைத்தது. அதை டைப் செய்தவரின் கை ரேகைகளைப் பரிசீலனை செய்தபோது, மிகச் சின்னக் கைகளைக் கொண்ட ஒரு நபர் - குழந்தையாகக் கூட இருக்கலாம் - என்று தோன்றியது.

நாலு: ஒரு நாள் கிறிஸ்டியை விசாரிக்கச் சென்றபோது, காரியதரிசி ஷெரான் டைப்செய்து கொண்டிருந்தாள். அவள் கசக்கிக் குப்பைக் கூடையில் எறிந்த காகிதமொன்றைக் கிண்டர்மான் எடுத்து வந்திருந்தார். அதைப் பரிசீலனை செய்ததில், சர்ச்சில் அகப்பட்ட காகிதமும், ஷெரானின்

காகிதமும் ஒரே டைப்ரைட்டர் மெஷினில் அடிக்கப் பட்டவை என்று தெரிந்தது. ஆனால் ஒருவரே அடித்ததல்ல. ஷெரான் டைப் மேலோடு இருந்தது. சர்ச்சில் அகப்பட்டதோ அழுத்தமாக, சுத்தமாக, அசாதாரணமான பலசாலி யொருவனால் அடிக்கப்பட்டது போலிருந்தது.

# 34

**து**ப்பறியும் அதிகாரி கிண்டர்மான் ஒரு பெருமூச்சுடன் கண்களை மூடிக்கொண்டார். திரும்பத் திரும்ப ஒரே முடிவுக்குத்தான் அவர் வரவேண்டியிருந்தது. தலையை அசைத்துக்கொண்டார் அவநம்பிக்கையுடன். மேஜை மீதிருந்த குவியலில் ஒரு பத்திரிகை கிடந்தது. அட்டைப் படத்தில் கிறிஸ்டியும் அவள் மகள் ரெஜினாவும் காட்சி தந்தார்கள். ரெஜினாவைக் கூர்ந்து பார்த்தார்.

இனிமையான, பருக்கள் நிறைந்த முகம். குதிரை வால் பின்னலுக்கு ரிப்பன் கட்டியிருந்தது. சிரிக்கும் போது முன் வரிசையில் ஒரு பல் இல்லாதது தெரிந்தது.

எழுந்து சென்று ஜன்னலுக்கு வெளியே மூடியிருந்த இருட்டைப் பார்த்தவாறு நின்றார். படபடவென்று தூறத் தொடங்கியிருந்தது மழை.

கீழே சென்று காரை எடுத்துக்கொண்டு கிளம்பினார். கிறிஸ்டியின் வீடு இருக்கும் பகுதியில் நிறுத்தினார். மழை கொட்டிக் கொண்டிருந்தது. கால்மணி நேரத்துக்குமேல் உட்கார்ந்திருந்தார். ரெஜினாவின் அறை ஜன்னலைப் பார்த்தபடியே இருந்தார். இறங்கிச் சென்று கதவைத் தட்டி ரெஜினாவைப் பார்க்க வேண்டுமென்று கேட்கலாமா? புருவங்களைத் தேய்த்துவிட்டுக் கொண்டார்.

நிமிர்ந்து மீண்டும் கிறிஸ்டியின் வீட்டை நோக்கியபோது அங்கே ஒரு டாக்ஸி வந்து நிற்பது தெரிந்தது. வைப்பர்களை ஓடவிட்டு, கண்ணாடி வழியே பார்த்தார்.

டாக்ஸியிலிருந்து உயரமான ஒரு பாதிரியார் வெளியே இறங்கினார். கறுப்பு ரெயின்கோட் அணிந்து, ஒரு கசங்கிய பழைய கைப் பை வைத்திருந்தார். டாக்ஸிக்காரனுக்குக் கட்டணத்தைக் கொடுத்தனுப்பிய பின் கிறிஸ்டியின் வீட்டையே பார்த்த வண்ணம் அசைவற்று நின்றிருந்தார். டாக்ஸி புறப்பட்டுச் சென்றது.

கிண்டர்மான் சட்டெனத் தன் காரைக் கிளப்பி அந்த டாக்ஸியைப் பிடிப்பதற்காகப் பின்தொடர்ந்தார்.

ஏறத்தாழ அதே நேரத்தில், கிறிஸ்டியின் வீட்டுக்குள், கராஸ் பாதிரியாரும் கார்லும் ரெஜினாவின் கையை அழுந்தப் பிடித்துக் கொண்டிருக்க, காரியதரிசி ஷெரான் அவளுக்கு ஊசி மூலம் லிப்ரியம் இறக்கிக் கொண்டிருந்தாள். கடந்த இரண்டு மணி நேரத்தில் மொத்தம் நானூறு மில்லிக்ராம் லிப்ரியம் ரெஜினாவின் உடலுக்குள் இறங்கியிருந்தது. அது ரொம்பப் பயங்கரமான அளவு என்று கராஸுக்குத் தெரியும். ரெஜினாவுக்குள்ளிருந்த பேய் பல மணி நேரத்துக்கு ஓய்ந்து கிடந்த பின்னர் திடீரென்று வெறி பிடித்துத் தலை விரித்து ஆடவே அவளை அடக்கி வைக்க அவருக்கு வேறு வழி தெரியவில்லை.

களைப்பு மிகுதியினால் அடித்துப் போட்ட மாதிரி இருந்தார் கராஸ். அன்று காலை பெரிய பிஷப்பைப் பார்த்து விட்டுத் திரும்பியதும் நடந்ததைச் சொல்வதற்காகக் கிறிஸ்டியிடம் வந்தார் அவர். ரெஜினாவுக்கு நரம்புக் குழாய் மூலம் உணவு செலுத்த ஏற்பாடு செய்துவிட்டுத் தன் அறைக்குத் திரும்பிப் படுக்கையில் விழுந்தார்.

டெலிபோன் மணியடித்தது. இம்முறை பெரிய பிஷப்பின் அலுவலகத்திலிருந்து அவரைக் கூப்பிட்டார்கள். ரெஜினாவுக்குப் பேயோட்ட மெர்ரின் பாதிரியாரை நியமித்திருக்கிறார்களாம். கராஸ் அவருக்கு உதவியாளராக இருக்க வேண்டுமாம்.

அந்தச் செய்தி அவரைப் பிரமிக்க வைத்தது. மெர்ரின்! தத்துவ மேதையும் புராதனப் புவியியல் ஆராய்ச்சியாளருமான பெரும் அறிவாளி ஆயிற்றே அவர்! மதத்தையும் கடவுளையும் பற்றி விஞ்ஞானக் கண்ணோட்டத்தில் அவர் எழுதியுள்ள புத்தகங்கள் சர்ச் வட்டாரத்தில் மிகுந்த பரபரப்பு ஏற்படுத்தியிருக்கின்றன.

உடனே அந்தச் செய்தியைக் கிறிஸ்டிக்கு டெலிபோன் மூலம் தெரிவித்தார். ஆனால் அதற்கு முன்பே நேரே பிஷப்பின் அலுவலகத்திலிருந்து அவளுக்கும் செய்தி வந்திருந்தது. மறுநாள் அவள் வீட்டுக்கு மெர்ரின் வருவார் என்று சொன்னார்களாம். ''அவர் என் வீட்டிலேயே தங்கிக் கொள்ளலாம் என்றுசொன்னேன். ஒரு நாள் இரண்டு நாள்தான் பிடிக்கும். இல்லையா?'' என்று கிறிஸ்டி கேட்டாள்.

கராஸ் சிறிது தயங்கி, ''தெரியவில்லை,'' என்றார். பிறகு மீண்டும் சற்றுத் தயங்கிய பின், ''நீங்கள் ரொம்ப எதிர்பார்க்கக் கூடாது. கொஞ்சம் நாள் பிடிக்கக் கூடும்,'' என்றார்.

''எவ்வளவு நாள்?'' என்று அவள் கேட்டாள்.

''ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு விதமாக இருக்கும்,'' என்று மழுப்பிவிட்டார் அவர்.

பேயோட்டுவது என்றால் பெரும்பாலும் பல வாரங்களாகும் என்று அவருக்குத் தெரியும். பல மாதங்கள் கூட ஆவதுண்டு. கடைசியில் பலனில்லாமற் போவதும் உண்டு. ''சில நாள் அல்லது சில வாரங்கள் ஆகலாம்,'' என்றார்.

''இன்னும் எத்தனை நாள் அவள் உயிர் வாழ்வாள் ஃபாதர்!'' என்று கிறிஸ்டி புலம்பினாள்.

போனைத் திரும்ப வைத்த போது அவர் மனம் கனத்திருந்தது. சித்திரவதைக்குள்ளான மாதிரி படுக்கையில் புரண்டார். மெர்ரின் பாதிரியார்! ஆர்வமும் நம்பிக்கையும் உள்ளத்தில் உதித்த மாதிரி இருந்தது. ஆனால் உடனே தொடர்ந்து ஓர் உறுத்தலும் பிறந்தது: பேயோட்டுவதற்குத் தன்னை அல்லவா நியமித்திருக்க வேண்டும் பெரிய பிஷப்? ஆனால் தன்னைத் தள்ளிவிட்டு மெர்ரினை ஏன் நியமித்திருக்கிறார்கள்? இதற்கு முன் மெர்ரின் அனுபவம் உள்ளவர் என்பதாலா? கண்களை மூடியபடி யோசனை செய்து பார்த்தார். தெய்வபக்தி, நல்லொழுக்கம் முதலியன உள்ளவர்களிடம் மட்டுமே பேயோட்டும் வேலை ஒப்படைக்கப்படுவது வழக்கம் என்று கராஸுக்கு நினைவு வந்தது. அப்படியானால் தன்னைப் பற்றிப் பெரிய பிஷப்பிடம் யாரேனும் சொல்லியிருப்பார்களோ? அதனால்தான் தன்னை விட்டுவிட்டு மெர்ரினை நியமித்திருக்கிறார்களோ? அவருக்கு நெஞ்சு குறுகுறுத்தது.

படுக்கையில் புரண்டு புரண்டு படுத்திருந்தபோது சற்று முன்பு மீண்டும் ரெஜினாவின் வீட்டிலிருந்து அழைப்பு வந்தது. ரெஜினா வெறி பிடித்துக் கத்திக் கொண்டிருக்கிறாள் என்று கிறிஸ்டி சொன்னதன் பேரில் திரும்பவும் அங்கே சென்று லிப்ரியம் ஊசி போட்டார்.

''அயோக்கியன்! ராஸ்கல்! அப்பன் பேர் தெரியாதவன்!'' - கெட்ட வார்த்தைக்கு மேல் கெட்ட வார்த்தையாக ரெஜினா கொட்டிக் கொண்டிருந்தாள். அவளுக்குள்ளிருந்த பேய் உச்சக் குரலில் கத்திக் கொண்டிருந்தது. ஆனால் அங்குள்ள யாரையும் குறிப்பிட்டுப் பார்த்துக் கத்துகிற மாதிரி இல்லாமல், அங்கே இல்லாத,

கண்ணுக்குப் புலப்படாத யாரோ ஒருவரை நோக்கிக் கத்துகிற மாதிரி இருந்தது.

வெளியே யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. கிறிஸ்டி போய்த் திறந்தாள்.

''நான்தான் ஃபாதர் மெர்ரின்,'' என்று வந்தவர் கூறுவது கராஸுக்குக் கேட்டது.

# 35

''ஃபாதர் மெர்ரின்,'' என்று வந்தவர் சொன்னதும் கிறிஸ்டி பரபரப்படைந்தாள். ''வாருங்கள், வாருங்கள். அந்தப் பையை என்னிடம் கொடுங்கள். ரொம்பக் கனமாயிருக்கும் போலிருக்கே... நீங்கள் நாளைக்கு வருவீர்கள் என்று நினைத்திருந்தேன்...'' பேசியபடியே திகைப்புடன் அவர் முகத்தைப் பார்த்தாள். தமக்கு மட்டுமே தெரிந்த ஏதோவோர் உணர்வை, தமக்கு மட்டுமே பழக்கமான ஓர் அலையை அவர் அறிய முயலுவது போல் தோன்றியது. அன்னியமான காற்றுகளினாலும், இந்தக் காலத்துக்கும் இடத்துக்கும் சம்பந்தமில்லாத எங்கோ காய்கின்ற வெய்யிலினாலும் அவருடைய தேகம் அடிபட்டுச் சருகாயிருந்தது.

''பரவாயில்லை,'' என்றபடி அவர் உள்ளே வந்தார். எதையோ தேடுகிறவர்போல அவர் கண்கள் அலைந்தன. ''ஃபாதர் கராஸ் இங்கே இருக்கிறாரா?''

''ஆமாம், உள்ளே இருக்கிறார். ரொம்ப மழை. நீங்கள் வருவது தெரிந்திருந்தால் ஸ்டேஷனுக்கு வந்து சந்தித்திருப்பேன்,'' என்றாள் கிறிஸ்டி.

மாடியிலிருந்து கார்ல் வேகமாக இறங்கி வந்து, ''கொடுங்கள், நான் எடுத்து வருகிறேன்,'' என்று

அவரிடமிருந்து பையை வாங்கிக் கொண்டு ஹாலுக்குச் சென்றான்.

''உங்களுக்கு ஓர் அறை ஒழித்து வைத்திருக்கிறேன் ஃபாதர். வசதியாயும் தனியாயும் இருக்கும்,'' என்றாள் கிறிஸ்டி. ''அல்லது ஃபாதர் கராஸை முதலில் சந்திக்க விரும்புகிறீர்களா?''

''முதலில் உங்கள் பெண்ணைச் சந்திக்க விரும்புகிறேன்,'' என்றார் அவர்.

அவளுக்குத் திகைப்பு ஏற்பட்டது. ''இப்பவேயா ஃபாதர்?''

அவர் பார்வை மேலே சென்றது, தொலைவில் எதையோ காண்பது போல. ''ஆமாம். இப்போதே பார்த்து விடுவது நல்லதென்று நினைக்கிறேன்.''

திடீரென்று கிறிஸ்டி துள்ளினாள். மாடியிலிருந்து வந்த அந்தக் கூச்சல் - பேயின் கூச்சல் - பெரும் சத்தமாக, ஆனால் எதுவோ அமுக்குகிற மாதிரி - கிறீச்சென்று, ஆனால் பாதியிலேயே யாரோ புதைக்கிற மாதிரி...

''மெர்ர்ர்ர்ர்ரின்ன்ன்!''

அதைத் தொடர்ந்து, படுக்கையறைச் சுவரில் பிரம்மாண்டமாக மோதிக் கொள்ளும் ஓர் இடிச்சத்தம்.

''ஐயோ கடவுளே!'' கிறிஸ்டி தன் கைகளை மார்பின் மீது அணைத்துக் கொண்டாள். நிலைகுத்திப் போனவளாக மெர்ரினைப் பார்த்தாள். பாதிரியார் அசையவில்லை. அவர் பார்வை இன்னும் மாடியைப் பார்த்தபடியே இருந்தது. அமைதியாக இருந்தது. ஆச்சரியத்தின் ஒரு சிறு ரேகை கூட அவர் கண்களில் தெரியவில்லை. மாறாக, எதையோ அவர் அடையாளம் புரிந்துகொண்ட மாதிரி இருந்தது.

இன்னுமொரு அலறல் சுவர்களைக் குலுக்கியது:

''மெர்ர்ர்ர்ர்ரின்ன்ன்!''

பிரமித்து நிற்கும் கிறிஸ்டியை அவர் லட்சியம் செய்யவில்லை. அருகே வந்து நிற்கும் கார்லையும் கவனிக்கவில்லை. உள்ளேயிருந்து வரும் கராஸ் பாதிரியாரையும் பொருட்படுத்தவில்லை. மெல்ல அவர் பாட்டுக்கு முன்னே நடந்தார். மாடியிலிருந்து பயங்கரமான தடதடா சத்தமும் கிறீச்சிட்ட குரலும் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தன. மெர்ரின் பாதிரியார் அமைதியுடன் மாடிப் படியில் ஏறினார். அவருடைய மெலிந்த கை மாடிப்படியின் கைப்பிடிச் சுவரை மெல்லப் பிடித்தபடி மேலே நகர்ந்தன.

கராஸூம் கிறிஸ்டியும் கீழேயே நின்றிருந்தார்கள். மெர்ரின் பாதிரியார் ரெஜினாவின் அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொள்ளும் ஓசை அவர்களுக்குக் கேட்டது. சிறிது நேரம் நிசப்தம் நிலவியது. பின்னர் திடீரென்று பேயின் வெறிச் சிரிப்பு கேட்டது. மெர்ரின் வெளிப்பட்டார். கதவைச் சாத்திக் கொண்டு கீழே இறங்கி வந்தார். அவருக்குப் பின்னே ஷெரான் மீண்டும் கதவைத் திறந்து கொண்டு எட்டிப் பார்ப்பது தெரிந்தது. அவள் முகத்தில் ஒரு வினோதமான உணர்வு தென்பட்டது.

கராஸ் பாதிரியாருடன் கைகுலுக்கினார் மெர்ரின். கராஸின் கண்களை ஆழமாகத் துருவியது அவர் பார்வை. மேலேயிருந்து ஆபாசமான வசவுகள் கேட்டன. மெர்ரினைத் திட்டும் வசவுகள்.

''உங்களிடம் மழைக் கோட்டு இருக்கிறதா?'' மெர்ரின் பாதிரியார் கராஸைக் கேட்டார்.

''இல்லை. எதற்குக் கேட்கிறீர்கள்?''

''என்னுடையதை அணிந்து கொண்டு போங்கள்.'' தம் மழைக் கோட்டைக் கழற்றினார் மெர்ரின். ''இப்போதே

போய், எனக்காக ஒரு படுக்கை எடுத்து வாருங்கள். கூடவே, 'ரோமானியச் சடங்குகள்' என்ற புத்தகமும், சடங்கின்போது அணியும் அங்கிகளும் எடுத்து வாருங்கள்.'' கோட்டை அவரிடம் தந்தார். ''நான் இப்போதே ஆரம்பிக்க வேண்டும்.''

கராஸ் புருவங்களைச் சுழித்தார். ''இப்போதேயா?''

''ஆமாம்.''

''முதலில் இந்தக் கேஸைப் பற்றிய விவரங்களை யெல்லாம் நீங்கள் கேட்டுக் கொள்ள வேண்டாமா?''

''எதற்காக?''

கராஸ் பாதிரியாரால் இதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. புறப்பட்டார். வேலைக்காரன் கார்ல் அவருக்காகக் கதவைத் திறந்துவிட்டபோது இருவர் பார்வை யும் ஒரு வினாடி சந்தித்துக் கொண்டன. மழையிருட்டில் கராஸ் பாதிரியார் வெளியே இறங்கி நடந்தார்.

கிறிஸ்டியின் பக்கம் திரும்பி மெர்ரின், ''உடனே ஆரம்பிப்பதில் உங்களுக்கு ஆட்சேபம் இல்லையே?'' என்றார்.

''எனக்குச் சந்தோஷம்தான் ஃபாதர்,'' என்றாள் நன்றியுடன். ''ஆனால் நீங்கள் களைத்துப் போயிருப்பீர்களே? ஒரு கப் காப்பி சாப்பிடுங்களேன். அல்லது பிராந்தி...''

''காப்பி கொடுங்கள், போதும். பிராந்தி வேண்டா மென்று டாக்டர்கள் சொல்லியிருக்கிறார்கள். உங்கள் பெயர் ரொம்ப அழகாயிருக்கிறது. கிறிஸ்டி. அது சினமாவுக்காக வைத்துக் கொண்ட பெயரா?''

''இல்லை ஃபாதர். அசல் பெயர்தான்,'' என்று புன்னகை செய்தாள் அவள். அவருடன் பேசப் பேசத் தன் உள்ளத்தில் படபடப்பு குறைவதை உணர்ந்தாள். அவரை அவள்

அழைத்துச் சென்றபோது, அவளுக்குத் தைரியமூட்டும் வகையில் அவள் தோளை அழுத்தினார் மெர்ரின். தன்னுள் ஒரு சக்தியும் கதகதப்பும் பாய்வது போல் உணர்ந்தாள் அவள். சாந்தி - ஆம், சாந்தி பிறந்தது அவள் மனத்தில். ஏதோ ஒரு வகை பாதுகாப்பு உணர்வு ஏற்பட்டது.

அவள் சமையலறைக்குச் சென்ற போது அடுப்பினருகே ஷெரான் நின்றிருந்தாள். ''நீ கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளேன்,'' என்று கிறிஸ்டி சொன்னது அவள் காதில் விழுந்த மாதிரி தெரியவில்லை. இரண்டாம் தடவை உரக்கச் சொன்ன பிறகுதான், ''என்ன... என்ன கேட்டீர்கள்?'' என்றாள்.

அவள் முகத்தில் இறுக்கம் தெரிந்தது. ''ஷெரான், அங்கே என்ன நடந்தது?'' என்று கிறிஸ்டி கேட்டாள்.

''எங்கே?''

''மாடியில் - மெர்ரின் பாதிரியார் வந்தபோது...''

''ஓ, அதுவா...'' ஷெரானின் கண்கள் அலைபாய்ந்தன. ''விசித்திரம்...''

''விசித்திரமா?''

''ஆமாம்... இருவரும் கொஞ்ச நேரம் ஒருவரையொருவர் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ரெஜினா - அவளுக்குள்ளிருந்த அது சொல்லியது...''

''என்ன சொல்லியது?''

''வந்து... 'இந்தத் தடவை நீதான் தோற்கப் போகிறாய்' என்று மெர்ரினிடம் சொல்லியது,'' என்றாள் ஷெரான்.

# 36

'இந்த முறை நீதான் தோற்கப் போகிறாய்' என்று மெர்ரின் பாதிரியாரிடம் போய் சொன்னதாக ஷெரான் தெரிவித்ததும் கிறிஸ்டி நிலைகுலைந்து போனாள். சற்று மௌனமாயிருந்தவள், "அப்புறம்?" என்று கேட்டாள்.

"அவ்வளவுதான்," என்றாள் ஷெரான். "மெர்ரின் பேசாமல் திரும்பிப் போய்விட்டார்."

கிறிஸ்டி மாடியை நோக்கிப் பார்வையைச் செலுத்தினாள். பேயின் ஆர்ப்பாட்டச் சத்தங்கள் திடீரென்று நின்றிருந்தன. இருந்தாலும் ஏதோ ஒன்று அங்கே வளர்ந்து விசுவரூபம் எடுத்துக் கொண்டிருப்பதுபோல தோன்றியது.

மெர்ரின் கேட்ட பொருள்களை ஒரு பெட்டியில் வைத்து எடுத்துக்கொண்டு கராஸ் அவருடைய அறைக்குள் நுழைந்தார். மெர்ரின் படுக்கைக்கு அருகில் மண்டியிட்டு நெற்றியைக் கைகளில் தாங்கிக் குனிந்த நிலையில் பிரார்த்தனையில் ஈடுபட்டிருப்பது தெரிந்தது. சற்றைக்கெல்லாம் அவர் எழுந்து வந்து கராஸ் கொண்டு வந்தவற்றைப் பெற்றுக்கொண்டார். "அந்த அறையில் திடீரென்று சில்லிப்பு ஏற்படுவது உண்டு. அதற்காக ஒரு ஸ்வெட்டரும் கொண்டு வந்தேன்," என்றார் கராஸ்.

"நன்றி," என்று கூறி அதை அணிந்து கொண்டார் மெர்ரின். "பேயோட்டும் சடங்குகளைப் பற்றி உங்களுக்குத் தெரியுமென்று நினைக்கிறேன். முக்கியமாக, பேயுடன் எவ்வித சம்பாஷணையும் வைத்துக்கொள்ளக் கூடாது."

'பேய்' என்ற சொல்லை அவர் வெகு எதார்த்தமாக, சாதாரணமாகப் பயன்படுத்தியது கராஸுக்குத் திகைப்பு ஏற்படுத்தியது.

சடங்குக்கான ஆடைகளை அணிந்துகொண்டார் மெர்ரின். ''பேய் ஒரு பெரும் பொய்யன். அது சொல்லும் எதையும் காது கொடுத்துக் கேட்கக் கூடாது. நம்மைக் குழப்புவதற்காகப் பொய் சொல்லும். நிஜத்தையும் நடுநடுவே கலந்து பேசும். மனத்தத்துவ முறையில் அது வலுவான தாக்கும் நடத்தும். காது கொடுக்க வேண்டாம். ஞாபகம் இருக்கட்டும்.''

கராஸ் தலையசைத்தார்.

''புனித நீர் கொண்டு வந்திருக்கிறீர்களல்லவா?''

'இதோ' என்று குப்பியைக் கொடுத்தார் கராஸ். இருவரும் ரெஜினாவின் அறையை நோக்கி நடந்தனர். அறைக்குள் நுழையும் சமயம் கிறிஸ்டியும் வந்தாள்.

''நீங்கள் வராதிருப்பது நல்லது,'' என்றார் கராஸ். கிறிஸ்டி மெர்ரினைப் பார்த்தாள். ''தெரிந்துதான் சொல்கிறார் கராஸ்,'' என்று அவர் கூறியதும் அவள் நின்றுவிட்டாள்.

கராஸ் கதவைத் திறந்தார். திறந்த கணமே அந்த நாற்றத்தின் நெடியும் பனிக் கட்டியின் சில்லிப்பும் அவர்களைத் தாக்கின. வேலைக்காரன் கார்ல் அறையின் மூலையில் கைகால்களைச் சுருட்டிக்கொண்டு முடங்கி யிருந்தான்.

படுக்கையை நெருங்கினார்கள். ரெஜினா வெடித்துக் கிடந்த உதடுகளைக் கறுத்துப்போன நாக்கினால் தடவிக் கொண்டாள். சருகுகளைக் கையால் தடவுவதுபோல் சத்தம் கேட்டது. ''வாடா அழுகல்! கடைசியில் வந்துவிட்டாயா!''

மெர்ரின் கையை உயர்த்திப் படுக்கையின் மீதாகச் சிலுவைக் குறியிட்டார். அறையிலுள்ள மற்றவர்களுக்கும் செய்தார். புனித நீர்க் குப்பியின் மூடியை வெடுக்கெனக் கழற்றினார்.

''ஓ! புனித மூத்திரம் கொண்டு வந்திருக்கிறாயா?'' என்று பேய் கத்தியது. ''பூஜ்யர்களின் வீரியமா!''

மெர்ரின் குப்பியைத் தூக்கியதும் அதன் முகம் எட்டுக் கோணலாயிற்று. ''ஓ! அவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டாயா? அப்பன் பேர் தெரியாத கழிசடை!''

மெர்ரின் நீரைத் தெளிக்கலானார். அது தன் முகத்தைச் சரேலென்று உயர்த்தியது. அதன் வாயும் கழுத்து நரம்புகளும் புடைத்து நின்றன, சீற்றத்தால். ''தெளிக்கப் போகிறாயா, தெளி, தெளிடா மெர்ரின்! உன் வியர்வையால் என்னை முழுகடி! நீதான் பூஜ்யர் மெர்ரின் ஆயிற்றே! உன் வேர்வைகூடப் புனிதமானது-''

''பேசாமலிரு!'' மெர்ரினிடமிருந்து வெகு திடமாகப் பாய்ந்து வந்தது அந்தக் கட்டளை. கராஸ் சிலிர்த்துப் போனவராக முகத்தைத் திருப்பி அவரை நோக்கினார். மெர்ரின் அதிகார தோரணையுடன் ரெஜினாவை நெருங்குவது தெரிந்தது. இப்போது பேய் சற்று அடங்கியிருந்தது. அதன் கண்களில் தயக்கம் தெரிந்தது. கொட்டக் கொட்ட விழித்தபடி அலைந்தது.

புனித நீர்க் குப்பியைக் கராஸிடம் தந்துவிட்டு ரெஜினாவின் படுக்கையருகே மண்டியிட்டார் மெர்ரின். கண்களை மூடிக்கொண்டு பிரார்த்தனை செய்யலானார்.

''எங்கள் பிதாவே...'' என்று அவர் ஆரம்பித்த வுடனேயே ரெஜினா காறித் துப்பினாள். எச்சில் மெர்ரின் முகத்திலே தாக்கியது. மஞ்சள் நிறக் கொப்புளமாக அவர் கன்னத்தில் மெல்ல வழிந்தது.

''உம்முடைய ராஜ்யம் வருவதாக...'' மெர்ரின் தலையைத் தாழ்த்தியபடியே பிரார்த்தனையைச் சிறிதும் நிறுத்தாமல் தொடர்ந்தார். அவர் கை நிதானமாகப் பையிலிருந்த கைக் குட்டையை எடுத்து முகத்தில் வழிந்த

எச்சிலைத் துடைத்துக் கொண்டது. ''எங்களை சோதனைக்கு உட்படுத்தாதேயும்,'' என்றார் மெதுவாக.

''ஆயின் எங்களைத் தீமையினின்று ரட்சியும்,'' என்று கராஸ் பதிலுக்குக் கூறினார். ரெஜினாவின் கண்கள் சுழன்று கொண்டிருந்தன.

''எங்கள் கர்த்தராகிய ஏசு கிறிஸ்துவின் பிதாவாகிய தேவனே, இந்த வேதனைப்படுத்தும் அசுத்த ஆவிக்கு விரோதமாக உம்முடைய பரிசுத்த நாமத்தின் நிமித்தம் எனக்கு உதவி அருளும்படி வேண்டுகிறேன்...''

''ஆமென்...'' என்றார் கராஸ்.

அடுத்த வரிகளை மெர்ரின் சொல்லிக் கொண் டிருந்தபோது, பின்னால் வந்து நின்ற ஷெரான் ஒரு ஆச்சரியப் பெருமூச்சு வெளியிடுவது கராஸுக்குக் கேட்டது. திரும்பி நோக்கினார். அவள் ரெஜினாவின் படுக்கையை அதிர்ச்சிப் பார்வையுடன் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டார். என்னவென்று புரியாதவராகப் படுக்கையைப் பார்த்தார். அவர் மேனி சிலிர்த்தது.

கட்டிலின் முன் கால்கள் தரையிலிருந்து மெல்ல மெல்ல எழும்பிக் கொண்டிருந்தது!

கண்களை நம்ப முடியாதவராகக் கவனித்தார். நாலு அங்குல உயரம் - பிறகு அரையடி - பின்னர் கட்டிலின் பின் கால்களும் எழும்பத் தொடங்கின.

கராஸ் கண் கொட்டாமல் பார்த்த வண்ணம் இருந்தார். படுக்கை ஓரடி உயரம் எழும்பியது. மெல்ல ஆடியது, ஏரியில் மிதக்கிற மாதிரி.

ஷெரான் வெளியே ஓடினாள். மெர்ரின் மிருதுவான குரலில், ''பகைவர்களின் எந்தச் சக்தியும் இந்தக் குழந்தையின் மீது செல்லாதிருப்பதாக,'' என்றார். கிறிஸ்டி உள்ளே வந்தாள்.

எதையும் நம்ப முடியாதவளாக அறைவாயிலில் நின்று 'ஐயோ கடவுளே!' என்று பெருமூச்சு விட்டாள்.

மெர்ரின் பாதிரியார் 'ரோமானியச் சடங்குகள்' என்ற புத்தகத்திலிருந்து தொடர்ந்து படித்தபடி ரெஜினாவின் புருவங்களின்மீது நிதானமாக மூன்று முறை சிலுவைக் குறியிட்டார். ரெஜினாவின் தொண்டையிலிருந்து மிருகத்தின் ஓசைபோல ஒன்று வெளிப்பட்டு வரவரப் பெரிதாயிற்று.

''சகல சிருஷ்டிகளின் பிதாவாகிய தேவனே!'' மெர்ரின் பிரார்த்தனை செய்தவண்ணமே தன் சால்வையின் ஒரு நுனியை எடுத்து ரெஜினாவின் கழுத்தில் போர்த்தினார். ''உம்முடைய மகத்துவமான வல்லமையால் மின்னலைப் போலப் பரலோகத்திலிருந்து வீழ்த்தப்பட்ட சாத்தான் இனியும் உம்முடைய திராட்சைத் தோட்டத்தை நாசமாக்காத படி அருளும்...''

ரெஜினாவின் ஊளைகள் நின்று விட்டன. ஆழ்ந்த நிசப்தம். பின்னர் கெட்டியான, பச்சை நிறமான வாந்தி ரெஜினாவின் வாயிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக வெளிப்பட்டு மெர்ரினின் கைகளில் விழுந்தது. ஆனால் அவர் அசையவில்லை. ''உம்முடைய சக்தி வாய்ந்த கரங்கள் ரெஜினா தெரஸா மெக்னீலைப் பிடித்திருக்கும் இந்தக் குரூரமான பேயை விரட்டி வெளியேற்றுவதாக...'' படுக்கை இப்படியும் அப்படியும் அசைந்தது. ஆனால், ரெஜினாவின் கழுத்தில் போர்த்தியுள்ள சால்வையை விடாமல் பற்றியபடியே இருந்தார் மெர்ரின். கட்டில் ஆடியபடியே கீழே இறங்கியது. தட்டென்ற ஓசையுடன் தரை விரிப்பின் மீது இறங்கியது. கராஸ் மெர்ரினைப் பார்த்தார். அவருடைய கைகளே தெரியாமல் வாந்தி மூடியிருந்தது. மெர்ரின் அந்தச் சால்வையை அகற்றினார். ஓரடி பின்னால் நகர்ந்தார்.

# 37

மெர்ரினின் இடிக் குரல் அந்த அறையின் சுவர்களைக் குலுக்கியது. ''அசுத்தமான பிறவியே! உன்னை வெளியேற்று கிறேன்! உன் சைத்தான் கூட்டத்தை வெளியேற்றுகிறேன்! உன் நரக ஆயுதங்களையும் வெளியேற்றுகிறேன்!'' அவருடைய தொங்கிய கைகளிலிருந்து வாந்தி சொட்டு சொட்டாக விரிப்பின்மீது விழுந்து கொண்டிருந்தது. ''முன்னொரு காலத்தில் காற்றையும் கடலையும் புயலையும் அடக்கியவர் எவரோ அந்தக் கிறிஸ்து உனக்கு ஆணையிடுகிறார்... வானுலகத்திலிருந்து எவர் உன்னைத் தலைகீழாகப் பிடித்துத் தள்ளினாரோ அவர் உனக்கு ஆணையிடுகிறார்...'' என்று மெர்ரின் சொல்லிக் கொண்டிருக்கையில் ரெஜினாவின் வாந்தி நின்று விட்டது. அவள் நெஞ்சைத் தொட்டுப் பார்த்தார் பாதிரியார். வெகு வேகமாக அடித்துக் கொண்டிருந்தது. அவள் முகத்தைக் கவனித்தார். சலனமற்றிருந்தது. திடீரென்று அவருடைய மயிர்க் கால்கள் குத்திட்டு நின்றன. காரணம், ரெஜினாவின் தலை பயங்கரமாகச் சுழல ஆரம்பித்தது. ஏதோவொரு துருப்பிடித்த யந்திரம் சுழலுகிற மாதிரி ஓசை கேட்டது.

மெர்ரின் தொடர்ந்தார். ''ஆகவே சைத்தானே, நீ அச்சத்தினால் குலை நடுங்குவாய்.''

தலை மெல்ல மெர்ரினை நோக்கித் திரும்பியது.

''நீதியை அழிப்பவனே! மரணத்தை வரவழைப்பவனே! தேசங்களுக்குத் துரோகம் செய்பவனே! வாழ்வைச் சூறையாடுபவனே...''

கராஸ் அச்சத்துடன் சுற்று முற்றும் பார்த்தார். அறையிலிருந்த விளக்குகள் மங்கி, அணைந்து, கடைசியில் ஒரு மெல்லிய வெளிச்சமாக நின்றது. அவருக்கு உடம்பு நடுங்கியது. அறையில் சில்லிப்பு அதிகரித்தது.

''புறப்பட்டுப் போ, கொடிய விலங்கே! தனிமைதான் உன் இருப்பிடம்! நச்சுப் பாம்புகளின் புற்றுத்தான் உனக்குக் குடியிருப்பு! போ! அவைகளுடன் போய்க் குடியிரு. கர்த்தரே உனக்குக் கட்டளையிடுகிறார்.''

அறையில் தடதடா சத்தம் கேட்கத் தொடங்கியது. வரவரப் பெரிதாயிற்று. செவிடுபடுத்தும் ஓசையாக வளர்ந்ததால் ஷெரான் காதுகளைப் பொத்திக் கொண்டாள். ரெஜினாவின் நாடித் துடிப்பு பயங்கரமாக இருந்தது. மெர்ரின் படுக்கையின் குறுக்கே கையை நீட்டி, ரெஜினாவின் வாந்தி நிரம்பிய மார்பின் மீது சிலுவைக் குறியிட்டார். அவருடைய பிரார்த்தனை வார்த்தைகள் தடதடா சத்தத்தில் முழுகின.

பேய் கத்தியது:

''டேய் மெர்ரின்! அப்பன் பெயர் தெரியாத பயலே! நீ தோற்கப் போகிறாய். இவள் சாகப் போகிறாள். இந்தப் பன்றி சாகப் போகிறாள்!'' தூவென்று மெர்ரின் முகத்தில் துப்பியது அது. மலம் கழிக்கும் சத்தமும் கேட்டது.

எதையும் பொருட்படுத்தாதவராக மெர்ரின் தன் பிரார்த்தனைகளைத் தொடர்ந்தார்.

லூக்காவின் சுவிசேஷத்திலிருந்து படித்தார்:

''... என் பெயர் லேகியோன் என்றான். அநேகம் பிசாசுகள் அவனுக்குள் புகுந்திருந்த படியால் அந்தப் பேரைச் சொன்னான். தங்களைப் பாதாளத்திலே போகக் கட்டளையிடாதபடிக்கு அவைகள் இயேசுவை வேண்டிக் கொண்டன. அவ்விடத்தில் அநேகம் பன்றிகள் கூட்டமாய் மலையிலே மேய்ந்து கொண்டிருந்தன. அந்தப் பன்றிகளுக் குள் போகும்படி தங்களுக்கு உத்தரவு கொடுக்கும்படி அவரை வேண்டிக் கொண்டன. இயேசு அவைகளுக்கு உத்தரவு கொடுத்தார். அப்படியே பிசாசுகள் அந்த மனுஷனை விட்டு நீங்கி, பன்றிகளுக்குள் புகுந்தன. அப்பொழுது அந்தப் பன்றி

கூட்டம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலில் பாய்ந்து, அமிழ்ந்து, மாண்டது...''

வேலைக்காரி வில்லி - கார்லின் மனைவி - உள்ளே வந்தாள். பேய் அவளைப் பார்த்துச் சொல்லியது. ''உனக்குத் தெரியுமா வில்லி? உன் மகள் செத்து விட்டதாகக் கார்ல் பொய் சொல்லியிருக்கிறான். அவள் உயிரோடு இருக்கிறாள். கெட்டலைந்த கழிசடையாகத் திரிகிறாள்...''

''வில்லி! அதன் பேச்சைக் கேட்காதே!'' என்று கார்ல் கத்தினான்.

''வில்லி! அவள் விலாசத்தைச் சொல்லட்டுமா?'' என்றது பேய்.

''வா, வா. அதன் பேச்சைக் கேட்காதே!'' என்று கார்ல் அவளை வலுக்கட்டாயமாக வெளியேற்றி அழைத்துச் சென்றான். லிப்ரியம் ஊசி போட்டால் ரெஜினா அமைதியடைவாள் என்று கராஸ் பாதிரியாருக்குத் தோன்றியது. ஷெரானை அருகில் அழைத்தார். ''என்ன கராஸ், உனக்கு ஷெரான் வேண்டுமா? கூப்பிட்டால் வருவாள். உன்னை நினைத்து நினைத்து ராத்திரியெல்லாம் அவள் தூங்குவதில்லை!'' என்றது பேய். தன் மீதிருந்த வாந்தியிலிருந்து ஒரு கை அள்ளியெடுத்து அவள் மீது எறிந்தது.

ஷெரான் தலையைக் குனிந்து கொண்டு வெளியே சென்றாள். சற்றைக்கெல்லாம் கிறிஸ்டியே ஊசி மருந்துகளை எடுத்துக்கொண்டு வந்தாள். ''ஷெரான் உடைகளைச் சுத்தம் செய்து கொண்டிருக்கிறாள்... நானே...''

பேய் அவளை நோக்கிக் கூச்சலிட்டது. ''இதோ வந்து விட்டாளே கொலைகாரத் தேவடியாள்! என்னடி, உன்னால் தானே இத்தனையும்! ஆமாம், உன் நடிப்புத் தொழில்தான் முக்கியமென்று மகளை உதறினாய். கணவனை உதறி

விவாகரத்து செய்து கொண்டாய். உன் பெண்ணைப் பைத்தியமாக்கினது, கொலைகாரியாக்கினது நீதான். இந்தப் பாதிரியார்கள் உன்னைக் காப்பாற்றுவார்களென்றா நினைக்கிறாய்? ஒரு நாளுமில்லை. இவர்களால் முடியாது...''

கிறிஸ்டி சிலையாக நின்றாள். ''அதன் பேச்சைக் காது கொடுத்துக் கேட்காதே. நீங்கள் பாட்டுக்கு ஊசி போடுங்கள்,'' என்றார் கராஸ்.

கிறிஸ்டியின் கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன. ''என்னால் முடியாது ஃபாதர், முடியாது!''

அவள் கையிலிருந்து ஊசியைப் பறித்து, தானே ரெஜினாவின் உடலில் செலுத்தினார் கராஸ். கிறிஸ்டி வெளியேறிவிட்டாள்.

சற்றைக்கெல்லாம் முகத்தைக் கைகளால் பொத்திக் கொண்டு மெர்ரின் பாத்ரூமை நோக்கி வெளியே வேகமாகச் சென்றார். அவருக்கு என்னவாயிருக்கும் என்று கராஸுக்குத் தெரியவில்லை.

அவர் ரெஜினாவின் படுக்கையை மெதுவே நெருங்கினார். ரெஜினா தூங்கிக் கொண்டிருக்கிறாள். அப்பாடா! தூங்கிக்கொண்டிருக்கிறாள் - குனிந்து அவள் நாடியைப் பிடித்துப் பார்த்தார்.

திடீரெனப் பேய் பேசியது:

''என்னை ஏன் இப்படிச் செய்கிறாய், மகனே!''

அவர் இருதயம் உறைந்தது.

''என்னை ஏன் இப்படிப் பண்ணுகிறாய்!''

இறந்து போன தாயின் குரல்.

கராஸ் பாதிரியாரால் அசைய முடியவில்லை. மூச்சு விட முடியவில்லை. அந்தத் துயர் தோய்ந்த முகத்தை - சோகம்

படிந்த, குற்றம் சாட்டும் கண்களை - நிமிர்ந்து நோக்க அவருக்குத் தைரியம் வரவில்லை.

''நீ எப்பவுமே நல்ல பிள்ளையாச்சே, டிம்மி.'' பயந்து போனதாக - கண்ணீர் தோய்ந்ததாக - அந்தக் குரல் கெஞ்சி மன்றாடியது. ''ப்ளீஸ், என்னை வெளியே துரத்தாதே. எனக்குப் பயமாயிருக்கிறது, டிம்மி.''

என் அம்மாவா! கராஸ் மிடறு விழுங்கிக் கொண்டார்.

# 38

கராஸின் அன்னையின் குரலில் பேய் தொடர்ந்து கெஞ்சியது.

''வெளியே ஒரே இருட்டு, டிம்மி. என் கண்ணான பையனில்லையா நீ? என்னை இங்கிருந்து துரத்தாதே. நான் தனியாய் இருக்கணும். பயமாயிருக்கு. நீ டாக்டருக்குப் படித்துப் பிரமாதமாய் வந்திருந்தால் நான் எவ்வளவோ சௌகரியமாய் இருந்திருப்பேன். பாதிரியாய்ப் போய் விட்டாய்! கரப்பான் பூச்சிகள் நிறைந்த அந்தக் கண்ணராவி வீட்டில் ஒண்டியாய் எப்படித் தவித்தேன் தெரியுமா? என்னைத் துரத்தாதே டிம்மி.''

கராஸ் பாதிரியார் தன்னைப் பலவந்தமாக உசுப்பி விட்டுக் கொண்டார். ''இல்லை! நீ என் அம்மா இல்லை!''

இப்போது வேறொரு குரல் கேட்டது.

''கராஸ், என்ன நீங்கள் இப்படிப் பேசுகிறீர்கள்?''

இது, இறந்துபோன டைரக்டர் பர்க் டென்னிங்ஸின் குரல் என்று கராஸ் ஊகித்துக் கொண்டார்.

''இதோ பாருங்கள், என்னை நீங்கள் இங்கிருந்து விரட்டுவது நியாயமில்லை. இந்தப் பாவி ரெஜினாதான்

என்னைக் கொன்றவள். நான் பாட்டுக்குக் கீழே பானம் அருந்திக் கொண்டிருந்தேன். இவள் முனகுகிற சத்தம் கேட்டு மாடிக்கு வந்தேன். என் கழுத்தைப் பிடித்து இறுக்கினாள். அப்பப்பா! என்ன பலம்! என்னென்னமோ ஆபாசமாய்க் கத்தினாள். இவள் அம்மாவை நான்தான் கெடுத்தேனாம். அதனால்தான் விவாகரத்து ஏற்பட்டதாம்... கண்டபடி திட்டி என்னைக் கொலை பண்ணி இந்த ஜன்னல் வழியே வெளியே எறிந்தாள். நீங்களே யோசித்துப் பாருங்கள். என்னை என் உடம்பிலிருந்து விரட்டிய பிறகு நான் எங்கே போகட்டும்? இவள் உடம்பில் புகுந்து கொண்டேன். நீங்கள் என்னை விரட்டினால் எங்கே போவேன்?...''

''டிம்மி, கண்ணா...'' அம்மாவின் குரலில் கெஞ்சல்.

''கராஸ், யோசித்துப் பாருங்கள்.'' டைரக்டரின் குரலில் அதட்டல்.

பின்னர் யாரோ இனிமையான குரலில் பிரார்த்தனை கீதம் பாடுகிறமாதிரி கராஸுக்குக் கேட்டது. எங்கிருந்து அந்தக் குரல் வருகிறது என்று அவருக்குப் புரியவில்லை.

ஷெரான் உள்ளே வந்து அவரிடமிருந்து துவாலையை வாங்கிக் கொண்டாள். ''நான் சுத்தம் செய்து உடை மாற்றிவிட்டு, வாந்திக்கு மருந்து கொடுக்கிறேன். சற்று நேரம் நீங்கள் வெளியே போய் இருங்கள்,'' என்றாள்.

கராஸ் வெளியே வந்து நின்று கொண்டார். மெர்ரினும் அங்கே இருந்தார். ''அவளுக்குள் பல பேர் இருக்கிற மாதிரி இல்லை?'' என்றார் கராஸ்.

''இல்லை. ஒன்றே ஒன்று தான் இருக்கிறது - பேய். அது பல உருவங்களில், பல வகைகளில் தாக்குதல் நடத்துகிறது,'' என்றார் மெர்ரின்.

''ஆனால் அதன் நோக்கம் தான் என்ன?''

''யாருக்குத் தெரியும்?'' என்றார் மெர்ரின். ஒரு நிமிடம் யோசனையில் ஆழ்ந்தார். ''ஆனால் ஒன்று புரிகிறது. பேய் யாரைப் பிடித்திருக்கிறதோ அவர் அல்ல அதன் இலக்கு. நாம் - பார்வையாளராக இருக்கிறோமே, நாம் - இந்த வீட்டில் இருக்கிறவர்கள் - இவர்கள்தான் அதன் இலக்கு. நம்மை விரக்தியும் வெறுப்பும் அடையும்படி செய்ய வேண்டும். நம்மிடம் உள்ள மனிதத் தன்மையை நாமே விரட்டியடிக்க வேண்டும். நம்மை மிருகத்தன்மை கொண்டவர்களாக, இழிந்தவர்களாக, தெய்வ நம்பிக்கை அற்றவர்களாகச் செய்ய வேண்டும். அதுதான் பேயின் - சைத்தானின் நோக்கம்.''

அவர் சிறிது நிறுத்தினார். ரெஜினாவின் அறைக்குள்ளிருந்து பாட்டு இன்னும் கேட்டுக் கொண்டிருந்தது. தொடர்ந்தார். ''ஆனால் எந்தத் தீமையிலிருந்தும் ஒரு நன்மை பிறக்கும். ஏதோ ஒரு வழியில் - அது என்ன வழி என்று நமக்குப் புரியாதிருக்கலாம் - சைத்தான்கூடத் தெய்வத்தின் ஆணையை ஒரு வகையில் நிறைவேற்றும்...''

அவர்கள் ரெஜினாவின் அறைக்குள் சென்றார்கள்.

''அடேய் கராஸ்! இவள் இறக்கத்தான் போகிறாள். மெர்ரினுடைய கடவுள் இவளைக் காப்பாற்றமாட்டார். உன்னாலும் காப்பாற்ற முடியாது. இவளுக்கு லிப்ரியம் கொடுத்திருக்கிறாய் இல்லையா? கொடுத்திருக்கக் கூடாதுடா முட்டாள்!''

கராஸ் நிமிர்ந்து பார்த்தார். அதன் கண்கள் வெற்றியுடன் பளபளத்துக் கொண்டிருந்தன.

''இவளை நான் தூங்கவிடப் போவதில்லை. தூங்கவிட மாட்டேன்!''

''என்ன விஷயம்? என்ன?'' என்று மெர்ரின் விசாரித்தார்.

''ரெஜினாவைத் தூங்கவிடப் போவதில்லை என்று பேய் சொல்கிறது. லிப்ரியம் கொடுத்திருக்கிறேன். அவள் இருதயம் சரியாய் வேலை செய்யாமலிருக்கிறது. அவளுக்கு ஓய்வு கிடைத்தாக வேண்டும். இல்லாவிட்டால் இருதயம் களைப்படைந்து அவள் இறந்து போவாள்.''

''தூங்குவதற்கு ஏதாவது மருந்து கொடுங்களேன்,'' என்றார் மெர்ரின் கவலையுடன்.

கராஸ் தலையை அசைத்தார். ''கூடாது. அது ரொம்ப அபாயம். கோமாவில் போய் முடியும். ரத்த அழுத்தம் இதற்குமேல் கீழே இறங்கினால்...'' அவர் குரலில் கலவரம் தென்பட்டது. கீழே இறங்கினார். கிறிஸ்டியிடம் முழு விவரத்தையும் சொல்லாமல், ''இருதய சிகிச்சை ஸ்பெஷலிஸ்ட் ஒருவரைக் கூப்பிட வேண்டியிருக்கிறது,'' என்றார். அவளுடைய அனுமதியுடன் தமக்குத் தெரிந்த ஒரு நிபுணரை வரவழைத்தார்.

நிபுணர் ரெஜினாவின் அறைக்குள் சென்று அவளைப் பரிசோதனை செய்தார். வெளியே வந்தபோது அவர் போக்கு மிகவும் அமைதியாக இருந்தது. ''இந்தக் கூச்சல் கலாட்டாவெல்லாம் நின்றாக வேண்டும். ரத்த அழுத்தம் மேலும் இறங்குவதற்கு முன்னால் அவள் தூங்கியாக வேண்டும்...''

''அதற்கு நான் என்ன செய்ய முடியும் டாக்டர்?'' என்று கராஸ் பதைத்தார்.

ஸ்பெஷலிஸ்ட் அவரை நிமிர்ந்து பார்த்தார். ''பிரார்த்தனை செய்யுங்கள்,'' என்றார். போய்விட்டார்.

ரெஜினாவின் படுக்கையருகே மெர்ரின் மண்டியிட்டு, ''எங்கள் பிதாவே...'' என்று பிரார்த்தனை செய்யத் தொடங்கினார்.

ரெஜினாவிடமிருந்து பேய்ச் சிரிப்பு இரவைக் கிழித்துக்கொண்டு வெளிப்பட்டது. ''நீ தோற்கப் போகிறாய்! இவள் சாகப் போகிறாள்! சாகப் போகிறாள்...!''

கராஸின் இருதயத்தைச் சித்திரவதையான வேதனை அறுத்தது. 'தூங்கு! தயவு பண்ணித் தூங்கம்மா, தூங்கு' என்று அவர் உள்ளம் அலறியது.

ஆனால் ரெஜினா தூங்கவில்லை. பொழுது விடிந்த பின்னும் தூங்கவில்லை. பேயின் சிரிப்பும் கும்மாளமும் ஆர்ப்பாட்டமும் ஓய்வில்லாமல் தொடர்ந்தன. மெர்ரினும் கராஸ் பாதிரியாரும் இடைவிடாமல் பிரார்த்தனை நடத்திக் கொண்டிருந்தார்கள். யாரேனும் அந்த அறைக்குள் வந்தால் பேயின் கும்மாளம் அதிகரித்துவிடுகிறது என்பதற்காக ஒருவரும் வரவேண்டாமென்று தடுத்து விட்டார்கள்.

அடுத்த நாளும் ஓடியது.

''நீங்கள் போய்க் கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள் கராஸ்,'' என்றார் மெர்ரின். கராஸுக்குக் களைப்பினால் கண் பார்வை மங்கிக் கொண்டிருந்தது. கொஞ்ச நேரம் ஓய்வெடுத்துக் கொள்ளலாம் என்று தன் ஜாகைக்குச் சென்றார். அங்கே இருப்புக் கொள்ளவில்லை. திரும்பி வந்தார்.

சோபாவில் கிறிஸ்டி அமர்ந்து கொண்டு ஒரு புகைப்பட ஆல்பத்தைப் புரட்டிக் கொண்டிருந்தாள். குழந்தை ரெஜினாவின் படங்கள். கிறிஸ்டியின் கலங்கிய கண்களைச் சந்திக்க முடியவில்லை அவரால். மாடிக்குச் சென்றார்.

ரெஜினாவின் கூச்சல்கள் ஓயவில்லை. ஆனால் முகம் மறுபுறம் திரும்பியிருந்தது. அறையின் சில்லிப்பை உணர்ந்து ஒரு போர்வையை எடுக்கப் போனார். காலில் எதுவோ இடறியது.

# 39

அதிர்ச்சியுடன் பார்த்தார் கராஸ் பாதிரியார்.

மெர்ரின் தரையில் கை கால்களைப் பரத்திக் கொண்டு கிடந்தார். அவரைப் புரட்டிப் பார்த்ததில் முகத்தில் நீலம் படர்ந்திருந்தது. நாடியைப் பிடித்துப் பார்த்தார். சுரீலென்று அவர் உணர்வுக்குப் புரிந்தது - மெர்ரின் இறந்துவிட்டார் என்று.

ஹாஹ்ஹாஹா! என்று பேய் சிரித்துக் கொண்டிருந்தது.

'கடவுளே!' மெர்ரினின் கையைப் பிடித்துக்கொண்டு கண்ணீர் சிந்தினார் கராஸ். தரையெங்கும் சிதறிக் கிடக்கும் மாத்திரைகள் - நைட்ரோக்ளிசரின். 'நீங்கள் போய்க் கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்' என்று அவர் சொன்ன வார்த்தைகள் ஞாபகம் வந்தது.

பேய் கொக்கரித்துக் கொண்டிருந்தது. ஆபாசமான சொற்கள் அதனிடமிருந்து பீரிட்டுக் கொண்டு வந்தன. கேட்கக் கேட்கக் கராஸின் ரத்தம் கொதித்தது. கொலை வெறி அவர் உள்ளத்தில் பொங்கியது.

'பேயின் வார்த்தைகளைக் காது கொடுத்துக் கேட்காதே' என்று மெர்ரின் உச்சரித்தது அவருக்கு மறந்து போயிற்று. அவர் உடம்பு நடுங்கியது. வெறுப்பும் சினமும் மின்சாரம் போல் அவர் மேனியில் பரவின. உதடுகள் சீறிக்கொண்டு வெடித்தன. ''அப்பன் பெயர் தெரியாத பயலே!'' அவருடைய நரம்புகள் புடைத்தன.

பேய் சிரிப்பதை நிறுத்திக் கொண்டு அவரைக் குரோதத்துடன் பார்த்தது. ''நீ தோற்கப் போகிறாய். எப்போதும் தோல்வியடைகிறவன் நீ. - இப்போதும் தோல்வியடையப் போகிறாய்...''

இதற்கு ஒரு நிமிடம் கழித்து, கீழேயிருந்து கிறிஸ்டியும் ஷெரானும் அந்த ஓசைகளைக் கேட்டார்கள். கிறிஸ்டி அந்தப் புகைப்பட ஆல்பத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். ரெஜினாவின் புகைப்படங்கள் - பிறந்த நாள் விழாவில் மெழுகுவத்திகளை ஊதி அணைக்கிற மாதிரி, ஓர் ஏரிக்கரையில் உட்கார்ந்து கையை வீசி டாட்டா காட்டுகிற மாதிரி, டி ஷர்ட்டில் - இப்படிப் பல. ஒரு படத்தின் எதிரில் குழந்தைக் கையெழுத்தில் ஒரு பாட்டு -

உலகத்தின் அழகான
பொருள்களையெல்லாம்,
ஒரு வானவில்,
மேகங்கள், ஒரு பறவையின்
கீதம் இவைகளை
என்னால் திரட்டியெடுக்க
முடிந்தால் -
அருமை அம்மா!
உன்னைச் சிற்பமாக
வடிக்க முடியும்.

இந்த வரிகளின் கீழே, 'அம்மா, உனக்கு என் அன்பு' என்று எழுதி ரெஜினா கையெழுத்திட்டிருந்தாள். அதைப் பார்த்து, கண்ணீல் நீர் தளும்பக் கிறிஸ்டி உட்கார்ந்திருந்த போது, மாடியிலிருந்து அந்தச் சத்தங்கள் கேட்டன.

சந்தடிகள் உரக்கக் கேட்டன. பேயின் அசிங்கப் பேச்சுக்கள் - இல்லை, கராஸ் பாதிரியாரின் குரல் அது.

'இவர்களையெல்லாம் துன்புறுத்த உன்னை விட மாட்டேன்! விடமாட்டேன்! நீயும் என்னுடன் வருகிறாய்!'

- படீரென்று ஓர் ஓசை. கண்ணாடி உடைந்து விழும் சத்தம்.

பாய்ந்தார்கள் மாடிப்படியில் இருவரும். மடேலென அறைக்குள் நுழைந்தபோது -

மொர்ரின் கீழே இறந்து கிடப்பதைக் கண்டாள் கிறிஸ்டி. ஐயோ என்று அவள் வீரிட்ட அதே கணம், உடைந்து திறந்து கிடந்த ஜன்னல் வழியே ஷெரான் வெளியே எட்டிப் பார்த்து, ''ஃபாதர் கராஸ்! ஐயோ! ஃபாதர் கராஸைப் பாருங்களேன்!'' என்று கூவினாள்.

கீழே தெருவில் அலங்கோலமாகக் கிடந்தார் கராஸ் பாதிரியார், ரத்த வெள்ளத்தில். அவர் விழிகள் குத்திட்டு நின்றன. வாய் திறந்திருந்தது. அவரைச் சுற்றி ஒரு கும்பல் கூடுவதையும், ஓர் ஆம்புலன்ஸ் வண்டி வருவதையும், அதிலிருந்து இறங்கியவர்கள் கராஸைத் தொட்டுப் பார்த்துவிட்டு உதட்டைப் பிதுக்குவதையும் பார்த்தவாறு இதயமே உறைந்துவிட்டாற் போல அதிர்ச்சியுடன் நின்றிருந் தாள் கிறிஸ்டி. அவள் கை கால்கள் அசைய மறுத்தன.

'என்ன நேர்ந்தது? ...குடிபோதைபோலே இருக்கு... மேலேயெல்லாம் வாந்தி இருக்கிறதைப் பார்...' இப்படிப் பல பேச்சுக்கள்.

ஓர் ஆம்புலன்ஸ் வந்து நிற்பது தெரிந்தது. கராஸ் பாதிரியாருடன்பணியாற்றும் டயர்பாதிரியார்ஓடி வந்திருந்தார்.

கராஸை ஆம்புலன்ஸில் ஏற்றினார்கள். டயர் பாதிரியாரும் ஏறிக்கொள்ள முயன்றார். ''வேண்டாம் ஃபாதர். இனி யாரும் எதுவும் செய்ய முடியாது. ஏன் வீணாய் மனசைக் கஷ்டப்படுத்திக் கொள்கிறீர்கள்?'' என்று ஆம்புலன்ஸ் ஊழியர் அவரைத் தடுத்து விட்டார்.

''அம்மா...''

பின்னாலிருந்து ஒரு சின்னக் குரல் கிறிஸ்டியைக் கூப்பிட்டது. கண்ணீர் தோய்ந்த குரல்.

''என்னம்மா ஆச்சு? ப்ளீஸ், இங்கே என்கிட்டே வாம்மா, எனக்குப் பயம்மா இருக்கும்மா. இங்கே வாயேன்-''

கட்டிலை நோக்கி ஓடினாள் அவள். ''ரெஜி! என் கண்ணே! என் செல்லமே! ரெஜி! ரெஜி!'' என்று மகளைக் கட்டிக்கொண்டு மகிழ்ச்சி தாளாமல் விம்மினாள்.

ஜூன் மாதக் கடைசியில் ஒருநாள். கிறிஸ்டி ஊருக்குப் புறப்படும் தினம். பெட்டியில் தன் துணிமணிகளை அடுக்கிக் கொண்டிருந்தாள்.

இரண்டு பாதிரிமார்களும் இறந்துபோய் இப்போது ஆறு வார காலம் ஆகியிருந்தது. அதிர்ச்சிகள் முடிவடைந்து ஆறு வாரம். மெர்ரின் பாதிரியார் இறந்தது இருதய நோயினால் - மாரடைப்பினால் என்று தெரிந்துவிட்டது. ஆனால் கராஸின் மரணம்? கண்ணாடி ஜன்னலை உடைத்துக்கொண்டு வெளியே பாய்ந்து விழுந்து இறந்திருக்கிறார் என்பது மட்டும் தெளிவாய்த் தெரிந்தது. ஆனால் ஏன்? ஏன்? யாருக்கும் தெரியவில்லை.

கிறிஸ்டி மாடிக்குச் சென்று ரெஜினாவின் அறைக்குள் எட்டிப் பார்த்தாள், ரெஜினாவின் கையில் இரண்டு பொம்மைகள் இருந்தன.

''இந்த இரண்டும். பெட்டியில் கொள்ளமாட்டேங்குது அம்மா,'' என்றாள் ரெஜினா.

எல்லாவற்றையும் ஒரே சமயம் எடுத்துப் போகணுமென்றால் முடியாது, ரெஜி. அதை இங்கேயே வைத்திரு. கார்ல் வரும்போது கொண்டு வருவான்,'' என்றாள்

ஊக்கும்,' என்று உதட்டைப் பிதுக்கினாள் குழந்தை.

என் செல்லம், ' என்று கிறிஸ்டி அவளை அணைத்துக் கொண்டாள்.

— நிறைந்தது —





**ரா.கி.ரங்கராஜன்** : 5.10.1927-ல் கும்பகோணத்தில் பிறந்தார் தந்தை மகாமகோபாத்தியாய ஆர்.வி.கிருஷ்மாச்சாரியார், மிகப் பெரிய சமஸ்கிருத வித்வான். ரங்கராஜன், தனது 16வது வயதில் எழுத ஆரம்பித்தார். 1946-ல் ‘சக்தி’ மாத இதழிலும் ‘காலச்சக்கரம்’ என்ற வார இதழிலும் உதவி ஆசிரியராகத் தொடர்ந்தார். 1950-ல் ‘குமுதம்’ நிறுவனம் சிறிது காலம் நடத்திய ‘ஜிங்லி’ என்ற சிறுவர் இதழில் சேர்ந்து, குமுதம் இதழில் 42 ஆண்டு காலம் உதவி ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

இவர் 1500க்கும் மேற்பட்ட சிறுகதைகளும், 50 நாவல்களும், ஏராளமான கட்டுரைகளும், மொழிபெயர்ப்பு நாவல்களும் எழுதியுள்ளார். இவருடைய மூன்று நாவல்கள் திரைப்படமாக வெளிவந்துள்ளன. பல படைப்புக்கள் சின்னத்திரையிலும் இடம் பெற்றுள்ளன. ரங்கராஜன் ‘சூர்யா’, ‘ஹம்ஸா’, ‘கிருஷ்ணகுமார்’, ‘மாலதி’, ‘முள்றி’, ‘அவிட்டம்’ - போன்ற புனைப்பெயர்களில் தரமான சிறுகதைகள், வேடிக்கை நாடகங்கள், துப்பறியும் கதைகள், குறும்புக் கதைகள், மழலைக் கட்டுரைகள், நையாண்டிக் கவிதைகள்-என பலதரப்பட எழுத்துக்களைத் தந்தவர், ஒவ்வொரு புனைப் பெயருக்கும் - நடையிலோ, கருத்திலோ, உருவத்திலோ எதுவம் தொடர்பு இல்லாமல் தனித்தனி மனிதர்போல் எழுதிய மேதாவி. இந்தப் பல்திறமைக்கு ஒரே ஒரு முன்னோடி தான் உள்ளர்;

**- கல்கி**

‘ரங்கராஜன் ஒரு கர்ம யோகி, குமுதம் ஸ்தாபன விசுவாசம், ஆசிரியர் எஸ்.ஏ.பி. மேல் பக்தி, கிடைத்தது போதும் என்கிற திருப்தி, சக எழுத்தாளர்கள் மேல் பொறாமையற்ற பிரிவு, நேசம், வெள்ளைச் சட்டை, வெள்ளை வேட்டி, நண்பர்களைக் கண்டால் கட்டியணைத்து முதுகில் ஒரு ஷொட்டு-இவைதான் இவருடைய சிறப்புகள்’,

**- சுஜாதா**